# ஆன்மீக அலைகள்

"THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF THIRUMALA TIRUPATI DEVASTHA-NAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி.,
(முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்)






செழியன் பதிப்பகம்,
26, சுப்பிரமணியபுரம்,
அரக்கோணம் சாலை,
திருத்தணி - 631 209.
தமிழ்நாடு.

முதல் பதிப்பு : ஏப்ரல், 1999

TITLE OF THE BOOK: **"AANMEEGA ALAIGAL'**

**AUTHOR:** **Dr. S. ULAGANATHAN, M.A., Ph.D.,**
26, SUBRAMANYA PURAM,
ARAKKONAM ROAD,
TIRUTTANI - 631 209.
TAMILNADU. SOUTH INDIA.

## இந்நூலைப் பற்றிய விவரங்கள்

தலைப்பு : 'ஆன்மீக அலைகள்'

பொருள் : ஆன்மீகக் கட்டுரைகள்

ஆசிரியர் : முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி.,

உரிமை : ஆசிரியருக்கே

வெளியீடு : **செழியன் பதிப்பகம்,**
(தொலைபேசி எண்: 86375; **STD Code No.: 04118)**
26, சுப்பிரமணியபுரம், அரக்கோணம் சாலை,
திருத்தணி - 631 209.

விற்பனை உரிமை : **பாரி நிலையம்,**
184, பிரகாசம் சாலை,
சென்னை.

நூல் அளவு : 1/8 'டெமி' அளவு

தாள் : 13.7 கி.கி. வெள்ளைத்தாள்

பக்கங்கள் : xvi + 214 = 230

படிகள் : 1200

விலை : உருபா. 50

PRICE IN USA DOLLAR : **$5**

அச்சகம் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்..,
ஜானி ஜான் கான் தெரு,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

# வாழ்த்துரை

**பேராசிரியர் முனைவர் பொன். சௌரிராசனார்,** எம்.ஏ., பிஎச்.டி.,
**(முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர், திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி)**

**ஆன்மீக அலைகள்'** என்னும் அழகிய தலைப்பில், திருக்குறள், பகவத்கீதை, பரிபாடல், பெரிய புராணம், சிலப்பதிகாரம் முதலிய ஆன்மீகக் கோட்பாடுகள் பொதிந்துள்ள நூல்களை ஆய்ந்து, பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் இயற்றியுள்ள இந்நூல், உயர் ஆன்மீக நெறிகளைக் கொண்ட இலக்கியக் கருவூலம் என்னும் தகுதியைப் பெற்றுள்ளமை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். இந்நூல் வெளியீட்டுக்குத் **திருமலை-திருப்பதி தேவஸ்தானம்** மானியம் வழங்கியுள்ளமை பெருமைக்குரியதாகும்.

ஆன்மீகச் செல்வர்களேயல்லாமல், அறிஞர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள், தமிழ் அறிந்த அன்பர்கள் ஆகிய அனைத்து மக்களும் படித்து ஆன்மீக உணர்வும் இலக்கிய இன்பமும் பெற இந்நூல் உதவும் என்பது தேற்றம்.

இந்நூலாசிரியர் திருத்தணிகைக்கு அருகில் உள்ள **வங்கனூரில்** நற்குடியில் **தேசப்பர் - வள்ளியம்மாள்** என்னும் பெற்றோர்க்கு மூத்த மகனாகப் பிறந்தவர். தமிழ் நாடகத் துறையில் ஈடுபட்டுச் சிறந்த நாடகங்களை இயற்றி இயக்கி அரங்கேற்றிய பெருமைக்கும் உரியவர்.

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் புதினங்கள், நாடகங்கள், சிறுகதைகள், வாழ்க்கை வரலாற்று நூல்கள், ஆன்மீக நூல்கள், ஆய்வு நூல்கள் என இந்நாள்வரை இருபத்தொன்று நூல்கள் இயற்றி வெளியிட்டுள்ள படைப்பிலக்கிய எழுத்தாளராகவும் திரு. செ. உலகநாதன் அவர்கள் விளங்குகிறார்.

இவருடைய 'உலகம் பொல்லாதது', 'யாருக்கு யார் சொந்தம்?', 'கண்ணீர் மேகங்கள்', 'செம்புலப் பெயல்நீர்'

*என்னும் புதினமும் நாடகங்களும் பல பல்கலைக் கழகங்களில் பாட நூல்களாக வைக்கப்பெற்றன.*

*பேராசிரியர் முனைவர்* ***மு. வரதராசனார்*** *அவர்களுடைய நல்மாணவர்களுள் ஒருவராகவும் திகழும் நண்பர் முனைவர்* ***செ. உலகநாதன்*** *அவர்களின் இடைவிடாத தமிழ்த் தொண்டைப் பாராட்டி நீடூழி வாழ்க என வாழ்த்துகிறேன்.*

*14-4-1999,*
*திருப்பதி - 2.*

**பொன். சௌரிராசன்,**
*'நீகரிகா' அடுக்கு மாளிகை,*
*(மகளிர் பல்கலைக்கழகம் அருகில்)*
*திருப்பதி - 2.*
*சித்தூர் மாவட்டம்,*
*ஆந்திர மாநிலம்.*

# பதிப்புரை

செழியன் பதிப்பகம், **'ஆன்மீக அலைகள்'** என்னும் இனிய தலைப்பில், பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் இயற்றிய பயன் நிறைந்த ஆன்மீக நூலை வெளியிடுவதில் பெருமையடைகிறது. இந்நூல் வெளி யீட்டுக்கு நிதியுதவிய திருமலை-திருப்பதி திருக்கோயிலாரை யும் போற்றுகிறோம். முனைவர் செ. உல்கநாதன், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள் தமிழ் நாடகங்கள், புதினங்கள், சிறுகதைகள், ஆய்வு நூல்கள், வாழ்க்கை வரலாற்று நூல்கள் இயற்றுவதில் வல்லவர். **'ஆன்மீக அலைகள்'** என்னும் இந்நூல், **செழியன் பதிப்பகம்** வெளியிடும் அவருடைய முதல் ஆன்மீக நூலா யினும், இதற்கு முன்னர், **முல்லை நிலையத்திற்காக,** 'மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - தெளிவுரை' என்னும் நூலை யும், திருத்தணி **அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்** வெளியீடு களாக, 'திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை', 'திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் - தெளிவுரை', 'தணிகாசல புராணம் - தெளிவுரை' என்னும் பிற ஆன்மீக நூல்களையும் இயற்றி வெளியிட்ட பெருமைக்கும் உரியவராகிறார்.

**'ஆன்மீக அலைகள்'** என்னும் நல் இலக்கிய நூலைச் **செழியன் பதிப்பகம்** வெளியிட உதவிய முனைவர் செ. உலக நாதன் அவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரியது.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய பெருந்தகை படைப் பிலக்கியச் செம்மல் - பேராசிரியர் மு. **வரதராசனார்** அவர்களின் பேரன்பில் திளைத்த சென்னைப் **பச்சையப்பன் கல்லூரி**யில் எம்.ஏ. பயின்றவரும் **திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தில்** தமிழ்த்துறைத் தலைவராக விளங்கித் தமிழுக்கு ஏற்றம் தந்தவரும் ஆகிய **பேராசிரியர் முனைவர் பொன். சௌரிராச னார்,** எம்.ஏ., பிஎச்.டி., அவர்கட்கு எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மற்றும், முகப்பு ஓவியத்திற்கு அழகிய நிழற்படம் எடுத்து

உதவிய **வங்கனூர்** நிழற்படக் கலைஞர் செல்வன் திரு. **செவ்வண்ண சி. தணிகை முருகன்** அவர்கட்கும் **புகழ்மிகு ஓவியர் திரு. ஜமால்** அவர்கட்கும் நன்றியுடையேம்.

இந்நூலின் பெற்றியை உணரும் பான்மையில் இனிய அணிந்துரை வழங்கிய அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி அரசினர் கலைக்கல்லூரியில் தமிழ்த் துறையில் பணியாற்றும் பேராசிரியர் முனைவர் **இரா. சீனிவாசன்,** எம்.ஏ., பிஎச்.டி., அவர்கட்கு எம் நன்றி உரியது.

மிகச்சிறந்த முறையில் எழுத்துப் பிழையின்றிப் பொலிவுடன் **'ஆன்மீக அலைகள்'** நூலை அச்சிட்டு உதவிய **'பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்'** என்னும் அச்சகத்தார்க்கும் அதன் பல்துறை ஊழியர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலின் விற்பனை உரிமையை ஏற்றுள்ள பழம் பெருமை வாய்ந்த **பாரி நிலைய** உரிமையாளர் திருமிகு. **க.அ. செல்லப்பனார்** அவர்கட்கு என்றென்றும் நன்றிக்கடன் பட்டுள்ளோம்.

**'ஆன்மீக அலைகள்'** என்னும் இலக்கிய-ஆன்மீகத் தரம் நிறைந்த இந்நூலினைத் தமிழகமேயல்லாமல், அயல் நாடுகளில் உள்ள ஆன்மீக இலக்கிய ஆர்வலர்களும் படித்து மகிழ்ந்து நற்பயன் துய்ப்பர் என நம்புகிறோம்.

**நம்மை வாழவைக்கும் என்றுமுள தமிழ் அன்னையின் திருவடிகளை வணங்கி இந்நூலினை மகிழ்ச்சியுடன் பாரினில் தவழ விடுகிறோம்.**

*16-4-99,*

திருத்தணி.

அன்புள்ள,

**செழியன் பதிப்பகத்தார்,**

26, சுப்பிரமணியபுரம்,

அரக்கோணம் சாலை,

திருத்தணி - 631 209.

பேராசிரியர் முனைவர் இரா. சீனிவாசன், எம்.ஏ., பிஎச்.டி.,
**அருள்மிகு சுப்பிரமணியசுவாமி அரசினர் கலைக்கல்லூரி,**
**திருத்தணி,**

## அணிந்துரை

பருவ நிலைக்கு ஏற்ப, கடலில் அலைகளின் வேகம் இருக்கும். காற்றின் வேகத்திற்கு ஏற்ப அலைகளின் அளவு இருக்கும். சில வேளைகளில் சிறியவை; சில வேளைகளில் பெரியவை. அளவுபோலவே எண்ணிக்கையும், கூடக்குறைய இருக்கும். ஆன்மீகக் கடலில் அவ்வப்போது வீசிய அலைகள் பற்றி, இந்நூலகத்து, செய்திகள் இடம்பெற்றுள்ளன. நூலுக்கு **'ஆன்மீக அலைகள்'** என்று பெயரிட்டதற்கான காரணத்தை ஆசிரியர் முனைவர் செ. உலகநாதன் அவர்கள் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

''மெய்யுணர்வாகிய ஆன்மீகம் பேரான்மாவை - இறைவனை உணர ஆயும் பேரறிவாகும். 'மெய்யறிவு' எனவும், 'நிலையான அறிவு' எனவும், 'ஆன்ம உணர்வு' எனவும், 'ஆன்மீகம்' என்பதற்குப் பொருள் கொள்ளலாம். ஆன்மா நிலையானது; அதனைப் பற்றிய தேடல்கள் அல்லது அறிய முயலும் முயற்சிகள் தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றன. 'அலைகள்' ஆடாமல் அசையாமல் நகராமல் இருப்பதில்லை; இறைவனை நம்பி, அவன் அருளையும் பாதுகாப்பையும் பெற விரும்பி வணங்குபவர்கள் 'அடியார்கள்' எனவும், 'பக்தர்கள்' எனவும், 'இறையன்பர்கள்' எனவும் குறிக்கப் பெறுவர். இத்தகைய ஆன்ம நேயர்கள் இறைவனை உணர முயலும் முயற்சிக்கு, என்றும் இடைவெளி இருந்ததில்லை; கடல் அலைகளைப் போல் உலகின் பல பகுதிகளில் நாடு, மொழி, இனம், சமயம் கடந்த நிலையில் ஆன்மீக உணர்வு அனைத்து மக்களுக்கும் தொடர்ந்து நிலவி வருகிறது. எனவே, ஆன்மாவை உணரும் முயற்சிகளை **'ஆன்மீக அலைகள்'** என்று குறிப்பிடலாம்.'' *(பக்கம்: 209)*

இந்த விளக்கம், ஆசிரியர் **'ஆன்மீக அலைகள்'** என்று பெயரிட்டதற்கான காரணத்தை விளக்கும் அதே நேரம், ஆசிரியர் இந்த நூலில் விளக்க இருக்கும் பொருள் பற்றியும் மறைமுகமாக எடுத்து இயம்புகிறது.

உலகில் நீண்ட பாரம்பரியமும் பரந்து விரிந்த இலக்கியமும் கொண்ட பெரு மொழிகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு குணாதிசயம் இருக்கும். அவ்வகையில், தமிழ்மொழி **பக்தியின் மொழி** என்று சிறப்பித்து அழைக்கப்படுகிறது. ஏறத்தாழ, சங்க காலத்தின் இறுதிப்பகுதி தொடங்கி இன்றுவரை, தமிழில் இறையுணர்வு ஏதோ ஒரு வகையில் (நேர்முகமாகவோ எதிர் முகமாகவோ) தொடர்ந்து வருகிறது. இன்று பின்னோக்கிப் பார்க்கும் போது - நாம் ஒப்புக்கொள்கிறோமோ இல்லையோ, ஆன்மீகத்தை நீக்கித் தமிழ் இலக்கியங்களை (பெரும்பகுதியும்) எண்ணிப்பார்க்க இயலாது. இலக்கிய வரலாற்றின் பெரும்பகுதி (7 ஆம் நூற்றாண்டு முதல் 14 ஆம் நூற்றாண்டு வரை) தமிழ் இலக்கியம் **பக்தி இலக்கியமாகவே** திகழ்ந்தது. அதிலும் குறிப்பாகப் பல்லவர்கால இலக்கியங்கள் பக்தி இலக்கியம் என்றே பெயர் பெற்றன.

பக்தி இலக்கியம் என்ற தலைப்பில் இருக்கும் இரு பெருந்தொகுதிகள், பன்னிரு திருமுறையும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தமும் ஆகும். இவை இரண்டும் பாடப்பட்ட காலத்திலன்றி, நீண்டகாலம் கழிந்த பின்பே தொகுக்கப்பட்டன. பன்னிரு திருமுறையை எடுத்துக்கொண்டால், அதில் கால வித்தியாசமின்றி, சிவன் பற்றிப் பாடப்பட்ட பாடல்கள் பலவற்றையும் தொகுத்துள்ளார் **நம்பியாண்டார் நம்பி.** உதாரணமாக, **திருஞான சம்பந்தர், திருமூலர், மாணிக்கவாசகர், காரைக்காலம்மையார்** முதலியவர்களின் பாடல்கள் வெவ்வேறு சிந்தனை மட்டத்தில் உள்ளவை. இவற்றுடன் **திருமுருகாற்றுப்படை** (இது முருகனைப் பாடுவது) எந்த வகையிலும் ஒத்துப்போகாது.

எனினும், இவையாவும் **'பன்னிரு திருமுறை'** என்ற ஒரே தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. கருத்து நிலையில் இவை வெவ்வேறு மட்டத்தில் இயங்குபவை என்பதை நினைவில் வைத்தல் வேண்டும். இவற் றில் உள்ள அணுகுமுறைகள் தனித்தனியாகவும் ஒப்பிட்டும் ஆராயப்பட வேண்டும்.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள **கலித்தொகையும் பரிபாடலும்** மற்ற நூல்களைவிட, காலத்தால் பிற்பட்டவை என்பது அறிஞர்களின் துணிபு. இதற்கு அவர்கள் காட்டும் காரணங்களில் இவ்விரு நூல்களிலும் **கடவுள்** பற்றிய செய்திகள் மிகுந்திருப்பதும் ஒரு காரணம் ஆகும். இந்த நூல்கள் தொடங்கி, **பாரதிவரை** உள்ள தமிழ் இலக்கியங்களில் பெரும்பான்மை யானவை ஆன்மீகத் தொடர்புடையவை. **'ஆன்மீக அலைகள்'** என்ற இந்த நூலில் பரிபாடல் தொடங்கிப் பன்னிருதிருமுறையில் உள்ள சில ஆசிரியர்களின் பாடல்களும், **திருக்குறள், கம்ப ராமாயணம், பாரதியார் பாடல்கள்** ஆகியனவும் பற்றிய ஆன் மீகச் சிந்தனைகள் இடம்பெற்றுள்ளன. மேலும், **பகவத்கீதை யும்** இங்கே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

பரிபாடலில் **முருகன், திருமால்** பற்றியுள்ள குறிப்புகள் இங்கே ஊன்றிக் கவனிக்கத்தக்கவை. பெருந்தெய்வ தத்துவம் தோன்றுவதற்கு முன்பு உள்ள காலநிலையை இப்பாடல்கள் காட்டுகின்றன. இக்காலத்தை **'முன்பக்தியுகம்'** என்று வழங்க லாம். இதிலும் **திருமுருகாற்றுப்படையிலும்** இடம்பெற்றுள்ள முருகன் கோயில் பற்றிய செய்திகள் எல்லாம் மதுரையைச் சுற்றியுள்ளவை என்பது ஊன்றி நோக்கத்தக்கது. **திருவாசகம், திருக்குறள், பகவத்கீதை** ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள ஆன்மீகக் கருத்துகள் முக்கியமானவை.

இந்த நூலில் இரண்டு கட்டுரைகள் மிகவும் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவை. அவை, **காரைக்காலம்மையார்,** கம்பர்

பற்றியவை. முதலில் காரைக்காலம்மையார் பாடல்களில் அமைந்துள்ள கருத்துகளை, முக்கியமாக, சிவனது உருவம் பற்றிய கருத்துகளை நோக்குமிடத்து, காரைக்காலம்மையார் காலத்திய சிவன் படிமங்கள் எவ்வாறு இருந்திருக்கக்கூடும் என்று ஊகிக்கப் பெருந்துணை புரிகின்றன.

காலையே போன்றிலங்கும் மேனி, கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு - மாலையின்
தாங்குருவே போலும் சடைக்கற்றை; மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு.

*(பக்கம்: 109)*

என்ற பாடல் அப்பரின் 'குனித்த புருவமும்' என்ற பாடலுடன் ஒப்பு நோக்கத்தக்கது. அப்பரின் பாடல், நடராச வடிவம் நன்கு படிமத்தில் அமைக்கப்பட்ட காலத்தையும், காரைக்காலம்மையார் பாடல், அவ்வடிவம் தோற்றம் கொள்ளும் நிலையையும் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

இரண்டாவதாக, கம்பர் காட்டும் ஆன்மீகம் என்ற கட்டுரையில் வகை மாதிரியாக **'இரணியன் - வதைப்படலம்'** மட்டும் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. கம்பர் காலத்தில் தத்துவங்கள் அனைத்தும் நன்கு வளர்ச்சி பெற்றுவிட்டன. கம்பரும் தத்துவங்களை நன்கு பயின்றவர் என்பது அவரது காப்பியத்தில் பல இடங்களிலும் அறியமுடிகிறது. **சாங்கியம், யோகம்** பற்றி, கம்பர் கூறியுள்ள கருத்துகள் முக்கியமானவை. *(பக்கம்: 126, 129)*

இந்த நூலில் ஆசிரியர் ஆன்மீகக் கருத்துகள் உள்ள முக்கியப் பாடல்களைக் கொடுத்துக் கூடவே அவற்றிற்கு விளக்கமும் அளித்துள்ளார். நூலாசிரியர் ஏற்கெனவே நாடகம், புதினம், சிறுகதை முதலியவற்றை எழுதியவர் என்பது அவரது நடையினால் நன்கு விளங்குகிறது. இந்த நூலிலும் இனிய

எளிய நடையில் கருத்துகள் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. **ஆன்மீகக் கருத்துகளுக்குப் பெருமதிப்பு கொடுக்கும் தமிழ்ச் சமூகம் இந்த நூலையும் வரவேற்கும் என்று நம்பலாம்.**

*14-4-'99,* — முனைவர் இரா. சீனிவாசன்

*தமிழ்ப் புத்தாண்டு நாள்.*

# ஆசிரியர் உரை

**'ஆன்மீக அலைகள்'** என்னும் தலைப்பில் நம் தமிழ் இலக்கியங்கள் சிலவற்றிலிருந்து ஆன்மீகச் செய்திகளை ஆய்ந் தெடுத்துப் பதின்மூன்று தலைப்புகளில் அவ்வப்போது கட்டுரை கள் எழுதி வந்தேன். அவை ஆன்மீக உணர்வாளர்களுக்கும் தமிழிலக்கிய ஆர்வம் உள்ளவர்களுக்கும் பயன்தரும் எனக்கருதி நூலாக வெளியிட விழைந்தேன். அதற்குத் **திருமலை-திருப்பதி திருக்கோயில் நிறுவனம்** இருபது ஆயிரம் உரூபா மானியமாக உதவியுள்ளது. **திருமலை-திருப்பதி திருக்கோயிலாருக்கு** என் இதயங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். மற்றும், **இந்நூலையும் 'உலகத் தொண்டர்'** என்னும் நூலையும் வெளியிடுவதற்குக் **கடன் உதவி வழங்கிய திருத்தணிகைக் கிளை பாரதீய மாநில வங்கியின் மேலாளர் அவர்கட்கும் அலுவலர்கட்கும்** நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

**'ஆன்மீக அலைகள்'** என்னும் இந்நூல் திருக்குறள், பகவத்கீதை, பரிபாடல், திருவாசகம், பெரியபுராணம், கம்ப ராமாயணம், சிலப்பதிகாரம், பாரதியார் கவிதைகள் முதலிய இலக்கியங்களில் காணப்பெறும் அரிய ஆன்மீகக் கோட்பாடு களை உலகுக்கு அறிவிப்பதில் விழுமிய நூலாக விளங்கும் என என் அகமனம் உணர்த்துகிறது.

திருக்குறளுக்கும் பகவத்கீதைக்கும் உள்ள பல ஒற்றுமைக் கூறுகள் விளக்கப்பெற்றுள்ளன. பரிபாடலில் இடம்பெறும் செவ்வேளாகிய முருகனைப் பற்றிய அரிய செய்திகளும் திருமாலைப் பற்றிய இறைமைச் செய்திகளும் தமிழ் மக்களின் கடவுள் நெறி சங்க காலத்தில் எத்தகைய உயரிய நிலையில் இருந்தது என்னும் உண்மையை வெளிப்படுத்துகின்றன.

கம்பர் தம் இராமகாதையில் யுத்த காண்டத்தின் இரணி யன் வதைப்படலத்தில் உணர்த்தியுள்ள கடவுட் கோட்பாடுகள் முதிர்ந்த இறைமைக் கருத்துகளாக மிளிர்கின்றன.

நக்கீர தேவநாயனாரும் சேக்கிழாரும் கண்ணப்பநாய னாரின்பால் எத்தகைய ஆழ்ந்த பேரன்பு கொண்டிருந்தனர்

என்பதனை அவர்களுடைய நூல்கள் வாயிலாக உணரமுடிகிறது. திண்ணன் என்னும் வேட்டுவன் கண்ணப்பநாயனராக உயர்ந்த தற்குக் காளத்தியப்பரின் கண் பழுதுற்றது எனக்கருதித் தம் கண்ணொன்றை அம்பினால் தோண்டி எடுத்துப் பழுதுற்ற இறை வன் கண்ணுக்கு மாற்றுக் கண்ணாக அப்பிய தியாகச் செயல் உலக இலக்கியங்களுள் எங்கும் காணமுடியாத அரிய செயலாகும்.

காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், இளங்கோவடிகள், பாரதியார் ஆகிய சான்றோர்கள் உலகுக்கு உணர்த்திய ஆன்மீக நெறிகள் என்றென்றும் போற்றிப் பின்பற்றி நடப்பதற்குரியவை. கடவுள்நெறி உலகத்து உயிர்கள் உய்யும் நெறியாக விளங்குவதனை, **'ஆன்மீக அலைகள்'** என்னும் என் நூல் தெளிவாக விளக்கும் என்பது திண்ணம்.

இந்நூலின் விற்பனை உரிமை ஏற்றுள்ள **பாரி நிலை யத்திற்கு** என் நன்றி உரியது.

வாழ்த்துரை வழங்கிய பெருந்தகை என் இனிய நண்பர் பேராசிரியர் முனைவர் **பொன். சௌரிராசனார்,** எம்.ஏ., பிஎச்.டி. அவர்கட்கு என்றென்றும் நன்றியுடையவனாக இருப்பேன்.

அணிந்துரை வழங்கிய என் அன்பு மாணவர் **முனைவர் இரா. சீனிவாசன்,** எம்.ஏ., பிஎச்.டி., அவர்கட்கு என் நன்றி உரியது.

ஓவியத்திற்கு அழகிய எழுத்துக்கள் வரைந்த **ஓவியர் திரு. ஜமால்** அவர்கட்கும் முகப்பு நிழற்படம் வழங்கிய நிழற்படக் கலைஞர், என் தம்பி மகன் **திரு. செவ்வண்ண சி. தணிகை முருகனுக்கும்** என் பாராட்டுக்கள் உரியன.

வனப்புடன் செம்மையாக அச்சிட்ட **'பாவை பிரிண் டர்ஸ் (பி) லிட்.,'** அச்சகத்தார் பாராட்டுக்குரியோர் ஆவர்.

என் நூலைத் தமிழன்பர்கள் படித்துப் பயன்பெறுவர் என நம்புகிறேன்.

*12.4.1999*

திருத்தணி

அன்புள்ள,

**செ. உலகநாதன்**

# பொருளடக்கம்

# ஆன்மீக அலைகள்

முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பிஎச்.டி.,
26, சுப்பிரமணியபுரம், அரக்கோணம் சாலை,
திருத்தணி - 631 209.

## 1. திருக்குறளில் ஆன்மீகச் செய்திகள்

'ஆன்மா' என்பது உயிர்; 'பசு' என்பதும் உயிரையே குறிக்கிறது. 'ஆன்மீகம்' என்பதில் இடம்பெறும் 'இகம்' என்னும் சொல்லுக்கு 'உலகம்' என்பதும் 'இம்மை' என்பதும் பொருள் களாகின்றன. 'உலகம்' என்பது நாம் வாழும் இந்நில உலகம்; 'இம்மை' என்பது இப்பிறவியைக் குறிக்கிறது. இவ்வுலகத்து வாழும் உயிரின் நிலையை 'ஆன்மீகம்' பொருளாகக் கொண் டுள்ளது.

ஆன்மாக்களைப் பற்றி விளக்கிக் கூற முற்பட்ட திருவள்ளுவனார், 'உலகு' என்னும் சொல்லால் உலகத்து உயிர் களைச் சுட்டியுள்ளார். உலகத்து உயிர்கள் அனைத்துக்கும் அடிப் படையாக அமைவது இறைமை. இறைமையே 'ஆதிபகவன்' எனப்பெறுகிறது. உலகத்தில் நிலவும் எம்மொழிக்கும் அகரம் அடிப்படையாக இருப்பதுபோல எல்லா உயிர்களுக்கும் அடிப்படையாக ஆண்டவன் திகழ்கிறான்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்னும் முதற்குறள் ஆண்டவனை அடிப்படையாகச் சார்ந்துள்ள உயிர்களின் தோற்றத்தை, 'எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் அடிப்படை' என்னும் உவமை வாயிலாக விளக்குகிறது.

எழுத்துக்கள் அனைத்திலும் அகரம் ஒன்றியுள்ளது. 'க்+அ=க, ங்+அ=ங, ச்+அ=ச' என அனைத்து எழுத்துக்களிலும் அகரம் நுட்பமாக ஒன்றியிருப்பதனை அறியலாம்.

நம் தமிழில் அமைந்துள்ள முதல் எழுத்தாகிய 'அ' ஓங்கார வடிவமாக விளங்குகிறது; இது பிரணவம் என்னும் தன்மையது. 'ஓம்' என்னும் பிரணவத்தின் ஒலி, அ, உ, ம் என்னும் மூன்றெழுத்துக்களை ஒருங்கே கொண்டது. இந்த உண்மையைச் சிவவாக்கியர்,

'அகார காரணத்துளே அடங்கி நின்ற வையகம்
உகார காரணத்துளே ஒடுங்கி நின்ற வையகம்
மகார காரணத்துளே மயங்கி நின்ற வையகம்'

என விளக்கியுள்ளார்.

'அ' என்னும் எழுத்தின் வடிவ அமைப்பைச் சிறப்புற முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் விளக்கியுள்ளார். '''அ' எழுத்தைச் சரிபாதியாக வெட்டுங்கள். மேற்பாதி 'வ' ஆகவும் கீழ்ப்பாதி 'எ' தலைகீழாகவும் காணப்படும். மேல் பாதி வ-வை வலது கோடியில் வெட்டினால் உ என்றும் | என்றும் காணப்படும். இம்மூன்றும் அ, உ, ம என்றாகி 'ஓம்' ஒலியை ஒலிப்பதைக் கண்டு மகிழுங்கள். இதைக் காணும் பொழுது 'அகர முதல ஒலி எல்லாம்' என்று கருத வேண்டியிருக்கிறது'' என்று அரிய விளக்கம் அளித்துள்ளார் விசுவநாதம் அவர்கள்.

உலகம் இறைவனை அடிப்படையாகக் கொண்டுள்ளது; உயிர்கள் அவனைச் சார்ந்துள்ளன. 'ஆன்மா' என்பது இறைவனால் ஆனது என்பதும் இறைவனைச் சார்ந்து தொடர்ந்து இவ்வுலகில் நிலவுவது எனவும் அறியலாம். இறைவனை அடிப்படையாகக் கொண்ட ஆன்மாக்களுக்கும் அழிவில்லை என்பதையும் அவை பல உயிரினங்களாகப் பிறவிகள் கொள்வன என்பதனையும் உய்த்துணரலாம்.

உயிர்கள் இறைவனால் உருவானவை என்பதனால், அவனுக்கு நன்றி செலுத்தும் பான்மையில் தூய அறிவு வடிவமாக விளங்கும் அவனது நல்ல திருவடிகளைத் தொழுவதே கற்ற அறிவினால் ஆகிய பயன் என்பது வள்ளுவருடைய ஆன்மீகக் கோட்பாடுகளுள் ஒன்று.

எனவே,

"கற்றதனால் ஆய பயனென்கொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என இரண்டாம் குறளை அமைத்துள்ளார்.

இறைவனுடைய திருவடிகளைத் தொழுவதனால் பிறவி அறும் என்பது பரிமேலழகரின் விளக்கம்.

இறைவனைப் பற்றிய ஆன்மீக உணர்வின் இன்றியமையாத பண்புகளுள் ஒன்று விருப்பும் வெறுப்பும் அற்ற தன்மை. இது பற்றற்றவர்களுக்கே இயலக் கூடியது. இறைவன் பற்றற்றவன் என்பதனால், அவனுடைய திருவடிகளைப் பொருந்தியவர்களுக்கு எப்போதும் துன்பம் இல்லை.

"வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல". (குறள் எண்: 4)

என்பது, வள்ளுவர் எப்போதும் துன்பம் இல்லாமல் இருப்பதற்கு உணர்த்திய உண்மை.

ஆசையினால் துன்பம் வரும் என்பது புத்தபிரான் உணர்த்திய அறவுரையுமாகும். வள்ளுவனார் இந்தப் பேருண்மையைத் தம் ஆன்மீக உணர்வாகக் கொண்டிருந்தவர்; அதனால்தான், விருப்பு வெறுப்பு நீங்கிய பற்றற்ற தன்மையைத் 'துறவு' அதிகாரத்திலும் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" (குறள் எண்: 350)

என்று, 'வேண்டுதல் வேண்டாமை இலான்' ஆகிய இறைவனை உள்ளத்தால் பற்றும் பற்றைத்தான், 'அப்பற்றை' என்று குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். ஆசைகளைத் துறந்து இறைவன்பால் பற்று வைக்கும் அப்பற்றினால், வேண்டியவர், வேண்டாதவர், வேண்டியது, வேண்டாதது என்னும் விருப்பு வெறுப்புக்கள் அறவே நீங்கும்; உலகத் தொடர்புகளை வெறுத்து ஒதுக்கும்

ஆசையற்ற தன்மை இறைவனைத் தொழுவதற்கும் பேரின்பம் அடைவதற்கும் தேவை. வீடுபேற்றுக்குப் பற்றின்மை தேவை என்பது ஆன்மீக மெய்யறிவாளர் கருத்தாகும்.

''யான் எனது என்னும் செறுக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்'' *(குறள் எண்: 346)*

என்னும் குறளும், ''பற்றற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்'' என்னும் குறள் தொடரும்,

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'' *(குறள் எண்: 741)*

என்னும் குறளும் பற்றற்ற உயரிய கடவுள்தன்மையை நன்கு விளக்குகின்றன.

''ஐந்து புலன்களையும் கெடுத்தல் வேண்டும்; கண், செவி, நா, மூக்கு, மெய் ஆகிய ஐம்பொறிகளால் நுகரப்பெறும் காட்சி, ஒலி, சுவை, உயிர்த்தல், உற்றறிதல் ஆகிய நுகர்ச்சிக்குரிய பொருள்களையும் நுகராமல் விடுதல் வேண்டும்'' என்னும் பொருளில் புலன் ஒடுக்கம் பற்றிய குறள் ஆன்ம உணர்வுபெற முயல்வோர்க்குச் சிறந்த வழிகாட்டியாக அமைகிறது.

தவம் செய்வார்க்குத் தமக்கென ஒரு பொருளும் கொள்ளாமையாகிய இல்லாமை (இன்மை) இயல்பாகும்; பொருளுடைமை (உடைமை) தவத்தைப் போக்கி மயக்கும்.

'எனது' என ஆசையுட்பட்டுப் பொருள்களைச் சேர்க்கும் உடைமையாசை இறைவனையடையும் ஆன்மீக நெறிக்கு எதிரானது ஆகும்.

''இயல்பு ஆகும் நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை
மயல்ஆகும் மற்றும் பெயர்த்து'' *(குறள் எண்: 344)*

என்னும் குறள் தவம் மேற்கொள்ளும் பற்றற்ற துறவிகட்கு வழிகாட்டுகிறது.

ஆசையிலாத பற்றறுப்பால் பிறப்பு அறுகிறது என்பது வள்ளுவர் நெறி; அத்தகைய ஆசையற்றார்க்கு அவர்களுடைய உடம்பே அவர்கட்கு மிகையாகிறது. அவ்வாறு இருக்க, "உடம்பின் தொடர்பு எதற்கு?" என்றும் வள்ளுவர் வினவுகிறார். உடம்பின்மேல் கொண்ட பற்றினால்தான் பல பொருள்களைச் சேர்க்க ஆசைப்படுகிறோம்; இது திருமூலருடைய கருத்துக்கு முரண்பட்டதாகத் தோன்றுகிறது.

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

என்பது திருமூலர் வாக்கு.

இறைவனைக் காணமுடியாது; ஆயின், இறைமையை உணர முடியும். எல்லாப் பொருள்களிலும் உயிர்களிலும் இறைமை நீக்கமற நிறைந்துள்ளது. அது மலருள் நறுமணமாக உறைகிறது. திருவள்ளுவர் இந்த ஆன்மீக அறிவால்,

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள் எண்: 3)

என்னும் குறளுள், 'மலர்மிசை ஏகினான்' எனக் குறிப்பிடுகிறார். மலரைத்தான் காணமுடியும்; மலரின் மணத்தைக் காண இயலாது; மூக்கினால் நுகர்ந்து உணர முடியும். அதுபோல, இறைவனும் மலர்போன்ற எல்லா உயிர்களிலும் மணம் போன்று ஒன்றியுள்ளான்.

இந்த உண்மையைப் பரிபாடலும், "பூவினுள் நாற்றம் நீ" என உணர்த்துகிறது.

"மலர்மிசை ஏகினான்" என்னும் குறள் தொடருக்கு "மலர்மீது சென்றவன்" எனப் பொருள் கொள்ளாமல், "மலரின் மீது மணமாகப் பொருந்தியவன்" எனப் பொருள் கொள்வதே சரியாகும்.

இறைவன் விருப்பும் வெறுப்பும் அற்றவன். ஏனெனில், எல்லா உயிர்களும் சமமானவை; அவை அனைத்துமே ஒட்டுமொத்தமாக இறைவனின் பல்வேறு வடிவங்கள் என உய்த்து

உணர வேண்டும். பல உயிர்கள் நிலவினாலும், அவற்றின் பிறப்பு ஒத்திருக்கின்றது. இந்த அடிப்படை உண்மையை உணர்த்த வள்ளுவர்,

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்" *(குறள் எண்: 972)*

என்றார்.

உயிர்கள் உடலெடுத்துப் பிறக்கு முன்னர் வேற்றுமை யற்றவை; இவ்வுலகில் பிறந்த பிறகே செய்கின்ற தொழில்கள் காரணமாக வேறுபடுகின்றன. எல்லா உயிர்களின் பிறப்பும் ஒரே தன்மையுடையது என்பதனால், இறைவனிடம் விருப்பும் வெறுப்பும் இல்லை.

விருப்பும் வெறுப்பும் அற்ற பற்றற்ற தன்மை இறைமைப் பண்புகளுள் ஒன்று. அதனால் நடுவுநிலைமை நிலவுகிறது. நடுவுநிலைமை உள்ளம் விருப்பும் வெறுப்பும் அற்ற இறைவன் உள்ளமாகிறது. பற்றற்ற நடுவுநிலைமையாளர்க்கு எப்போதும் துன்பம் இல்லை; பேரின்பமே கிட்டும் என்னும் உண்மையை அறியலாம்.

இறைவனுடைய பொருள்பொதிந்த புகழுக்குரிய செயல் களைச் செய்வார்க்கு அறியாமையாகிய பெரிய தீவினை வந்து சேராது; புகழுக்குரியவை தீமை இல்லாத நன்மையாகிய நல்லறச் செயல்களே. நல்லறச் செயல்களைச் செய்யாதவர்கள் அறியாமை யுடையவர்கள்; அறியாமையைத்தான், 'இருள்' என வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

இறைவனாகிய மெய்ப்பொருளைச் சேர்ந்தவர்கள் நன்மையே செய்பவர்கள்; நல்வினை, தீவினை ஆகிய இரு வினைகள் அவர்களிடம் பொருந்துவதில்லை; புகழுக்குரிய அறியாமையற்ற நல்வினை மட்டுமே சேரும் என உணர வேண்டும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி

களின் வாயில்களாகிய, மெய்தொட்டுணரல், சுவையுணர்தல், காண்டல், நுகர்தல், கேட்டறிதல் ஆகிய ஐம்புலன் உணர்வு களைத் தீமையில் செல்லாதவாறு நன்னெறியில் அடக்கத்துடன் பக்குவமாகப் பயன்படுத்தும் பண்பையே 'அவித்தல்' என்பதன் பொருளாகக் கொள்ளலாம்; ஐம்பொறி உணர்வுகளை அவித் தோர் ஒழுக்க நெறியில் நிலைத்து நிற்கும் மெய்யறிவாளர்கள் ஆவர்; அவர்கள் புகழுடம்பால் நீடுவாழ்வர். இறைவனுக்கு அழிவில்லாததுபோல அவன் பண்பாகிய ஐம்பொறி அவித்த பண்புள்ளோர் இறைவனைப் போல் புகழுடன் நிலைத்த பெருவாழ்வு வாழ்வர்.

ஐம்பொறிகளை அவித்த பிறகே உண்மையான ஒழுக்க நெறி அமையும். ஐம்பொறிகளை அவிக்காதவர்கள் ஐம்பொறி களின் உந்துதலால் தீயநெறியில் உணர்ச்சிவயப்பட்டு நெறி தவற நேரும். இந்தப் பொய் நீங்கிய ஒழுக்கநெறி இறைவனுக்குரியது.

''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது'' (குறள் எண்: 7)

என்னும் குறள் மூலம் துறவறநெறி நிற்போர் ஐம்பொறிகளை அவித்த பிறகே துறவற நெறியாகிய ஒழுக்க நெறியில் நிற்க வேண்டும். இல்லாவிடில் போலித்துறவிகளாகிப் பொய்யாக வாழ்ந்து சிற்றின்பத்தில் மூழ்கிப் புகழ்கெட்டுத் துன்புற நேரும்.

இறைவன் பிறப்பும் மூப்பும் இறப்பும் அற்றவன். எனவே, தோன்றி மறைகிற எப்பொருளுக்கும் இணையாக இறைவனை ஒப்பிட முடியாது. இந்த ஒப்பற்ற இறைவனுடைய இயல்பை வள்ளுவர், 'தனக்குவமை இல்லாதான்' என உணர்த்து கிறார்.

இறைவன் அறக்கடலாக விளங்குபவன்; கடலுள் பல உயிரினங்கள் வாழ்கின்றன; கடல் வற்றாமல் நிலைத்து நின்றுப் பல உயிரினங்களின் தோற்றத்திற்கும் வாழ்விற்கும் உறுதுணை யாக உள்ளது. குளங்கள், குட்டைகள், ஏரிகள், ஆறுகள் ஆகிய அனைத்தும் மழைபெய்து நீர்வருவாய் இல்லையெனில் வற்றும். ஆயின், எவ்வளவு வெய்யில் காய்ந்தாலும் கடல்நீர்

வற்றுவது இல்லை; கடல்நீர் ஆவியாகி மேகமாகி மழையாகப் பொழிந்து மீண்டும் கடலுக்கே சென்றடைகிறது. கடலைத் தாண்டி, வெம்மையால் ஆவியாகிய கடல்நீர் நிலத்துவாழ் உயிரினங்களுக்கும் வாழ்வளிக்க வல்லது. உயிர்களைக் காக்கும் அறச்செயலைக் கொண்டது கடல்; அந்த அறக்கடலும் இறைவன் அங்கமே. எனவே, ‘அறஆழி’ என்றார் வள்ளுவர். ‘அந்தணர்’ என்னும் சொல், ‘அழகிய தன்மையுடையார்’ என்னும் பொருளைக் கொண்டது. எல்லா உயிர்களிடத்தும் செம்மையான அருள்தன்மையைக் கொண்டவர்கள் ‘அந்தணர்’ என்போர். இறைவன் எல்லா உயிர்களிடத்தும் அருள் கொண்டவன்; அதனால் அவன் ‘அந்தணன்’ ஆகிறான்.

‘எண் குணத்தான்’ என இறைவனை வள்ளுவர் குறிப்பிடுகிறார். அவை:

1. தன் வயத்தன் ஆதல்
2. தூய உடம்பினன் ஆதல்
3. இயற்கை உணர்வினன் ஆதல்
4. முற்றும் உணர்தல்
5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
6. பேரருள் உடைமை
7. முடிவு இல் ஆற்றல் உடைமை.
8. வரம்பு இல் இன்பம் உடைமை

இவ் எட்டுக் குணங்களும் ஒருங்கே கொண்டவன் இறைவன்.

பிறப்புக்கு ‘அறியாமை’ என்னும் பொருளில் ‘பேதைமை’ என்னும் பெயரைச் சூட்டியுள்ளார் வள்ளுவர்; இந்த அறியாமையாகிய பிறவி நீங்குதற்குச் செம்பொருளாகிய இறைவனை அறிவது அறிவாகும்.

‘‘வேண்டாமை வேண்டப் பிறவாமை வரும்’ என்பது வள்ளுவரின் கோட்பாடு: ‘வேண்டாமை’ என்பது ‘உலகப் பொருளை விரும்பாமை’ என்னும் ஆசையின்மையைக்

குறிக்கிறது. ஆகையால்தான் பிறவியும் வருகிறது; துன்பமும் வருகிறது.

'வான்சிறப்பு' என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் ஆன்மீகச் செய்திகளைத் தெரிவித்துள்ளார்.

இறைவனுக்குப் பூசனை செய்தல், தவம் ஆகிய இரு ஆன்மீகச் செயல்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

மழை பொழியாமல் நிலம் வறட்சியுற்றால் உழவும் இல்லை; உழவின்றேல் உணவில்லை; இறைவழிபாட்டிற்கு வேண்டிய பூசனைப் பொருள்களும் கிடைக்க மாட்டா; வறுமையில் துன்புறுவோர் சிறப்பான வழிபாடு இறைவனுக்கு நிகழ்த்த மாட்டார்கள். வளமான வாழ்வில் மகிழ்ச்சி இருக்கும்; மகிழ்ச்சிக்குக் காரணமாகிய மழை பொழியச் செய்யும் இறை யருளால் சிறப்பான பூசனைகள் நிகழ்கின்றன.

உணவு இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் இன்றி யமையாதது. எல்லாப் புறப்பொருள்களையும் துறந்த துறவி யாயினும் உயிர்வாழ்வதற்குரிய அளவுக்கு உணவு அவருக்குத் தேவைப்படுகிறது; பசியுடையார் தவம் செய்ய இயலாது. மேலும், மழை இன்மையால் விளைச்சல் இன்றித் துன்புறும் இல்லறத்தார் துறவிகட்கு உணவளிக்க முடியாதவர்கள். எனவே, பசியின் காரணமாகவும் உணவு கொடுத்து உதவுவார் இல்லாமை யாலும் தவச்செயல் புறக்கணிக்கப்பட்டு நீங்கும். அதனால்தான், 'வான்' என்னும் மழையை 'மாரியன்னை''-'மாரியம்மை' எனப் பெண்பாற் கடவுளாக மக்கள் வழிபடுகின்றனர்.

மேலும், ''தெய்வத்தைத் தொழாமல், கணவனைத் தொழுது எழுகின்ற மனைவி ''பெய்'' எனக் கட்டளை இட்டால் மழை பெய்யும் என்னும் பொருளில் அமைந்த திருக்குறள் உலகியலுக்குப் பொருந்தாததாகத் தோன்றினாலும், 'கண வனைக் கடவுளாகத் தொழவேண்டும்'' என்னும் கோட் பாட்டைக் கொண்டுள்ளது.

நல்ல கணவன் இல்லறம் நடக்க உழைத்து ஊதியம் தேடித் தருபவன். ''வினையே ஆடவர்க்கு உயிர்'' என்று நம் சங்கச் சான்றோர் கூறியுள்ளனர். அத்தகைய நல்ல கணவன், மனைவிக்குக் கடவுளாகிறான்; அதனால்தான் அவனைத் தொழவேண்டும் என்று கொள்ள வேண்டும். இவ்வாறு, கணவனுக்குத் தொண்டு புரியும் சிறந்த கடமையுணர்வு மிக்க பத்தினிப் பெண்டிர் எது சொன்னாலும் உலகத்தவர் மதித்து ஏற்பர்; வள்ளுவர் ஒருபடி அவர்களை உயர்த்திக் குறிப்பிட விரும்பியே ''பத்தினிப் பெண் சொன்னால், மழையும் அவள் சொல்லுக்குக் கட்டுப்பட்டுப் பொழியும்'' என்னும் பொருளில்,

''தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'' *(குறள். 55)*

என்றார். பத்தினிப் பெண்கள் வழிபடுதற்குரியவர்கள் என்பதால் கண்ணகி முதலிய பத்தினிப் பெண்டிரை வணங்குதற்குத் தான், 'மாரியன்னை' வழிபாடு தோன்றியிருத்தல் வேண்டும்.

இந்திரனைப் பற்றிய செய்தி ஒரு குறளில் காணப் படுகிறது.

''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி'' *(குறள்: 25)*

என்னும் குறளில், அகன்ற வானுலகமாகிய தேவர் உலகில் வாழும் தேவர்க்குரிய அரசன் இந்திரன் ஐம்புலன் உணர்வுகளை அவித்த ஆற்றல் காரணமாக அப்பதவியைப் பெற்றவன் என்பது புராணச் செய்தி. உலகில் வழங்கிய அந்தச் செய்தியையே வள்ளுவர் தம் குறள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

இந்திர பதவி ஐம்பொறிகளை அவித்து வரும் தவத்தால் இயலுவது என்பதும், ஐம்பொறிகளை அடக்காமையால் இந்திர பதவியை இழக்க நேரும் என்பதும் புராணக் கருத்து. புலனடக்கம் பற்றி விளக்குதற்குப் புராணக் கருத்தை எடுத்துக்காட்டாக வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார் என அறிய முடிகிறது.

'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்துள், இல்லறம் மேற்கொண்டவர்கள், 'தென்புலத்தார்' என்னும் மறைந்த முன்னோருக்கும், தெய்வத்திற்கும், விருந்தினருக்கும், உறவினர்க்கும், தங்களுக்கும் வேண்டிய உதவிகளைச் செய்தல் வேண்டும். இது தலையாய அறமாகச் சொல்லப்பட்டுள்ளது. மறைந்த முன்னோர்களுக்குரிய சடங்குகள் நிகழ்த்தி வழிபடுதல் இன்றும் உள்ள நெறி; கடவுளுக்கும் பல சடங்குகள் இயற்றி வழிபாடு செய்து போற்றுகின்றனர்.

முன்னோர்க்குச் சடங்கு இயற்றிப் போற்றிப் பேணுதலும் தெய்வத் தொண்டும் வள்ளுவர் போற்றிய, இல்லறத்தார்க்குரிய தலைமையான அறநெறிகளாகின்றன.

''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை'' *(குறள்: 43)*

என்னும் குறள் ஆன்மீகம் தழுவியதாக உள்ளது.

இந்த உலகத்தில் வாழும் காலத்தில் ஒருவன் அறநெறி போற்றி வாழவேண்டிய நெறியில் வாழ்தல் வேண்டும். அவ்வாறு வாழ்ந்தால் வானுலகில் உறையும் தெய்வத்துக்கு ஈடாகக் கருதப் பெறுவான். அறநெறியுடன் திகழ்பவர்கள் கடவுளர்கள்; மனிதராகப் பிறந்து வாழவேண்டிய அறநெறியுடன் வாழ்ந்து தெய்வமாக உயர முடியும் என்னும் உயரிய ஆன்மீக நெறியை,

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்'' *(குறள்: 50)*

என்னும் குறள் விளக்குகிறது.

'வாழ்க்கைத் துணை நலம்' என்னும் அதிகாரத்துள், ''புத்தேளிர் வாழும் உலகு'' (குறள்: 58) எனத் தேவர்கள் வாழும் உலகத்தைப் பற்றி வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

'விருந்தோம்பல்' என்னும் அதிகாரத்துள் ஒரு குறளில், தேவர் உணவாகிய அமிழ்தத்தைச் 'சாவா மருந்து' எனக்

குறிப் பிட்டுள்ளார். (குறள்: 82) திருமகளைச் 'செய்யாள்' எனக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். (குறள்: 84)

விருந்தோம்பும் பண்புள்ளவன் தேவர் உலகினர்க்கு விருந்தினன் ஆவான் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

'அமரர்', 'ஆரிருள்' என்னும் சொற்கள் முறையே தேவர்களையும் நரகத்தையும் குறிப்பிடுகின்றன. இச்சொற்கள் கொண்ட குறள்,

''அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (குறள்: 121)

என்பதாகும்.

'மேலுலகம், ''விண்ணுலகம்'', ''சொர்க்கம்'' என்னும் பொருள்களில் அமைந்துள்ளது.

''பிச்சையெடுப்பது நல்ல நெறி என்றாலும் அது தீமை யானது; 'மேலுலகம்' என்னும் 'சுவர்க்கம்' கிட்டாது என்றாலும் பிறருக்கு ஈதலே நல்லறம்'' என்னும் பொருளில்,

''நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று'' (குறள்: 222)

என்னும் குறள் அமைந்துள்ளது.

''புத்தேள் உலகு'' எனத் தேவருலகை வள்ளுவர் தெரிவித்துள்ளார். (குறள்: 234)

இந்த உலகில் நீண்ட புகழுக்குரிய அறச்செயல்களைச் செய்தால், வானுலகு தேவர்களைப் போற்றாது. எனவே, உலகத்து மக்கள் அறநெறியினால், தேவருலகால் போற்றப் பெறுவர் என்பது உய்த்துணர வேண்டிய செய்தியாகிறது.

அருள் தன்மை இல்லாதவர்களுக்கு வானுலக வாழ்க்கை இல்லை எனவும், பொருளற்றார்க்கு இவ்வுலக வாழ்க்கை

இல்லாமல் போகும் என்றும் கூறுவதன் வாயிலாக, ஆன்மீக உணர்விற்கு அருள்நெறி சீரிய நெறியாக வள்ளுவரால் போற்றி உணர்த்தப் பெற்றுள்ளது.

எல்லா உயிர்களிடத்தும் இறைவன் உறைவதால், உயிரினங்களைக் கொல்லுதல் கூடாது என்பது வள்ளுவர் கோட்பாடு. ''அவிப்பொருள்களைச் சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வதனைவிட ஒன்றனுடைய உயிரை அழித்து அதன், ஊனை உண்ணாமை அறமாகும்'' என வள்ளுவர் வேள்விகளைவிட மிகவும் சிறந்தது உயிர்களுக்கு வாழ அருள்செய்வது தான் என்று புலப்படுத்தியுள்ளார்.

வேள்விகளில் உயிரினங்களைப் பலியிட்டதனால், வள்ளுவர் உயிர் இரக்கம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

''வாடிய பயிரைக் கண்டு நான் வாடினேன்'' என்னும் வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

ஆன்மீகச் செய்திகள் 'தவம்' என்னும் அதிகாரத்துள் காணப்பெறுகின்றன.

தான் அடைந்த துன்பங்களைத் தாங்கிக் கொண்டும் உயிரினங்களுக்குத் துன்பம் செய்யாமலும் இருத்தலே தவத்திற்கு வடிவம் என்னும் செய்தி; எந்த உயிர்க்கும் துன்பம் செய்யாதவர் தவம் செய்யும் துறவிகளுக்கு ஈடானவர் என்னும் உயர்ந்த கோட்பாட்டைத் தெரிவிக்கிறது.

தவமுனிவர் என்பதற்கு வடிவமாக நீண்ட சடைமுடி தரித்துக் காட்டில் தவம் செய்து வாழ்தல் மட்டுமே போதியதன்று. உயிரினங்களிடத்து அருள்கொண்டு, துன்பம் செய்யாமையே தவவடிவம் என்பது உயரிய ஆன்மீக நெறியாகிறது.

கூற்றுவனை வெல்ல முடியும் என்னும் கருத்தில் குறள் ஒன்று அமைந்துள்ளது. தவவலிமை மிக்கவர்க்குக் கூற்றுவனை

வெல்லுதல் இயலும் என்பது வள்ளுவர் கருத்து. தவத்தால் சாவையும் தடுக்க முடியும் எனத் தவத்தின் சிறப்பைப் புலப் படுத்துவது குறள்.

''உலகத்தார் பழிக்கும் தீய செயல்களை விட்டொழித் தாலே போதும்; தலைமுடியை மழித்தலும் சடைமுடியை வளர்த்தலும் தேவையற்றவை'' என்பது வள்ளுவர் நெறி. (குறள்: 280)

''பிறர் உழைத்து ஈட்டிய பொருள்களைக் கவரும் கள்வர் களுக்கு எப்போது வேண்டுமாயினும் உயிர் நீங்கும்; ஆயின், பிறர் பொருளைக் கவராதவர்களுக்கு வானவர் உலகு பொருந்துதல் நீங்காது'' (குறள். 290) திருடாதவர்களைத் தேவர்களுக்கு ஒப்பான வர்கள் என வள்ளுவர் போற்றுகின்றார்.

வள்ளுவர் மனத்தோடு பொருந்திய வாய்மையைத் தவம், ஈகை ஆகிய இரு அறநிலைகளைவிட உயர்ந்ததாகப் போற்றியுள்ளார்.

''மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ் செய்வாரின் தலை'' (குறள். 295)

கூற்றுவன் பற்றி வள்ளுவர் சில குறட்பாக்களில் குறிப்பிட் டுள்ளார். கொல்லாமை அதிகாரத்துள், ''கொல்லாமையை மேற் கொண்டு ஒழுகுபவன் வாழ்நாளின் மேல் உயிரை உண்ணும் கூற்று செல்லாது என்கிறார். (குறள்: 326)

வள்ளுவர் நம் வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை நிலையாமை அதிகாரத்தில் விளக்கியுள்ளார். உடம்போடு உயி ரிடையே உள்ள நட்பு நிலையற்றது. இதற்குக் குஞ்சு பொரித்துக் குடம்பை தனியே நீங்கப் பறவை பறந்தமையை உவமையாகக் கூறியுள்ளார். 'குடம்பை' என்பது, 'குடம்போன்று' அமைந்த முட்டை ஓடாகிய பை' என்னும் பொருளினது எனலாம். குடம்பை நம் உடலுக்கு எடுத்துக்காட்டு; பறவை உயிருக்கு எடுத்துக்காட்டு.

'குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு' (குறள்: 338)

இன்னொரு குறளில் நிலையாமையை விளக்குதற்கு, உறக்கத்தைச் சாவாகிய சாக்காட்டிற்கும் உறக்கத்தினின்றும் விழிப்பதைப் பிறப்பிற்கும் உவமைகளாக்கியுள்ளார்.

''உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு'' (குறள்: 339)

உயிர் குடிபுகும் இல்லமாக - புக்கு இல்லமாக உடம்பு நிலவுகிறது எனவும் உயிர் தங்கும் உடம்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

வள்ளுவர் வானோர் வாழும் உயர்ந்த உலகம் பற்றியும், பற்று நீங்கப் பிறப்பு நீங்குதல் பற்றியும், பற்று விடுதற்கு இறைவனைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்பது பற்றியும், 'துறவறம்' என்னும் அதிகாரத்துள் அறிவித்துள்ளார்.

'யான்', 'எனது' என்னும் பற்றுகளாகிய செறுக்கை அறுக்க வேண்டும் எனவும், அவ்வாறு செறுக்கு அறுப்பவன் உயர்ந்த வானோர் உலகு செல்வான் எனவும் புகல்கிறார்.

'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரம் முழுதும் ஆன்மீகச் செறிவு எனலாம்.

மெய்ப்பொருளை அறிதற்குக் கற்க வேண்டிய நூல்கள் இருந்துள்ளன என்னும் செய்தி வள்ளுவர் குறளால் அறிய முடிகின்றது.

மெய்ப்பொருளாகிய (நிலையான பரம்பொருளாகிய இறைவன்) இறைமையை அறிந்தவர்கள் இந்த உலகில் மீண்டும் பிறவாத நிலையை அடைவர் எனவும் வள்ளுவர் நம்பியுள்ளார். மேலும், அவர், பிறப்பென்பது அறியாமை எனவும் அந்த அறியாமை நீங்குவதற்குச் செம்பொருளாகிய இறைமையை அறிய வேண்டும் எனவும் வற்புறுத்துகிறார். இக்கருத்தை,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு" (குறள் எண்: 358)

என்னும் குறள் வெளியிடுகிறது.

பற்று அற்றால் பிறப்பும் அறுபடும் என்னும் உண்மையை,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" (குறள்: 349)

என்று வள்ளுவர் உணர்த்தியுள்ளார்.

பிறவாத நிலையை அடைய பற்றற்ற நிலையாகிய 'வேண்டாமை'யை வலியுறுத்துகிறார் வள்ளுவர். (குறள். 362)

"ஆசையினால் பிறப்பும், பிறவியினால் துன்பமும் நேர்கின்றன. இது எல்லா உயிர்க்கும் எப்போதும் நீங்காமல் பிறப்பை ஈனும் விதை" என்றும் வள்ளுவர் விளக்கியுள்ளார். எனவே, ஆசையே துன்பங்களுக்கு அடிப்படை என்பது தேற்றம்.

"அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து". (குறள்: 361)

பற்று பிறப்பை உருவாக்கும் என்பதும் பற்று நீங்கினால் பிறப்பு நீங்கும் என்பதும் அறியத்தகும் உண்மையாகும்.

'மறுபிறப்பு' உண்டு என்பதும் ஆன்மீக நம்பிக்கைகளுள் ஒன்றாகும். மறுபிறவியைப் பற்றி வள்ளுவர்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்". (குறள்: 10)

என்னும் குறள் மூலம் உணர்த்தி, இறைவன் திருவடிகளைப் பொருந்தி வணங்கி அப்பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடக்க வழி சொல்கிறார்.

'அறன்வலியுறுத்தல்' அதிகாரத்தில் இடம்பெறும்,

''வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்''. (குறள். 38)

என்னும் குறள் மூலம் வாழ்நாள் (மறுபிறவி) வரும் வழியை அடைக்க வழி சொல்கிறார்.

கணவனைத் தெய்வமாகப் போற்றி, அவனைத் தொழுது வாழும் பெண் பெய் என்று சொல்ல மழையும் பொழியும் என வள்ளுவர் உணர்த்தியதைப் போலவே குறட்பாக்களில் மழையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

'செங்கோன்மை' அதிகாரம்:

''இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு''. (குறள்: 545)

கொடுங்கோன்மை அதிகாரம்:

''முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்''. (குறள்: 559)

செங்கோன்மை முறையில் இயல்பாக ஆட்சிபுரியும் நாட்டில் மழையும் விளைச்சலும் ஒருங்கே இருக்கும் என்பது வள்ளுவர் நம்பிக்கை. அறநெறிக்கும் இயற்கையாற்றலுக்கும் தொடர்பு உண்டு என்பதனை இக்குறள் மூலம் உய்த்துணர வைக்கிறார் வள்ளுவர்.

''மன்னன் கொடுங்கோலாட்சி புரிந்தால் மழை பெய்யாது'' என மற்றொரு குறளில் (குறள்: 559) வள்ளுவர் தெரிவித்துள்ளார்.

நாட்டைக் காக்கும் அரசன் நாட்டு மக்களையும் உயிரினங்களையும் காக்காமல் போயின், பசுக்கள் பால்தரும் பயன் குறையும் எனவும் ஆறுதொழில்களைக் கொண்ட அந்தணர்கள் வேதங்களை மறப்பார்கள் எனவும்,

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்''. (குறள்: 560)

என்னும் குறள் வாயிலாக வள்ளுவர் உணர்த்தியுள்ளார்.

ஆட்சியாளர்கள் அறநெறி தவறக்கூடாது என்பதும், தவறினால் இயற்கை பயன்தராது என்பதும் ஆயத்தக்கதாகும். மழை பெய்தல் இயற்கையாற்றல்; பசுபால் தருதலும் இயற்கை யாற்றலே. அறநெறியில் ஈடுபட்டு வாழ்தல் ஆன்மீகச் செயல் எனலாம்.

வள்ளுவர் திருமாலின் வாமனாவதாரச் செய்தியையும், மாமுகடியாகிய மூதேவியைப் பற்றியும், திருமகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

''சோம்பலில்லாத மன்னவன் மூன்றடிகளால் தாவி யளந்து பெற்ற வானளாவிய உலகங்களையும் இந்த மண்ணுலகை யும் ஒருங்கே அடைவான்'' என்பதால், சோம்பல் இல்லாத மன்னன் திருமாலுக்கு ஒப்பானவனாகக் கருதப்பட்டுள்ளான்.

சோம்பலுள்ளவன் இடத்தில் மாமுகடியாகிய மூதேவி பொருந்துவாள் என்பதும், சோம்பலில்லாதவன் தாள்களில் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் அடைவாள் என்பதும் வள்ளுவர் கருத்து. வள்ளுவர் காலத்து ஆன்மீகம் சான்ற புராண நம்பிக்கைகள் கீழ்க்குறிப்பிட்டுள்ள குறள்கள் வாயிலாக வெளியிடப்பெற்றுள்ளன:

**மடியின்மை:**

''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு. (குறள்: 610)

**ஆள்வினை உடைமை:**

''மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்''. (குறள்: 617)

தெய்வ நம்பிக்கையுடைய வள்ளுவர் முயற்சியின் ஆக்கச் சிறப்பை உணர்த்தும் பான்மையில்,

''தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்''. (குறள். 619)

என்கிறார்.

ஒருவன் உள்ளத்தில் உள்ளதைக் குறிப்பறியும் ஆற்றல் உள்ளவரைத் தெய்வத்திற்கு ஈடாகக் கொள்ள வேண்டும் என்பதும் வள்ளுவரின் ஆன்மீகக் கொள்கைகளுள் ஒன்று:

''ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்'. (குறள்: 702)

'வரைவின் மகளிர்' என்னும் அதிகாரத்துள் புல்லிய மகளிரைப் பற்றிப் பேசும்போது, 'அருட்பொருள் ஆயும் அறி வினர்' என்று ஆன்மீக ஆய்வு செய்து இறைமையை உணரும் அறிவினரைக் குறிப்பிடுகிறார். இதில் இறைவன் அருளுக்குரிய (பரம்) பொருளாகிறான் என்பது நினைக்கத்தக்கதாகும்.

பொருளையே குறிக்கோளாகக் கொண்ட புல்லிய மகளிர் தொடர்பை அருட்பொருளாகிய மெய்ப்பொருளை ஆய்கின்ற மெய்யறிவாளர்கள் கொள்ளமாட்டார்கள்.

'மானம்' என்னும் அதிகாரத்துள், 'புத்தேள் நாடு' எனத் தேவர்கள் வாழும் விண்ணுலகைக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். ''இகழ்த்தக்கோர் நெறிநின்று அவர்கள் பின்னால் செல்லுதல் புகழ்அற்றது; மேலுலகத்திலும் சேர்க்காது'' என்பது வள்ளுவர் செந்நெறி.

''புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை''. (குறள்: 966)

''இகழ்வார்பின் சென்று நிலை'' என்னும் தொடர் இன்று மிகவும் பொருந்தும் தொடராகிறது. இக்காலத்தில் இகழத்தக்க

ஒழுக்கமில்லாதவன், பொருளாசையால், தீயவழிகளில் பொருள் சேர்ப்பவர்கள், கொள்ளையர்கள், தந்நலத்திற்காகக் கோடிக் கணக்கில் ஊழல் செய்து பொருளீட்டும் உயர் பதவியினர், அறநெறி நில்லாதோர் முதலிய அனைவரையும், 'இகழ்வார்' என்னும் இகழ்ச்சிக்குரியோர் பட்டியலில் சேர்க்கலாம்.

கயவர்கள் எத்தகைய உயர்பதவிகளில் இருந்தாலும் அவர்களைப் பின்பற்றிச் செயல்படக்கூடாது; அப்படிச் செயல் பட்டால், உலகில் தீமைகள் விளையும்; அறநெறிக்குரிய இடத்தையே, வானுலகம், சொர்க்கம், மேலுலகம், வீடுபேறு என்றெல்லாம் குறிப்பிடுகிறோம். தீயோரின் பின்னால் செல்வ தனால், பலருக்கும் பல உயிர்களுக்கும் தீமை செய்யும் சூழல் ஏற்படும்; எஞ்சுவது தீமையே. எனவே, இகழ்வார் பின்னால் சென்றால், தேவருலகமாகிய 'புத்தேள் நாடு' செல்ல முடியாது என்கிறார் வள்ளுவர். அவ்வாறு, இகழ்ந்தாரைப் பின்பற்றிச் செல்லுதல் புகழுக்கு உரியதும் ஆகாது என்பது வள்ளுவனாரின் ஆன்மீக மெய்யறிவு நெறி.

'ஏழு பிறவிகள்' பற்றிச் சில குறட்பாக்களில் குறிப் பிட்டுள்ளார் வள்ளுவர். அவை:

''எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்''. (குறள்: 62)

''எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு''. (குறள்: 107)

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.'' (குறள்: 126)

''ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து''. (குறள்: 398)

மேற்குறிப்பிட்ட குறள்கள் வாயிலாகப் பிறவிகள் தொடரும் நிலையை, 'ஏழு பிறவிகள்' என்னும் பொருளில், 'எழுமை' என்னும் சொல்லால் வள்ளுவர் உணர்த்தியுள்ளார்.

*மற்றும், 'பொச்சாவாமை' என்னும் அதிகாரத்துள், 'எழுமை' பற்றிக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்:*

''புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.'' (குறள்: 538)

*அடியளந்தான்' (குறள்: 610)*
*'மாமுகடி' - (குறள்: 617)*
*'தாமரையினாள்' - (குறள்: 617)*
*'செய்யாள்' - (குறள்: 84)*
*'தெய்வத்தான்' - (குறள்: 619)*
*'கூற்று' - (குறள்: 765)*
*'கூற்றத்தை' - (குறள்: 894)*
*'அலகை' - (குறள்: 850)*
*'புத்தேள் நாட்டு' - (குறள்: 966)*
*'தெய்வம்' - (குறள்: 1023)*
*'நிலமென்னும் நல்லாள்' - (குறள்: 1040)*
*'உலகியற்றியான்' - (குறள்: 1062)*
*'தேவர்' - (குறள்: 1073)*
*'அணங்கு' - (குறள்: 1081)*
*'தாக்கணங்கு' - (குறள்: 1082)*
*'கூற்றமே' - (குறள்: 1085)*
*'தாமரைக்கண்ணான் உலகு' - (குறள்: 1103)*
*'புத்தேள் நாடு' - (குறள்: 1323)*
*'அறம்' - (குறள்: 204)*

*முதலிய சொற்களும் சொற்றொடர்களும் ஆன்மீக உணர்வு பெற வழிசெய்யும் அல்லது ஆன்மீகம் சார்ந்த புராணச் செய்திகளைச் சுட்டும் தெய்வங்களின் பெயர்களையும் தாங்கித் திருக்குறள் நூலில் இடம்பெற்றுள்ளன. திருவள்ளுவர் ஆன்மீக அறிவாள ராகவும் கடவுள் நம்பிக்கை மிக்கவராகவும் வாழ்ந்துள்ளார் என்பது தெளிவு.*

*'அடியளந்தான்' என்னும் தொடர், வாமனாவதாரக் கதை யைச் சார்ந்தது; வாமனன் வடிவில் வந்த திருமால் மாவலியை அழிக்க, மூவடிகளால் முறையே உலகையும் வானையும்*

அளந்தபிறகு மூன்றாவது அடியால் அளக்க இடமின்றி மாவலி தலைமீது திருவடி பதித்து அவனைக் கீழுலகு நோக்கி அழுத்தி அழித்தார். அதனால்தான் திருமாலை 'அடிஅளந்தான்' என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

'மாமுகடி' - மூதேவியைக் குறிக்கிறது; திருமகளின் தமக்கை மூதேவியாவாள்.

'கூற்று', 'கூற்றம்' என்பன எமனைக் குறிப்பன. எமன் உயிர்களைப் பிணிப்பவன் என்பது புராணக் கருத்து.

தாமரையினாள் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைக் குறிக்கும் தொடர்.

'செய்யாள்' என்பதும் திருமகளைக் குறிக்கிறது.

தெய்வம் - கடவுள்
அலகை - பேய்
புத்தேள்நாடு - தேவர் உலகம், விண்ணுலகு.

'நிலமென்னும் நல்லாள்' என்னும் தொடர் நிலத் தெய்வமாகிய பூமாதேவியைக் குறிக்கிறது.

'உலகியற்றியான்' - உலகைப் படைத்தவனாகிய கடவுள்.

தேவர் - விண்ணுலகத்தவர்
அணங்கு - பெண் தெய்வம்
தாக்கணங்கு - தாக்கும் பெண் தெய்வம்

தாமரைக் கண்ணான் - தாமரை போன்ற அருட் கண்களைக் கொண்ட திருமால்.

'அறம்' என்பது அறக்கடவுளைக் குறிக்கிறது.

மேற்குறிப்பிட்ட சொற்கள், சொற்றொடர்கள் வாயிலாக வள்ளுவர் வாழ்ந்த காலத்தில் புராணங்கள் கற்கப் பெற்றுத்

தமிழர்கள் புராண அறிவு மிக்கவர்களாகவும் சைவ வைணவக் கருத்துக்களை அறிந்தவர்களாகவும் இருந்துள்ளனர் என்னும் உண்மையை அறியலாம்.

வள்ளுவருடைய சமயம் இன்னது என்பது அறியக்கூட வில்லை எனினும், அனைத்துச் சமயங்களையும் அறிந்து கடவுள் நெறியைப் பின்பற்றி வாழ்ந்து வழிகாட்டியுள்ளார் என அறிகிறோம்.

'ஊழ்வினை' நம்பிக்கை வள்ளுவருக்கு இருந்துள்ளது. அதனால்தான், 'ஊழ்' என்னும் தலைப்பில் ஓர் அதிகாரம் படைத் தார். 'ஊழ்' என்பது, 'இயற்கை நியதி', 'பால்' முதலிய பொருள் களைக் கொண்டது. நம்முடைய அறச்செயல்களும் அறத்திற்குப் புறம்பான தீய செயல்களும் 'ஊழ்' என்னும் இயற்கை நியதிக்கு உட்படுகின்றன. நம் செயல்களுக்கு ஏற்ற விளைவுகள் நம் வாழ் நாளிலேயே நிகழ்கின்றன. அச்செயல்கள் அடுத்த பிறவியிலும் தொடர்கின்றன என்பது ஆன்மீக உணர்வாளர்களின் நம்பிக்கை; மேலும், இந்த ஊழ்வினை, ஆற்றல் மிக்கது; யாராலும் தடுத்து நிறுத்த முடியாதது.

ஊழ்வினையை வள்ளுவர் இரண்டு வகைகளாகப் பகுக்கிறார்; அவை, 'ஆகுஊழ்', 'போகுஊழ்' என்பன.

ஊழின் தன்மைகளையும் வள்ளுவர் தெளிவாக விளக்கி யுள்ளார். ஆக்கம் தரும் ஆகுஊழால் சோம்பல் இல்லாமை தோன்றும்; போகுஊழால் கைப்பொருள் நீங்கச் சோம்பலும் தோன்றும்.

இதனை,

''ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி''. (குறள். 371)

என்னும் குறள் விளக்குகிறது.

இழப்பதற்குக் காரணமான இழவு ஊழினால் அறியாமை ஏற்படும்; ஆக்கத்திற்குக் காரணமான ஆகலூழினை அடைந்தால் அறிவு பெருகும்.

இதனை,

''பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை''. (குறள்: 372)

என்னும் குறள் உணர்த்துகிறது.

நுட்பமான நூல்கள் பல கற்றாலும் தன்னுடைய உண்மையான அறிவே மிகும்.

உலகத்து இயற்கை இருவேறு வகையானவை; செல்வம் உடையவராக இருப்பது வேறு; அறிவுடையராக இருத்தல் வேறு.

நல்லவை அனைத்தும் தீயவையாகும்; தீயவை செல்வம் செய்வதற்கு நல்லவையாகும்.

பொருளை வருந்திக் காப்பாற்றினாலும் ஆகமாட்டா; தீயவினையைச் சாராதவற்றைச் (பால் அல்ல) செலுத்தி வழங்கினாலும் போகமாட்டா.

இவையனைத்தும் இவ்வாறு ஊழ்வினையால் நேருகின்றன.

கோடிக்கணக்கில் பொருள் சேர்ந்திருந்தாலும் இறைவன் வகுத்த வகையல்லாமல் அனுபவித்தல் அரிது.

ஊழ்வினை பெரிய வலிமையுடையது; அதனைவிட வலிமையுடையது வேறில்லை; மற்றொன்று அதனைச் சூழ்ந் தாலும் அந்த ஊழ்வினை அதனை முந்திக் கொள்ளும்.

ஊழைப் பற்றிய வள்ளுவரின் கோட்பாடுகள் இவையே.

எனினும், ஊழ்வினையை வெல்வதற்கு வள்ளுவர் வழியும் சொல்லியுள்ளார்.

"சோர்வின்றித் தாழாமல் முயற்சி செய்பவர்கள் ஊழையும் வெல்வார்கள்" என்று வள்ளுவர் சொல்கிறார். மெய்வருத்தத்திற்கேற்ப முயற்சி கூலிதரும்; தெய்வத்தால் ஆகாததையும் முயற்சி ஆக்கும் என்பது, 'ஊழை' எண்ணி வீணே உழைக்காமல் முயற்சி இன்றி இருக்கக் கூடாது என்பதற்காக, வள்ளுவர் இவ்வாறு ஊழைவெல்லும் முயற்சியைப் பற்றிக் கூறியுள்ளார்.

இந்த உண்மையின் அடிப்படையில் ஆயும்போது நம் செயல்களுக்கு ஏற்பவே ஊழ்வினை ஆக்கம் விளைப்பதாகவோ அழிவை விளைப்பதாகவோ அமையும் என்பதனை உணரலாம். எனவே, ஆக்கம்தரும் ஆகலூழை எதிர்பார்ப்பவர்கள் நல்ல அறச்செயல்களையே செய்ய வேண்டும் என்பது தெளிவாகிறது.

"சோம்பல் உள்ளவனிடம் மாமுகடியாகிய மூதேவி அடைவாள்" என்றும், "சோம்பலில்லாதவன் முயற்சியில் தாமரையில் உறையும் திருமகள் உள்ளாள்" என்றும், ஒருகுறள் முயற்சியின் பெருமையை வலியுறுத்துகிறது.

"மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். (குறள்: 617)

என்னும் திருக்குறளில் அமைந்த, "மடியிலான் தாளுளாள் தாமரையினாள்" என்னும் தொடர், "சோம்பலில்லாதவன் முயற்சியில் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் உள்ளாள் என்னும் பொருளையும் அளிப்பதனால், 'தாள்' என்பதன் பொருளை உணரலாம்.

'தாள்' என்பது முயற்சியாகிய தாமரைத் தாள் எனவும் தாமரை மலராகிய பாதங்கள் எனவும் பொருள்தரும்.

குறிப்பறிதல் பற்றி வள்ளுவர் உயர்வாகக் கூறியுள்ளார். ஐயப்படாமல், உள்ளத்தில் உள்ளதனை உணரக்கூடியவனைத் தெய்வத்திற்கு இணையாகக் கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

'கூற்றுவன்' என்னும் எமனைப் பற்றியும் வள்ளுவ குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர் காலத்தில் உயிரைப் பிணித்து செல்லும் எமன் பற்றிய நம்பிக்கை மக்களுக்கு இருந்துள்ளது.

எமனைக் கூடி நின்று எதிர்க்கும் படையின் ஆற்றலை பற்றிச் சொல்லும் 'படைமாட்சி' என்னும் அதிகாரத்தைச் சார் ஒரு குறள் மூலம் கூற்றுவனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளா எமனைப் பற்றிய கருத்து ஆன்மீக உணர்வுடையாரின் நம்பிக்க களுள் ஒன்று. இது புராணக் கருத்தாகும்.

கூற்றைப் பற்றிய குறட்பாக்கள் வருமாறு:

''கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை''. (குறள்: 765)

''கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்''. (குறள்: 89

திருவள்ளுவர் காலத்தில் மக்களிடையே பேயை பற்றிய நம்பிக்கை இருந்துள்ளது; பேயை, 'அலகை' எ வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

''உலகத்தார் 'உண்டு' என்று அறிந்த உண்மையை மறுத் 'இல்லை' என்பவன் உலகத்தில் பேயாக வைத் மதிக்கப்படுவான்'' என்னும் பொருளில்,

''உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்''. (குறள்: 850)

வள்ளுவர் 'மானம்' பற்றிய அதிகாரத்துள் விண்ண மாகிய தேவர் உலகத்தைப் பற்றிய கருத்தைச் சொல்லியுள்ளா மான உணர்ச்சியுள்ளவர்கள் தேவர்களுக்குச் சமம் என்பது மானம் உள்ளவர்கள் வாழும் நாடு தேவருலகத்திற்குச் சம என்பதும் அறியலாகும்.

தன்னை இகழ்பவர்களின் பின்னால் உதவியை நாடி நின்றிருத்தல் புகழுக்குரியதன்று; 'புத்தேள் நாடு' எனப்பெறும் விண்ணுலகுக்குச் செலுத்தாது.

இக்கருத்தில்,

''புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை''. (குறள்: 966)

என்னும் குறளை வள்ளுவர் அமைத்துள்ளார்.

உயிரினங்களின்மீது அருள்கொள்ளும் பண்பையே 'நோன்மை' என்னும் தவம் என வள்ளுவர் கருதுகிறார்.

''கொல்லா நலத்தது நோன்மை'' (குறள்: 984)

என்பது குறள் தொடர்.

'குடி செயல்வகை' என்னும் அதிகாரத்தில், தன் குடியைப் பாதுகாக்கும் ஒருவனுக்குத் தெய்வம் கீழ்ப்பாய்ச்சுக் கட்டிக் கொண்டு முந்திக் கொண்டு உதவும் என்கிறார். (குறள்: 1023)

உழைக்காமல், 'பொருளில்லை', 'உண்ண உணவில்லை' என்றெல்லாம் எண்ணி, 'இலம்' என்று சோம்பலாக இருப்பவர்களைப் பார்த்து நிலமென்னும் நல்லவள் சிரிப்பாள் என்னும் பொருளமைந்த குறள் வாயிலாக,

நிலத்தை மடந்தையாக - பெண்ணாக உருவகம் செய்துள்ளார் வள்ளுவர்.

நிலமும் தெய்வந்தான்; நாட்டைத் 'தாய்நாடு என்பது போல் நிலத்தை 'நிலமடந்தை' என வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

''பிச்சை எடுத்தே உயிர்வாழ வேண்டும் என்று மக்களை இறைவன் படைத்திருப்பானேயானால், அப்படிப் படைத்த

இறைவன் அலைந்து திரிந்து கெடட்டும்'' என வள்ளுவர் உலகை யும் உயிர்களையும் படைத்த இறைவனைத் தூற்றுகிறார்.

இறைவனின் நோக்கம், படைத்த எந்த உயிரையும் காப்பதே; எனவே, இறைவனே தான்படைத்த மக்கள் பிச்சை எடுத்து அலையும்படி நிலைமையை உருவாக்கினால், அத்தகைய இறைவன் அலைந்து திரிந்து அழியட்டும் எனச் சாடுகிறது குறள்.

இறைவன் படைப்பில் அருள் பேரிடம் பெறுகிறது; இறைவனால் படைக்கப்பட்டவை அவன் அருளைப் பெறு கின்றன. அப்படி இல்லாமல் மக்களுள் பலர் பிச்சை எடுப்பது அவர்களுடைய சோம்பலையே காட்டுகிறது; இயலாமையைக் காட்டுகிறது; இறைவனுடைய படைப்பின் நோக்கத்தை உணர்ந்த நாம் யாரையும் பிச்சை எடுக்கும்படி விடக்கூடாது; அருள் தன்மையுடன் அவர்களுக்கு உதவவேண்டும். மாறாக இறை வனையே பழிப்பது தவறு; எனினும் வள்ளுவர், இறைவன் படைப்பில் பிச்சையெடுப்போரின் அவல நிலையைக் கண்டு மனம் தாளாமல் இறைவனையே, 'பரந்து கெடுக!' எனக் கடிந்து கொள்கிறார்.

''இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.'' (குறள்: 1062)

'தேவர்' என்போர், கருதியதைச் செய்து முடிப்பவர்கள். கயவர்களும் கருதியதைச் செய்து முடிப்பவர்கள். ஆயின், அவர்கள் செயலில் நன்மை இல்லை.

இக்கருத்துள்ள,

''தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்''. (குறள்: 1073)

என்னும் குறள் கயவர்களைத் தேவர்களுக்கு ஒப்பிட்டு நையாண்டி செய்கிறது. தீய செயல்களையே கருதி முடிப்பவர்கள் என்னும் கருத்தில் கயவர்கள் இயங்குபவர்கள்; ஆயின், விரும்பி யதை முடிக்க வேண்டும் என்பதில் தேவர்களும் கயவர்களும்

ஒருமித்த கருத்துடையவர்கள். இக்குறள் கயவரின் இயல்பை விளக்குவதற்கு வந்ததாயினும், 'தேவர்கள்' தேவர்களாக ஆவதற்கு அறச்செயல்களையே செய்திருக்க வேண்டும். இக்கருத்தில் தான் வள்ளுவர்,

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்''. (குறள்: 50)

என்னும் குறள் வாயிலாகத் தெளிவாக்கியுள்ளார். 'வாழ்வாங்கு வாழ்தல்' அறநெறியில் வாழும் சிறந்த நெறியாகும். எனவே, நினைத்ததை முடித்தாலும் கயவர்கள் தேவர்கள்போல் உயர்ந்த நிலையை அடைய முடியாது என்பதே இங்குள்ள உயரிய பொருள்.

''அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு''. (குறள்: 1081)

என்னும் குறட்பாவில் 'அணங்கு' என்னும் சொல் தெய்வப் பெண்ணைக் குறிக்கிறது. பண்பினால் தலைவி உயர்ந்திருக்க வேண்டும்; தெய்வப்பெண்கள் அழகானவர்கள் என்பது நம் முன்னோர்களின் கற்பனை. எனவே பெண் தெய்வத்தைப் பற்றிய செய்தியை வள்ளுவர் இக்குறளில் குறிப்பிட்டுள்ளார்.

''நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து''. (குறள்: 1082)

என்னும் குறளில் 'தாக்கணங்கு' என்னும் மயக்கம் செய்யும் தெய்வப் பெண்ணைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

ஐம்புலன்களை அடக்குதல் பற்றி வள்ளுவர்,

''அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு''. (குறள்: 343)

என்று 'துறவு' அதிகாரத்தில் உணர்த்தியுள்ளார்.

'அடல்' என்பதற்கு 'வெற்றி பெறுதல்', 'அழித்தல்' என்னும் பொருள்கள் கொள்ள வேண்டும்.

''தாம் விரும்புகின்றவருடைய மென்தோளில் பொருந்தி உறங்குவதைப்போல் தாமரைக் கண்ணான் உலகு இன்றியமை யாததோ?'' என்னும் பொருளில் அமைந்த,

''தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு''. (குறள்: 1103)

என்னும் குறளில், தாமரைக்கண்ணான் உலகு பற்றிக் குறிப்பிட் டுள்ளார் வள்ளுவர். 'தாமரைக்கண்ணான்' என்னும் தொடர் திருமாலைக் குறிக்கிறது. ''திருமாலின் உலகம் - வைகுந்தம் - வீடுபேறு அளிக்கும் பேரின்பமேலுலகம்'' என்பதே பொருள்.

இல்லறத்தில் தலைவன் - தலைவி அடையும் இன்பத்தை விட ஆன்ம உணர்வுடன் அறநெறியில் வாழ்ந்து அடையும் பேரின்பம்தான் தாமரைக் கண்ணான் உலகில் அடையக்கூடிய இன்பம். பேரின்ப உணர்வைப் பெற ஐம்புலன் உணர்வுகளை அடக்கி ஆளுமுன்னர், இல்லறத்தில் ஈடுபட்டு ஐம்புலன்களால் விளையும் சிற்றின்பத்தை - நிறைவான இன்பத்தை அனுபவிக்க வேண்டும். இந்த உண்மையை இக்குறள் எண்ணி உணரச் செய்கிறது.

உடம்புக்கும் உயிருக்கும் இடையில் உள்ள நட்பின் தன்மையை விளக்குதற்குத் தலைவியுடன் தலைவனுக்குரிய காதல் நட்பை ஒப்பிடுகிறார் வள்ளுவர்.

உடம்பும் உயிரும் இருந்தாலே இயங்கமுடியும்; வாழ முடியும்; தலைவனும் தலைவியும் காதல் குன்றாமல் இணைந்து வாழ்ந்தாலே இன்பம் நுகரமுடியும். உடம்புக்கும் உயிருக்கும் நட்பு என்றும் நிலைத்திருப்பதில்லை; உடம்பில் உயிர் ஒன்றி யிருக்கும்போதே நாம் அறச்செயல்களில் ஈடுபட்டு நல்லது செய்ய வேண்டும். இது நிலையாமையை உணர்த்துகிறது. உடம்பு அழியக்கூடிது; உயிர் அழியாதது என்னும் நிலைத்த உண்மை யையும் எண்ணிப்பார்க்க இந்தக் குறள் வழிவகுக்கிறது.

''உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு''. (குறள்: 1122)

வள்ளுவர் 'சந்திர கிரகணம்' பற்றிய செய்தியை,

"கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று". (குறள்: 1146)

என்னும் குறள் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.

இம்மை - மறுமை பற்றி,

"'இம்மைப் பிறப்பில் பிரியலம்' என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்" (குறள்: 1315)

என்னும் குறளில் தெரிவித்துள்ளார். இதில், தலைவன் தலைவியைப் பார்த்து, "இப்பிறவியில் பிரியமாட்டோம் என்றதும் கண்நிறையும்படி நீர்கொண்டனள்" என்று தலைவியின் கண்ணீரைப் பற்றிக் குறிப்பிடுவதாக வள்ளுவர் தெரிவிக்கிறார்.

"இப்பிறவியில் பிரியமாட்டோம்" என்றால் மகிழ்ச்சி தானே அடைய வேண்டும்; தலைவி ஏன் கண்ணீரைக் கண்களில் நிறைத்தாள்? அடுத்த பிறவியிலும் பிரியமாட்டோம் எனத் தலைவன் உறுதியளிக்கவில்லையே! "அடுத்த பிறவியில் பிரிவோம்" என்னும் உணர்வு மேலிட்டதும் தலைவியின் கண்களில் கண்ணீர் நிறைந்தது.

வள்ளுவர், உயிர் பல பிறவிகள் எடுக்கும் என்னும் நம்பிக்கை கொண்டவராக இருந்தார் என்னும் செய்தியை உணர இக்குறள் உதவுகிறது.

தேவர்கள்நாடு அல்லது தேவர்கள் உலகம் பற்றிய ஒரு செய்தியையும்,

"புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து." (குறள்: 1323)

என்னும் குறள் தெரிவிக்கிறது. இது 'ஊடலுவகை' என்னும் அதிகாரத்துள் இடம்பெறும் குறள்.

வள்ளுவருடைய கடவுட் கருத்துக்கள் கீதையிலும் உள்ளன; ஆதிசங்கரரின் அத்வைதமும் வள்ளுவரில் அடக்கமே. பிற்காலத்தில் தோன்றிய நாயன்மார்கள், ஆழ்வார்கள், பற்பல சமயத் தலைவர்கள் எல்லோருமே வள்ளுவரின் ஆன்மீக நெறிகளைத் தம்தம் நோக்கில் உணர்த்தியவர்களே.

சமணத்திற்குரிய கோட்பாடுகளும் வைணவத்திற்குப் பேசப்பட்டனவும் கிறித்துவத்தில் உள்ளனவும் வள்ளுவர் கோட்பாடுகளுடன் இசைகின்றன.

சமய அடிப்படையில் பிளவுபடாமல், கடவுள் நெறியில் ஒருமித்த எண்ணத்துடன் சமய ஒருமைப்பாட்டை உருவாக்கும் பெருமித நோக்கில் வள்ளுவரின் கடவுள் நெறிகள் திருக்குறள் மூலம் தெளிவாக உணர்த்தப்பெற்றுள்ளன.

திருக்குறளில் புகுந்து கடவுள் நெறிகளைப் படித்து மனமலரில் ஏந்தி, நடுவுநிலையுடன் நின்று, சிந்திக்கும் போது, உலகுக்கே உயரிய சாதிசமய வேறுபாடற்ற பொதுமை மிளிரும் சமயக்கோட்பாடுகளாக ஆன்மீக நெறிகளை உருவாக்கிய அருள் நெஞ்சங் கொண்டவராக வள்ளுவரை உயரிய நிலையில் வைத்து மதிப்பிட முடிகிறது.

★ ★

## 2. பகவத்கீதை காட்டும் ஆன்மீக நெறிகள்

இயற்கையின் ஆற்றல் அளவிடற்கு அரியது; எண்ணு தற்கும் கற்பனை செய்தற்கும் மிகவும் அரியது. பேரண்டமும் அண்டங்களும் கோள்களும் உயிரினங்களும் ஐம்பூதங்களும் எப்படித் தோன்றின? என்று தோன்றின? இவை அனைத்துக்கும் வித்து எது? அடிப்படைதான் எது? இவ்வினாக்களுக்கு விடை சொல்வது மிகவும் கடினம். அறிவியலாலும் முழுதும் அறிய முடியவில்லை; ஆன்மீக உணர்வாலும் தெளிவாக உணர முடியவில்லை.

எது தோன்றினாலும் அதற்கு அடிப்படை உண்டு. திருவள்ளுவர் உலகியல் அறிஞர்; மெய்யறிவாளர்; மிக உயர்ந்த ஆன்மீகச் செல்வரும் ஆவார். அவர்தம் முதற்குறள் வாயிலாக உய்த்துணர்ந்து விடையளித்துள்ளார். கடவுள் நம்பிக்கையுடையோர் அவர் உணர்த்தியதை நம்புவர்.

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''.

என்னும் குறள், ''உலகுக்கு அடிப்படை கடவுள்'' என்னும் உண்மையை உணர்த்துகிறது. இக்கருத்தை விளக்குவதற்கு, ''எழுத்துக்களுக்கெல்லாம் அடிப்படை அகரம்'' என்னும் உவமையைக் காட்டியுள்ளார்.

பகவத்கீதை வழங்கிய கண்ணனும் அர்ச்சுனனிடம், ''பாரதா! உயிர்களில் ஆரம்பம் தெளிவில்லை; நடுநிலைமை தெளிவுடையது; இவற்றின் இறுதியும் தெளிவில்லை'' (பக்கம் 30) என உயிர்களின் தொடக்கமும் முடிவும் தெளிவில்லை என்பதனை உணர்த்துகிறான்.

இயற்கையே இறைவன் எனக் கொண்டு, அந்த இயற்கை எட்டு வகையாகப் பிரிந்து தோன்றுகிறது என்னும் உண்மையைக் கீதை வெளியிடுகிறது. (பக்கம் 151) அவை மண், நீர், தீ, காற்று, வான், மனம், மதி, அகங்காரம் என்பன. இவை 'கீழியற்கை'

எனக் கீதை குறிப்பிடுகிறது. உயிரால் உலகு தரிக்கப்படுகிறது என்பது கீதையின் கருத்து.

எனவே, கண்ணன், ''எல்லா உயிர்களுக்கும் அது காரண மென்றுணர். அதனால் உலகமுழுமைக்கும் ஆக்கமும் அழிவு மாவேன்'' என்கிறான். (பக்கம் 153) அனைத்துயிர்களின் தோற்றத் திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாக இருப்பது இறைமையே என்பது இதன் பொருள்.

இறைமை எல்லாப் பொருள்களிலும் பொதிந்துள்ளது என்பதனையும் கீதை வெளிப்படுத்துகிறது.

''தனஞ்ஜயா! என்னைக் காட்டிலும் உயர்ந்த பொருள் வேறெதுவுமில்லை. நூலில் மணிகளைப்போல் இவ்வையக மெல்லாம் என்மீது கோக்கப்பட்டது''. (பக்கம் 153)

''நான் நீரில் சுவை, குந்திமகனே! நான் ஞாயிற்றிலும் திங்களிலும் ஒளி; எல்லா வேதங்களிலும் நான் பிரணவம்; வானில் ஒலி நான்; ஆண் மக்களிடத்து நான் ஆண்மை''. (பக்கம் 153)

ஆன்மாவைப் பற்றிய அரிய உண்மையைத் தெளிவாகக் கீதை விளக்குகிறது. அர்ச்சுனன் தன் உறவினர்கள், ஆசிரியர் முதலானவர்களைப் போரிட்டு அழிக்க மனமின்றிக் குழம்பிய நிலையில் இருக்கும்போது கண்ணன், ''அர்ச்சுனா! நீ வருந்துவது முற்றிலும் தவறு. எதிரிகளின் ஆன்மாவைப் பற்றி வருந்துகின் றாயா? அல்லது அவர்களின் உடலைப் பற்றி வருந்துகின்றாயா? இரண்டும் சரியல்ல. ஆன்மா என்றும் அழிவற்றது. அதைக் கத்தி யால் வெட்டவும் தீயினால் எரிக்கவும் முடியாது. உடலோ அழியும் இயல்பு வாய்ந்தது. நீ அழிக்காவிடினும், அதுதானே அழிய வேண்டியதுதான். ஆன்மாவுக்கு ஓருடல் அழிந்ததும், மற்றோருடல் தானே வந்து சேரும். ஆத்மாவின் இயற்கையை எண்ணி உனக்கு ஏற்படுத்தப்பட்ட செயல்களை நீ செய்தே தீரவேண்டும்'' என உணர்த்துகிறான். (பக்கம் 25. இரண்டாம் அத்தியாயம் - ஸாங்க்ய யோகம்)

*கீதையின் 'சாங்க்ய யோகம்' என்னும் பகுதியில், ''ஆத்மாவுக்கு இவ்வுடலில் எங்ஙனம் பிள்ளைப் பிராயமும், இளமையும், மூப்புந் தோன்றுகின்றனவோ, அங்ஙனமே, மற்றொரு சரீரப் பிறப்புந் தோன்றுகிறது'' என, ஆன்மாவுக்கு அழிவில்லை என்னும் உண்மை தெளிவுபடுத்தப்பெறுகிறது.*

*இக்கருத்து, ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய மணி மேகலையில், காப்பியத் தலைவி மணிமேகலையாலும், மாண்ட சோழ இளவரசன் உதயகுமாரனுடைய தாய் இராசமாதேவிக்கு உணர்த்தப்பெறுவது கீதையின் 'ஆன்மா' பற்றிய நிலைக்கு வலுவூட்டுகின்றது.*

*'மணிமேகலை' - சிறைவிடுகாதையில், மணிமேகலை இராசமாதேவியிடம்,*

''உடற்கழு தனையோ? உயிர்க்கழு தனையோ?
உடற்கழு தனையேல் உன்மகன் தன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரோ?
உயிர்க்கழு தனையேல், உயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையால் தெரிந்துணர் வரியது;
அவ்வுயிர்க் கன்பினை யாயின், ஆய்தொடி!
எவ்வுயிர்க் காயினும் இரங்கல் வேண்டும்.''

*எனத் தன்மகன் உடல் அழியினும் அவன் உயிர் அழியாதது என்பதனை விளக்குகிறார்.*

*''உயிரின் பொருட்டு அழுதனையா? உடலின் பொருட்டு அழுதனையா? உடலுக்காக அழுதனையாயின் உன்மகன் உடலைப் புறங்காட்டில் இட்டதுயார்? உயிருக்காக அழுதனை எனில் செய்யும் வினையால் அது புகும் இடத்தை (உடலை) அறிவது அரிது; அவ்வுயிரிடத்து அன்புள்ளவளாயின் எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொள்ள வேண்டும்'' என்னும் உண்மை மூலம், ஆன்மா ஒருடல் அழிந்த பிறகும் மற்றோர் உடலில் புகுகிறது என்பது அறியலாகிறது.*

*மணிமேகலையில் ஆதிரை பிச்சையிட்ட காதையிலும், சாதுவன் நாகர்களின் குருமகனுக்கு அறிவுரை சொல்லும்போது, ஆன்மாவுக்கு அழிவில்லை என்னும் உண்மை விளக்கமுறுகிறது.*

*குருமகன்,*

''உடம்புவிட் டோடும் உயிருருக் கொண்டோர்
இடம்புகும் என்றே எமக்கீங் குரைத்தாய்!
அவ்வுயிர் எவ்வணம் போய்ப்புகும்? அவ்வகை
செவ்வனம் உரை''

*என்று சாதுவனிடம் வினவுகிறான்.*

*''உடம்பை விட்டு நீங்கும் உயிர், வடிவம் கொண்ட ஓர் இடம் புகும் என்று இங்கு எமக்கு உரைத்தாய்! அவ்வுயிர் எவ்வாறு போய்ப் புகும்? அத்தன்மையைச் செவ்வையாகச் சொல்க!'' என்பது இதன் பொருள்.*

*சாதுவன் விளக்குகிறான்.*

''உற்றதை உணரும் உடலுயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடின்
தடிந்தெரி ஊட்டினும் தானுணராதெனின்
உடம்பிடைப் போனதொன் றுண்டென உணர்நீ''

*என்று சாதுவன் தெளிவாக்குகிறான்.*

*''உடலில் உயிர் வாழும்போது தொட்டால் உணரும்; உயிர் நீங்கினால், உடலானது வெட்டி நெருப்பில் இட்டாலும் (வெட்டும் துன்பத்தையும் தீயில் பொசுங்கும் துன்பத்தையும்) உணராது.*

''போனார் தமக்கோர் புக்கிலுண் டென்பது
யானோ அல்லேன் யாவரும் உணர்குவர்;
உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்
கடந்து சேண் சேறல் கனவிலும் காண்குவை;
ஆங்ஙனம் போகி, அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையின் புகுவது தெளிநீ''.

என்று மேலும், மணிமேகலை ஆசிரியர், சாதுவன் என்னும் பாத்திரத்தின் வாயிலாக ஆன்மா பற்றிய அரிய விளக்கம் எடுத்துக்காட்டுடன் அளித்துள்ளார்.

உடலைவிட்டு உயிர்நீங்கினாலும், ''போனார்'' என்றே போன - நீங்கின உயிர்களைப் பற்றி 'ஆர்' விகுதி சேர்த்துக் குறிப் பிட்டுள்ளார் சாத்தனார். உயிர் நீங்கிய பிறகு உடலை மட்டும், இயக்கம் இன்மை காரணமாகப் பிணம் என்கிறது; கண்ணுக்குப் புலப்படாதாயினும் 'உயிர்' நிலைத்திருப்பது என்பதனால், 'மன்னுயிர்' என்று உயிருக்கு 'மன்' என்னும் அடைமொழி வழங்குவர். மணிமேகலை ஆசிரியரும் 'மன்னுயிர்' என்றே குறிப்பிட்டுள்ளார்.

போகும் உயிர்களுக்குப் புகும் இடம் (உடல்) உண்டு. இதனை எல்லோரும் உணர்வர் என்கிறார், ''கனவின்போது உடல் இருக்க, உயிரானது பலகாவதம் கடந்து தொலைதூரத்திற்குச் சென்று அடைகிறது'' என்னும் உண்மையை எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

''ஆன்மா என்றும் அழிவற்றது; அதைக் கத்தியால் வெட்டவும் தீயினால் எரிக்கவும் முடியாது'' (பக்கம் 25) என்பது கீதை கூறும் ஆன்மா பற்றிய உண்மை. மணிமேகலைக் காப்பியம் இந்த உண்மையை ''உடலோடு உயிர் இருக்கும்போது துன் பத்தை உடல் உணரும்; உயிர் நீங்கியதும், வெட்டினாலும் எரித் தாலும் அத்துன்பங்களை உடல் உணராது'' என வேறு வகையாக விளக்குகிறது. உயிராகிய ஆன்மா உண்டு என்பதற்கு இது ஓர் அரிய விளக்கமாக அமைகிறது.

உடல் சிதைந்த பிறகு உயிர் பிரிந்து நீங்குகிறது; புதிய உடலில் புகுகிறது. இந்த உண்மையைக் கீதை நல்லதோர் உவமை ஒன்றால் புலப்படுத்துகிறது.

''நைந்த துணிகளைக் கழற்றியெறிந்துவிட்டு மனிதன் புதிய துணிகள் கொள்ளுமாறு போல, ஆத்மா நைந்த உடல் களைக் களைந்து புதியனவற்றை எய்துகிறான்'' என்பதே அந்த உவமை. (பக். 37)

*ஆன்மா ஒன்று பல பிறவிகளில் பற்பல உடல்களை ஆடைகளாகக் கொள்ளுகிறது. ஒவ்வொரு பிறவியிலும் ஒருடல் ஆடையாகிறது.*

*கர்மயோகத்தில் ஆன்மா மிக உயர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இந்திரியங்கள் உயர்வுடையன. அவற்றைவிட மனம் மேலானது; மனத்தைவிட புத்திமேன்மையானது; புத்திக்கு மேலே ஆன்மா. 'ஆன்மா'வை 'அவன்' என்று உயர்திணையில் குறிப்பிடுகிறது கீதை. (பக்கம். 42)*

*ஆன்மாக்களுக்குள் வேற்றுமை இல்லை; உடல் காரணமாக வேறுபாடுகள் தோற்றுகின்றன. இந்த உண்மையை, ஸம்நியாஸ யோகத்தில் கீதை குறிப்பிடுகிறது:*

''எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரியானவை. தோற்றும் வேறுபாடுகளெல்லாம் தேக சம்பந்தத்தால் வந்தவை என்ற உணர்வு வேண்டும்''. *(பக்கம் 105)*

*இந்த உண்மையைத் திருவள்ளுவரும் தம் திருக்குறள் நூலுள்,*

''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'' (குறள் எண்: 972)

*என்னும் குறள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.*

*இந்த உண்மை ஆன்மீக உண்மைகளுள் - உணர்வுகளுள் மிகமிக உயர்ந்ததாகும். ''கடவுள் எங்கே?'' என்று வினவுகின்றவர்களுக்கு இது தக்க விடையாகவும் அமைகிறது. ஆன்மாக்களின் ஒட்டுமொத்தமே கடவுள்; ஆன்மாக்களைக் கடவுளிலிருந்து வேறுபடுத்திக் காட்ட முடியாது என உணரமுடிகிறது; ஏனெனில், ஆன்மாக்களுக்கிடையில் வேற்றுமை இல்லை அல்லவா?*

*மனித ஆன்மா ஆயினும், வாழ்வாங்கு வாழும் தன்மையால் தெய்வத்தன்மை அடைகிறது; தெய்வத்தோடு கலப்பதனால், தெய்வத்திலிருந்தே பற்பல ஆன்மாக்கள் தோன்றிப்*

பற்பல உயிரினங்களாகத் தோற்றம் பெறுகின்றன; அத்தகைய வடிவத் தோற்றங்களில் வேறுபாடு உண்டெனினும் ஆன்மாக் களுக்கிடையே வேற்றுமை இல்லை என்பது தெளிவாகிறது.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்". (குறள் எண்: 50)

என்னும் குறள் ஆன்மாக்கள் தெய்வத்தன்மையுற்றுத் தாம் கிளைத்த பேரான்மாவினுள் ஒடுங்கும் நிலை இது என உய்த் துணரலாம்.

மேலும், பரமாத்மாவிலிருந்து தோன்றியவை ஆன்மாக் கள் என்பதற்கு இயற்கையாற்றல்களையும் இயற்கைக் காட்சி களையும் கூர்ந்து நோக்கினாலும் உணர்ந்தறிய இயலும்.

ஞாயிறு (சூரியன்) பல ஒளிக்கதிர்களைத் தோற்று விக்கிறது; அது விண்ணில் திகழ்கிறது எனினும் மண்ணில் ஒளிக் கதிர்களைப் பாய்ச்சுகிறது. அவ்வொளிக்கதிர்கள் உயிர்கள் வாழ் வுக்குப் பயன்படுகின்றன.

மேகம் உலகில் பல இடங்களில் மழையைப் பொழி கிறது. மேகம் உள்ள இடம் வானம்; 'வான்' என்னும் பெயர் மழைக்கும் உரியது. 'வான்சிறப்பு' என்னும் அதிகாரமே வள்ளு வரால் திருக்குறளில் இயற்றப்பெற்றுள்ளது.

மேகம் மழையாகி - வெள்ளமாகப் பெருகி - ஆறாகிப் பின்னர் கடலில் சேர்கிறது. கடலில் இருந்தே நீர் சூரிய வெப் பத்தால் ஆவியாகிப் பின்னர் மேகமாக வானில் சூழ்கிறது; எனவே, மேகமாக விண்ணையும் நீராகக் கடலையும் கொண்டு விளங்கும் தன்மையுடைய நீர் பஞ்சபூதங்களுள் ஒன்று; சூரிய னாகிய தீயும் பஞ்சபூதங்களுள் ஒன்று.

விண்ணில் இம்மண்ணுலகம் ஒரு கோளாக (பூமியாக) இயங்குகிறது. விண்ணில் செவ்வாய், புதன் முதலிய கோள்கள் இயங்குகின்றன; விண் இவற்றிற்கெல்லாம் தாயகமாக அமை கிறது. விண்ணில் பல அண்டங்களும் அண்டங்களுள் பல

கோள்களும் இயங்குகின்றன. நம் பூமியில் பல உயிரினங்கள் - ஆன்மாக்கள் உருவாகி இயங்குகின்றன. விண்ணாகிய பேராத்மா விலிருந்து பல அண்டங்கள் - கோள்கள் - உயிரினங்கள் உரு வாகிப் பல ஆன்மாக்கள் திகழ்கின்றன. பலவாக அவை வேறு பட்டுத் தோன்றினாலும் அவையனைத்துக்கும் பிறப்பிடமும் புகலிடமும் ஒன்றே.

இவ்வாறே கற்கள் - மணல்கள் - புழுதிகள் எனப் பல வடிவங்கள் வேறுபட்டுத் திகழ்ந்தாலும் அவை உருவான இடம் 'மலை' என்னும் ஒன்றே.

விதையிலிருந்து மரங்கள் தோன்றுகின்றன; மரங்களி லிருந்து விதைகளும் தோன்றுகின்றன. ஒன்றிலிருந்தே பற்பல பொருள்கள் தோன்றின என உணரும்போது, பேரான்மாவாகிய கடவுளில் இருந்தே ஆன்மாக்கள் பலவாக உருவாகியுள்ளன என அறியலாம். இந்த உண்மையைப் பகவத்கீதை, ''எல்லா ஆத்மாக் களும் தேக சம்பந்தத்தை நீக்கிப் பார்த்தால் ஒருவகைப்பட்டவை என்று எண்ணி, முடிவில் கடவுளும் அவ் வாத்மாக்களும் ஒருவகைப்பட்டவர்களென்று உணர்வான்'' (பக்கம் 123) என்று 'அத்யாத்மயோகம்' என்னும் பகுதியில் குறிப்பிடுகிறது.

இவ்வாறே மேலும் சில கருத்துக்களைப் பகவத் கீதை ஆன்மாவை விளக்க உணர்த்துகிறது. அவற்றுள் சில வருமாறு:

''குற்றங்களைப் போக்கி இங்ஙனம் எப்போதும் ஆன்மா வில் கலப்புற்றிருப்பானாயின் அந்த யோகி ப்ரம்மத்தைத் தொடு வதாகிய மிக உயர்ந்த இன்பத்தை எளிதில் துய்க்கிறான்.'' (பக். 137)

''யோகத்தில் கலந்தவன் எங்கும் ஸமப்பார்வையுடைய வனாய், எல்லா உயிர்களிடத்தும் தானிருப்பதையும் தன்னுள் எல்லா உயிர்களுமிருப்பதையும் காணுகிறான்.'' (பக். 137)

''எல்லா உயிர்களுக்கும் நான் ஸநாதனமாகிய விதை யென்றுணர். பார்த்தா! புத்தியுடையோரின் புத்தி நான். ஒளியுடை யோரின் ஒளி நான்''. (பக்கம் 155)

நம் எண்ணங்களுக்கு ஏற்பவே மறுபிறவி ஏற்படும் என்பது கீதையின் கோட்பாடு :

''ஆக்கையினின்றும் ஆவிகிளம்புங்கால் எத்தகைய எண்ணம் மனிதனின் மனத்துக்குள் இருக்கின்றதோ அத்தகைய பலனையே மறுபிறவியில் பெறுவானாதலால் பக்தர்கள் இறக்கும் தருணத்தில் கடவுளைத் தியானித்திருப்பது அவசியம்''. (பக்கம் 165)

இறந்த பிறகு ஆன்மா செல்லும் வழி இருவகைப்படும் எனக் கீதை உணர்த்துகிறது. ஒருவழி திரும்பி வராத வீடுபேறு; மற்றொன்று திரும்பி வரவேண்டிய இடத்தை அடையும் வழி. (பக். 165)

'ப்ரம்மம்' என அழிவற்ற பரம்பொருளாகிய இறைவனைக் குறிப்பிடுகிறது பகவத்கீதை. அதன் இயல்பை அறிய உதவும் மெய்யறிவை 'ஆத்மஞானம்' எனவும் குறிப்பிடுகிறது கீதை. உயிர்த்தன்மையைக் கர்மம் விளைவிக்கிறது. (பக். 167)

இறைவனை அடையும் அழிவற்ற தன்மை வீடுபேறு எனப்படுகிறது. ''எதை எய்தபின் மீள்வதில்லையோ அதுவே என் பரம பதம்'' (பக்கம். 175) என்கிறது பகவத்கீதை. மறுபிறவி இல்லாத பிறவாப்பேரின்பமே வீடுபேறு என அறிய முடிகிறது. இதனைப் பற்றி வள்ளுவரும் கடவுள் வாழ்த்தில் உணர்த்தியுள்ளார்:

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்''. (குறள்: 10)

பிறவி இல்லாத தன்மை இறைவனுடைய திருவடிகளைச் சேருகின்றவர்களுக்குரியது என்பது வள்ளுவர் கருத்து. இதனைப் பகவத்கீதை 'அவ்யக்தம்' எனக் குறிப்பிடுகிறது. 'அவ்யக்தம்' என்பது 'அழிவற்றது' என்னும் பொருள் கொண்டது. இறைவன் திருவடிகளைச் சேர்ந்து, பிறகு பிறவிக்கு மீளாத தன்மையைப் பகவத்கீதை 'பரமபதம்' எனக் குறிப்பிடுகிறது. (பக்கம்: 175)

கடவுள் நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவர்; ''கடவு எங்கும் நிறைந்த பரம்பொருள்'' என்று கீதை உணர்த்துகிறது (பக். 180) ''அவ்யக்த வடிவாய் நான் இவ்வுலக முழுமையு சூழ்ந்திருக்கிறேன். என்னிடத்தே பூதங்களெல்லாம் நிலை பெற்றன. அவற்றுட்பட்டதன்று என் நிலை'' (பக். 183) என்கிறது கீதை.

காற்று வானில் நிலைபெற்றிருப்பதனைக் கண்ணன் எடுத்துக்காட்டாகக் கூறுகிறான்.

''எங்கும் இயல்வானும் பெரியானுமாகிய காற்று எப்படி எப்போதும் வானில் நிலைபெற்றிருக்கின்றானோ, அப்படியே பொருள்களெல்லாம் என்னுள் நிலைபெற்றனவென்று தெரிந்து கொள்''. (பக்கம். 185)

கடவுள் அனைத்துமாக இருப்பவன் என்னும் உண்மையை, ''இந்த உலகத்தின் அப்பன் நான்; இதன் அம்மா நான்; இதைத் தரிப்போன் நான்; இதன் பாட்டன் நான்; இதன் அறியப்படு பொருள் நான்; நான் ரிக்; நான் யாமம்; நான் யஜுஸ், (பக். 189) என்று வெளிப்படுத்துகிறான் கண்ணன்.

இவ்வுலகின் புகலாகவும், இறைவனாகவும், கரியாகவும் (சாட்சி), உறையுளாகவும், அழிவாகவும், இடமாகவும், நிலை யாகவும், அழியாத விதையாகவும் இறைவன் விளங்குகிறான் என்று அரிய உண்மைகளைக் கீதை வெளியிடுகிறது. (பக். 191)

வெப்பம், மழை முதலியவற்றைத் தருபவன் இறைவன். அவனே அமிர்தமாகவும் மரணமாகவும் அமைகிறான்; உள்ளதும் இல்லாததுமாக உள்ளான். இவ்வுண்மைகளைக் கீதை குறிப் பிடுகிறது. (பக். 191)

திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் தம் திருக்குறளில்,

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

எனக் குறிப்பிட்டதைப் போன்றே, பகவத் கீதையும், கண்ணன் தன்னை எழுத்துக்களுள் 'அ' என்னும் முதல் எழுத்து என்று கூறிக்கொண்டதாகக் குறிப்பிடுகிறது. (பக்கம். 215)

''ஆதிபகவன் முதற்றே உலகு'' என்று வள்ளுவர் குறிப்பிட்டது போன்றே,

''யாங்கணும் வானோர்கட்கும் மஹரிஷிகட்கும் ஆதி நானே'' (பக். 203) என்று பகவத்கீதையிலும் கண்ணன் தன்னைப் பற்றிக் குறிப்பிடுகிறான்.

''ஆத்மாவுக்கு உண்மையில் பிறப்பு இறப்பு கிடையாது'' என்கிறது பகவத்கீதை; தேக சம்பந்தமே பிறப்பெனவும் அதன் பிரிவே இறப்பெனவும் கூறுகிறது பகவத் கீதை. (பக். 265)

ஆன்மா உடலில் எங்கு நிலைத்திருக்கிறது என்பதற்குப் பகவத் கீதை அரிய உண்மையை வெளிப்படுத்தி விடையளிக்கிறது:

''எங்கு மிருந்தாலும், ஆகாசம் தன் நுண்மையால் பற்றற்று நிற்பதுபோல், உடம்பில் ஆத்மா எங்கணுமிருந்தாலும் பற்றுவதிலன்'' என்பதே அந்த உண்மை. (பக். 281)

ஆன்மாவைப் பற்றி அர்ச்சுனனுக்குக் கூறும் கண்ணன், ''இப்பொருள் அழிவற்றது; பிறப்பற்றது; என்றுமுளது; இங்ஙன முணர்வான் கொல்வதெவனை? அவன் கொல்விப்பதெவனை?'' என்று விளக்குகிறான்.

ஆன்மாவைப் பற்றி மேலும், ''பிளத்தற்கரியவன்; எரித்தற்கும் நனைத்தற்கும் உலர்த்துதற்கும் அரியவன்; நித்தியன்; எங்கும் நிறைந்தவன்; உறுதியுடையான்; அசையாதான்; என்றுமிருப்பான். தெளிதற்கரியான்; சிந்தனைக்கரியான்; மாறுதலில்லாதானென்ப'' என்றும் விளக்குகிறான்.

கடவுளும் ஆன்மாக்களும் ஒருவகைப்பட்டவர்கள் என்பது கீதையின் துணிவு.

(**குறிப்பு:** இக்கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ள பகவத்கீதை மேற்கோள்களும் பக்க எண்களும் சி. சுப்பிரமணிய பாரதியார் மொழிபெயர்ப்புடன் பாரதி பதிப்பகம், சென்னை-17 வெளியிட்ட 'பகவத்கீதை' என்னும் நூலில் உள்ளவை. முதற்பதிப்பு, பிப்ரவரி, 1988.)

## 3. பரிபாடல் உணர்த்தும் ஆன்மீகம்.

'பரிபாடல்' சங்க இலக்கியங்களுள் அடங்கும் எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று. இது ஆன்மீகம் சார்ந்த முழுமையான பக்திநூல் எனலாம். முருகன், திருமால், கொற்றவை, மதுரைமா தெய்வம், வையை ஆகிய தெய்வங்களைப் பற்றிய பாடல்களைக் கொண்டநூல் பரிபாடல்.

பரிபாடலிலுள்ள பாடல்கள் பிற்காலத்தில் தோன்றிய ஆழ்வார்களுக்கும் நாயன்மார்களுக்கும் ஆன்மீக உணர்வுக்குத் தாக்கமாக அமைந்துள்ளன.

சிலப்பதிகாரத்திற்கு உரை இயற்றிய அடியார்க்கு நல்லார் தம் உரையில், தென்மதுரையில் அமைந்திருந்த முதற்சங்கத்தில் திகழ்ந்த புலவர்களால் எண்ணற்ற பரிபாடல்கள் இயற்றப்பட்ட தாகக் குறிப்பிட்டுள்ளார். கடைச்சங்கப் புலவராகிய நக்கீரரும் களவியல் உரையில் குறிப்பிட்டுள்ளார்.

எண்ணற்ற பாடல்கள் அன்று பரிபாடல்களாக இயற்றப் பெற்றாலும், இசையாசிரியர்கள் போற்றி வழங்கிவந்த இருபத் திரண்டு பாடல்களே கிடைத்தன; தொல்காப்பிய உரைநூல்களின் மேற்கோள் செய்யுட்களிலிருந்து இருபரிபாடல்கள் கிடைத்தன. எனவே, இன்று இருபத்து நான்கு பரிபாடல்கள் உள்ளன; தொகுக்கப்பெற்ற காலத்தில் எழுபது பாடல்கள் இருந்துள்ளன.

தொகைநூலில் அமைந்த பரிபாடல்களுள் திருமாலைப் பற்றியன 1, 2, 3, 4, 13, 15 ஆகிய ஆறுபாடல்களாகும்.

செவ்வேளைப் பற்றிய பாடல்கள் எட்டாகும். அவை: 5, 8, 9, 14, 17, 18, 19, 21 ஆம் பாடல்கள்.

வையையைப் பற்றிய பாடல்கள் இருபத்தாறு இருந்தன; ஆயின், கிடைத்தவை ஒன்பது பாடல்களே.

திருமாலைப் பற்றிக் கடுவன் இளவெயினனார், கீரந்தையார், நல்எழிநியார் என்னும் புலவர்கள் பாடினர்.

செவ்வேளைப் பற்றிப் பாடியவர்கள், நல்லந்துவனார், கடுவன் இளவெயினனார், குன்றம் பூதனார், கேசவனார், நப்பண்ணனார், நல்லச்சுதனார், நல்லழுசியார் என்போர் ஆவர்.

முதலில் செவ்வேளுக்கு முப்பத்தொரு பாடல்கள் இருந்தன; இன்று எட்டுப்பாடல்களே கிடைத்துள்ளன.

வையையைப் பற்றி நல்லந்துவனார், கரும்பிள்ளை பூதனார், நல் அழுசியார், நல்வழுதியார், மையோடக்கோவனார் ஆகியோர் பாடியுள்ள பாடல்கள் உள்ளன.

மதுரையைப் பற்றிய பாடல்கள் நான்கும் காடுகிழாட்குரிய ஒரு பாடலும் முழுதும் கிடைக்கவில்லை.

**திருமால்:**

திருமால் நான்முகனுக்கும் மன்மதனுக்கும் தந்தை; நான்முகன் படைக்கும் கடவுள் என்பதால், படைக்கும் கடவுளையே படைத்த முழுமுதற் கடவுள் என்னும் சிறப்பைத் திருமால் பெறுகிறார். காம உணர்வினை ஊட்டும் தெய்வம் மன்மதன்; அவனைப் படைத்தவனும் திருமால் என்பதால், படைப்புக்கு - இனவளர்ச்சிக்குக் காமம் அடிப்படை எனக் கொண்டு, உயிர்களின் இன வளர்ச்சிக்கு - தோற்றத்திற்கு அடிப்படையாகத் திருமால் 'தந்தை' என்னும் நிலையில் அமைகிறார். இந்த உண்மையைத் திருமால் வாழ்த்தாக அமைந்துள்ள,

''இருவர் தாதை இலங்குபூண் மாஅல்
தெருள நின்வரவு அறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே'' *(வரிகள்: 31-33)*

என்னும் **முதற்பாடல் வரிகள்** புலப்படுத்துகின்றன.

''இருவர் தாதை'' என்பதற்குத் திருமால், நான்முகனுக்கும் மன்மதனுக்கும் தந்தை என்பது பொருள்; நான்முகன்

படைப்புக் கடவுள்; மன்மதன் படைப்புக்கு அடிப்படையான காம உணர்வினை உயிர்களுக்குப் புகட்டும் கடவுள்.

படைப்புக் கடவுளையும் காமக் கடவுளையும் படைத்த திருமால் எவ்வாறு தோன்றினார் என்பதனை யாராலும் அறிய இயலாது. இந்த உண்மையைத்தான்,

''தெருள நின் வரவு அறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே''

என்னும் தொடர் உணர்த்துகிறது.

''நின்வரவு'' என்பது, ''திருமாலாகிய நின் தோற்றம்'' என்னும் பொருளினது. உயிர்களுக்கெல்லாம் அடிப்படையாகப் படைப்பதற்கென ஒரு தெய்வம் இருந்தாலும், பழமையான மூழுமுதற்கடவுள் ஒருவன் இருப்பதாகவே கொள்ள வேண்டியுள்ளது. அவன் தோற்றத்தை அறிதல் என்பது தெளிவான - மயக்கமற்ற அறிவுடைய அறிஞர்க்கும் முடியாது. இத்தகைய மூழுமுதற் கடவுளையே வள்ளுவர் 'ஆதிபகவன்' என முதற்குறளிலேயே குறிப்பிட்டுள்ளார். பரிபாடலும் இதனை உறுதிப்படுத்துகிறது.

இறைவனை 'இன்னதன்மையன்' என்று வரையறை செய்து முடிவாகத் துணிய இயலாது. அதனால்தான்,

''அன்ன மரபின் அனையோய் நின்னை
இன்னன் என்று உரைத்தல் எமக்கெவன் எளிது?''

(பரிபாடல்: 1 வரிகள் : 34, 35)

என்று பரிபாடல் உணர்த்துகிறது.

எல்லாமாகத் திருமால் திகழ்கிறார் என்னும் உண்மையைக் கீழ்க்குறிப்பிட்டுள்ள வரிகள் தெளிவுபடுத்துகின்றன:

''விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்
அறனும் ஆர்வலர்க்கு அளியும் நீ
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் சிறப்பின்
மறனும் மாற்றலர்க்கு அணங்கும் நீ

அங்கண் ஏர் வானத்து அணிநிலாத் திகழ்தரும்
திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ
ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ
நலமுழுது அளைஇய புகரறு காட்சிப்
புலமும் பூவனும் நாற்றமும் நீ
வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
நிலமும் நீடிய இமயமும் நீ.''

(பரிபாடல்: 1 வரிகள் : 40-51)

''திருமால் ஆற்றல்மிக்க அந்தணர் காக்கும் அறமாகவும், அவன்பால் அன்புள்ளவர்களுக்கு அளியாகவும், திறனற்றவர் களைத் திருத்திய தீமை நீங்கிய சிறப்பினையுடைய மறனாகவும் (ஆண்மையாகவும்), பகைவர்க்கு அச்சம்தரும் அணங்காகவும், அழகிய இடத்தைக் கொண்ட வானத்தில் அழகிய ஒளி விளங்கும் திங்களாகவும், எரித்தழிக்கும் கதிரவனாகவும், ஐந்துதலை நாகம் உயர்ந்து கவிந்து நிழல்தர அச்சந்தரும் அரியவலிமையும் ஆண்மை யும் உடைய ஒப்பற்றவனாகவும், ஆண் சிங்கமாகவும், நன்மை முழுதும் கலந்த குற்றமற்ற அறிவுடைய மறையும், பூமேல் திகழும் நான்முகனும், நறுமணமும் வெற்றியும் உடைய உயர்ந்த மேகமும், அகன்ற விண்ணும், நிலமும், உயரிய இமயமும் ஆக உள்ளான்'' என்னும் பொருள் கொண்டு இப்பாடல் திருமாலின் தன்மைகளை உணர்த்துகிறது.

எல்லாமாகவும் எல்லாவற்றிற்கும் காரணமாகவும் திருமால் உள்ளான்.

''எல்லா உயிர்களுக்கும் நான் ஸநாதனமாகிய விதை யென்றுணர்'' என்னும் பகவத் கீதையின் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

''பூவனும் நாற்றமும் நீ'' என்னும் பரிபாடல் தொடர், (பரிபாடல்: 1) திருவாசகத் திருவண்டப் பகுதியில் உள்ள,

''பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கு
மொழிவற நிறைந்து மேவிய பெருமை''

என்னும் வரிகளை நினைவுபடுத்துகிறது.

எல்லாம் திருமாலால் இயங்குகின்றன; எல்லாமே அவன் வடிவங்கள் என்னும் உண்மையை உணரச் செய்கிறது இப்பரிபாடல்.

திருமால் ஒப்புமை இல்லாதவர்; திருமாலைப்போல் இன்னொருவரை இணையாகக் காண இயலாது; ஆகவே, பொன் அணியாகச் சக்கரத்தை வலக்கையில் ஏந்திய நிலைபெற்ற உயிர்களுக்கு முதல்வனாகத் திருமால் திகழ்கிறார். எனவே,

''இன்னோர் அனையை இனையை யாலென
அன்னோர் யாம்இவண் காணா மையின்
பொன்னணி நேமி வலங்கொண்டு ஏந்திய
மன்னுயிர் முதல்வனை''

(பரிபாடல்: 1 வரிகள் : 53 - 56)

என்று பரிபாடல் திருமாலைப் போற்றிப் பரவுகிறது.

விண்ணுலகமும் மண்ணுலகமும் ஊழிக்கால முடிவில் அழிவன; வானத்தில் பல ஊழிக்காலங்களுக்குப் பிறகு, கரு வளர்வதற்குரிய வானத்திசையில் கருக்கள் தோன்றின; உருவங்களை அறிய முடியாத ஊழிக்காலம் தோன்றியது; உந்தும் காற்று கிளர்ந்த ஊழி தோன்றியது; காற்றோடு கூடிய பல ஊழிகள் தோன்றின; செந்தீச்சுடர் கொண்ட ஊழி அதன்பிறகு தோன்றியது; பனியுடன் குளிர்ந்த பெயலைக் கொண்ட நீரோடு கூடிய ஊழிக்காலம் அதன்பிறகு உண்டானது; வெள்ளம் நிறைந்து அதனுள்ளே உலகம் மூழ்கியிருந்த ஊழிக்காலம் தோன்றியது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், குற்றம் நீங்கிய கமலம், வெள்ளம் என்னும் பேரெண்களின் அளவினையுடைய பல காலங்கள் கடந்தன.

நீரில் மூழ்கிக் கிடந்த உலகை மேலெடுத்து நிலைபெறச் செய்தான் திருமால். 'வராக கற்பகம்' என்னும் நில ஊழிக்காலம் பெயர்பெறுகிறது. எனவே, ''பல ஊழிக்காலங்களுக்கும் முற்பட்ட திருமாலின் முதுமையை எவரும் உணர இயலாது. ஆழி முதல்வனே நின்னைத் தொழுது போற்றுகிறோம்'' என்று திருமால் வாழ்த்தாகிய இரண்டாம் பரிபாடல் குறிப்பிடுகிறது.

''ஆழிமுதல்வ'' (பரிபாடல்: 2, வரி: 19) என்று திருமாலைப் போற்றும் பான்மையில் திருக்குறளில் கடவுள் வாழ்த்தில் இடம்பெறும்,

''அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது''

என்னும் குறள் அமைந்ததோ என எண்ண வேண்டியுள்ளது. 'ஆழி' என்னும் சொல் சக்கரத்தையும் கடலையும் குறிக்கும் சொல்லாகும். இங்குச் சக்கரம் என்று பொருள் கொள்வதனைவிட, உயிர்களின் தோற்றத்திற்கு அடிப்படையான கடல்தோன்ற முதல்வனாக இருந்தவன் திருமால் எனக் கொண்டு, கடல் ஆற்றும் அறச் செயலையும் உணரலாம்.

கடல் பல உயிரினங்கள் வாழ இடம் தருவது; கடல்நீர் கதிரவன் வெப்பக்கதிர்களால் ஆவியாகிப் பின்னர் மேகமாகிறது; மேகம் மழையாகப் பெய்து உயிர்களைப் புரக்கும் அறச்செயலைக் கொண்டது; அதன் அறத்திற்கு அடிப்படை கடல் என்பதால், கடல், 'அறக்கடல்' என்னும் பொருளில் 'அறவாழி' எனப் பட்டது. இத்தகைய கடல் முதலியவற்றைப் படைப்பவன் திருமால் என்பதால் பரிபாடல், திருமாலை, ''ஆழி முதல்வ'' எனப் போற்றுகிறது.

''நீ நினைத்ததும், மூவாமரபும் நீங்காத வலிமையும் சாவாத தன்மையும் கொண்ட அமுதம் தேவர்கள் வாயினை அடைந்தது. அமரர்க்காகச் சென்ற அருள்தன்மையுடைய மரபினையுடையவனே! நின் திருவடிகளைத் தலையுற வணங்கினோம்; கலக்கமற்ற நெஞ்சத்துடன் போற்றினோம்; வாழ்த்தினோம்; பல சுற்றத்தினருடன் நின்பல பெருமைகளையும் பேசிப் போற்றினோம். எதற்காக? எம்மறிவு, கொடுமைகள் எதனையும் அறியாமல் இருப்பதற்காகவே!'' என்னும் பொருளில் கீழ்க் காணும் வரிகள் பரிபாடல் **இரண்டாம் பாடலில்** அமைந்துள்ளன:

''வாயடை அமிர்தம் நின் மனத்தகத் தடைத்தர
மூவா மரபும் ஓவா நோன்மையும்
சாவா மரபின் அமரர்க்காச் சென்ற நின்
................ மரபினோய் நின்னடி

தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்
கடும்பொடும் கடும்பொடும் பரவுதும் -
கொடும்பாடு அறியற்க எம்மறி வெனவே!''

(பரிபாடல்: 2; வரிகள் : 69-76)

''கடும்பொடும் கடும்பொடும் பரவுதும்
கொடும்பாடு அறியற்க எம்மறி வெனவே''

என்னும் வரிகள் மிக உயர்ந்த அருள் உள்ளத்தோடு அமைந்தவை. ''கொடுமையான தன்மையை அறிவு அறியாமல் இருக்க வேண்டும்; அதற்கு உன்னைப் பரவுகிறோம்'' என்பது அருளுணர்வாகிய ஆன்மீக உணர்வை உள்ளடக்கியதாகும். பொன்னுக்கும் பொருளுக்கும் உலக இன்பங்களுக்கும் ஆசைப்பட்டுத் திருமாலை வேண்டாமல், பிறருக்குக் கொடுமை செய்வதனையே எண்ணாத அறிவைப்பெற வேண்டுவது என்பது மிக உய்ர்ந்த நோக்கம். கடவுளை இப்படித்தான் பரவி வேண்டிக்கொள்ள வேண்டும் என்பதற்குச் சீரிய ஆன்மீக நெறியாக அனைவர்க்கும் எக்காலத்துக்கும் இப்பாடல் வழிகாட்டுகிறது.

''திருமாலாகிய இறைவன் பெரிய செந்தீயாகவும், கூற்றமும் யமனுமாகவும், ஆயிரங்கதிர்களைப் பரப்பும் ஞாயிறாகவும், ஊழிக்காலத்துக் கடல்நீருள் பன்றிவடிவங் கொண்டு கொம்புகளால் உழுதுதாங்கினவனாகவும், பெரிய விண்ணில் ஒழுகும் நீர் வறட்சியடைய அன்னச் சேவலாய்ச் சிறகைக் கொண்டு புலர்த்தியவனாகவும், உலகில் வாழும் தேவர்களும் வானுலகத்து முப்பத்திரண்டு வகைத் தேவர்களும் விரும்பி உன்னைப் பாடும் வகையிலேயே பாடுவதல்லாமல் தாமே அறிந்து எவ்வாறுயாம் பாட இயலும்?'' என்று பரிபாடல் திருமாலின் செயல்களையும் அற்புதங்களையும் சொந்தமாக அறிந்து பாடுதல் இயலாது என உணர்த்துகிறது. இதனால், ஆன்மீகச் செய்திகள் கடவுளைப் பற்றியன எனவும், அவை அவ்வப்போது கற்பனை செய்து பாடப்படுவன அல்ல என்பதால், நிலைத்த இறைவன் செயல்களைத் திரித்துப் பாடக்கூடாது எனவும் உணர்த்துகிறது.

திருமாலின் வடிவங்கள் பல; அவற்றுள் தெய்வங்களின் வடிவங்களும் அடங்கும். பல தெய்வங்களை மக்கள் வணங்கு கின்றனர். முனிவனாகவும், பிரம்மனாகவும் கணபதியாகவும் முருகனாகவும் ஏழு கைகளைக் கொண்ட தலைவனாகவும் எட்டுக் கைகள் கொண்ட முதல்வனாகவும், ஒன்பது கைகளைக் கொண்ட நிலைபெற்ற பெருமையுடையவனாகவும், பத்துக் கைகளைக் கொண்ட மிக்க வலிமையுடையவனாகவும், நூறு கைகளைக் கொண்ட ஆற்றலாளனாகவும் திருமால் பரிபாடலால் போற்றப் பெறுகிறான்:

''முக்கை முனிவ! நாற்கை அண்ணல்!
ஐங்கை மைந்த! அறுகை நெடுவேள்!
எழுகையாள எண்கை ஏந்தல்!
ஒன்பதிற்றுத் தடக்கை மன்பே ராள!
பதிற்றுக்கை மதவலி! நூற்றுக்கை யாற்றல்!''

(பரிபாடல்: 3)

'முக்கை முனிவ!' என்னும் தொடர் யோக நிலையில் இருக்கும் முனிவனாகிய சிவனைக் குறிக்கிறது; 'நாற்கை அண்ணல்' - பிரமன்; 'அறுகை நெடுவேள்' என்போன் முருகன்; மேலும் திருமால் பல வடிவங்களில், பலவித எண்ணிக்கையில் கைகளைக் கொண்டவனாக, 'இனைத்தென எண்வரம்பு அறியா யாக்கையை!'' என, அவன் வடிவங்கள் (யாக்கைகள்) அள வற்றன என்பதால், எண்ணி வரம்பை அறிய முடியாது என்கிறது பரிபாடல். இதிலிருந்து எல்லா உயிரினங்களின் யாக்கைகளும் அவனது யாக்கைகளே (உடம்புகளே) என்பதும் எல்லாமாக அவன் உள்ளவன் என்பதும் அறியலாகின்றன.

திருமாலுக்கு ஒப்புமை சொல்ல இயலாது; அவனுக்கு நிகர் அவனே! அவன் தொன்மை மரபினையுடைய மறைகளின் முதல்வன். அவனுக்காக விரிந்து அகன்றுள்ள கேள்வியறிவாகிய அனைத்திலும், வலிமையாலும் மனத்தாலும், உணர்வாலும், இவை அனைத்தாலும் அவன் வனப்பின் வரம்பை அறிய முடியாத மரபினை உடையவன். எனவே, பரிபாடல்,

"நின்னைப் புரை நினைப்பின் நீயலது உணர்தியோ
முன்னை மரபின் முதுமொழி முதல்வ!
நினக்கு விரிந்தகன்ற கேள்வி அனைத்தினும்
வலியினும் மனத்தினும் உணர்வினும் எல்லாம்
வனப்பு வரம்பறியா மரபி னோயே!"

(பரிபாடல்: 3; வரிகள் : 46 - 50)

என்று அவன் அழகின் வரம்பு அறிய முடியாதது என்கிறது. அழகின் எல்லை 'வனப்புவரம்பு' எனக் குறிக்கப்படுவதனால், திருமாலின் வடிவத்தை ஒரு குறிப்பிட்ட அளவில் காண முடியாது என்பதும் அவன் சிறிய வடிவில் வாமனனாகவும் பெரிய வடிவில் உலகளந்தவனாகவும் உள்ளவன் என்பதும் அறியப் பெறும். அவன் அழகே வடிவமாகவும் இருப்பதனால், அந்த அழகின் எல்லையையும் எண்ணியோ அளந்தோ அறிய முடியாது; இயற்கை முழுதும் யாங்கணும் அழகுத் தெய்வமாக விளங்குகிறான்.

திருமால் அமரர்க்கும் மற்றுமுள்ள அனைவர்க்கும் முதல்வன். அவனுக்குப் பகைநட்பு என்று யாரும் இலர்.

"அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வன்நீ
திணிநிலம் கடந்தக்கால் திரிந்தயர்ந்து அகன்றோட்டி
நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணிநெகிழ்பு அவிழ்தண்தார்
அன்னவர் படஅல்லா அவுணர்க்கும் முதல்வன்நீ;
அதனால், பகைவர் இவர், இவர் நட்டோர் என்னும்
வகையும் உண்டோ, நின் மரபறி வோர்க்கே?"

(பரிபாடல்: 3; வரிகள் : 53 - 58)

என்னும் பரிபாடல் வரிகள், திருமாலுக்கு வேண்டியவர், வேண் டாதார் என்னும் விருப்பு வெறுப்பு இல்லை என்பதனை உணர்த்துகின்றன.

'திருமால் காலங்களுக்கெல்லாம் முதல்வன்' என்னும் உண்மையை,

''ஆயிர அணர்தலை அரவுவாய்க் கொண்ட
சேவல் ஊர்தியும் செங்கண் மாஅல்
ஓவெனக் கிளக்கும் கால முதல்வனை!
'ஏஎ' எனக் கிளத்தலின் இனைமைநற்கு அறிந்தனம்''

(பரிபாடல்: 3; வரிகள் : 59 - 62)

*என்னும் பரிபாடல் வரிகள் தெரிவிக்கின்றன.*

*ஆதிசேடன் ஆயிரம் தலைகளைக் கொண்ட பாம்பு; அவனைக் (பாம்பை) கருடன் வாயினால் கௌவிக் கொண்டான்; கருடனும் திருமாலின் ஊன்றிய விரலின் அழுத்தத்துக்கு ஆற்றாமல், ''செங்கண்மால்'', என ஓவெனக் கதறினான். அத்தகைய வலிமையுடைய காலமுதல்வன் திருமால். இத்தகைய தன்மைகளை, 'ஏஎ' எனச் சாமவேதம் கூறுதலின் நன்கு அறிந்தனம் என்கிறது பரிபாடல்.*

*அனைத்துமாய் நின்ற திருமாலைப் பற்றிப் பலவாறு போற்றிப் பரவுகிறது பரிபாடல்:*

''தீயினுள் தெறல் நீ! பூவினுள், நாற்றம் நீ!
கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!
அறத்தினுள் அன்பு நீ! மறத்தினுள்மைந்து நீ!
வேதத்து மறைநீ! பூதத்து முதலும் நீ!
வெஞ்சுடர் ஒளியும்நீ! திங்களுள் அளியும் நீ!
அனைத்தும் நீ! அனைத்தின் உட்பொருளும் நீ!
உறைவும் உறைவதும் இலையே உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமார் அனையை!
முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலில்
பிறவாப் பிறப்பிலை! பிறப்பித்தோர் இலையே''.

(பரிபாடல்: 3; வரிகள் : 63 - 72)

*இப்பாடல் வரிகள் திருமாலின் பல வடிவங்களை உணர்த்தி அவன் அனைத்துமாக உள்ளவன் என்னும் பேருண்மையை வெளிப்படுத்துகின்றன.*

''தீயினுள் சுடும் வெம்மையானவன்; பூவினுள் நறு மணம்; கல்லினுள் மணி; சொல்லினுள் வாய்மை; அறத்துள் அன்பு; மறத்துள் ஆண்மை; வேதத்துள் மறைபொருள்; ஐம்பூதங்களுள் முதல் (ஆகாயம்); வெம்மையான கதிரவனின் சுடர்; நிலவுள் தண்மை; எல்லாம் ஆனவன்; எல்லாவற்றின் உட்பொருள் ஆனவன்; உறையும் இடமும், உன்னிடம் உறை வதும் இல்லை; உண்மையாகவும், மறதியில்லாத சிறப்பினை யுடைய மாயம் நிறைந்த அனைத்துமானவன்; தொழிலில் முதல்முறை, இடைமுறை, கடைமுறை என்னும் மூன்று தொழில் களையும் உடையவன். பிறவாத பிறப்பு இல்லை; பிறப்பித் தவர்கள் இல்லை'' என்னும் ஆன்மீகச் செய்திகள் பகவத் கீதையில் உள்ள செய்திகளுடன் ஒத்திருக்கின்றன.

வெம்மை, தீயில் உள்ள ஆற்றல்; அது கண்ணுக்குத் தெரிவதில்லை; பூவில் நறுமணம் உள்ளது; அது கண்ணுக்குப் புலப்படாதது; கற்களுள் மாணிக்கம் நவமணிகளுள் உயர்ந்தது; வாய்மை சொற்களுள் சிறந்தது; அறத்திற்குள் அன்பு சிறந்த தலைமையான அறம்; ஐம்பூதங்களுள் முதலில் உருவானது வானம்; ஞாயிற்றின் ஒளி மற்ற ஒளிகளை விட உயர்ந்தது; நிலவுக்குள் உள்ள தண்மை நலம் பயப்பது; இத்தகைய உருவம் உள்ளதும் உருவம் இல்லாததுமாகிய எல்லாமாகவும், எல்லா வற்றின் தன்மைகளையும் கொண்டவனாகவும் திருமால் திகழ் கிறான். அவன் எல்லாவற்றிலும் உள்ளும் புறமுமாக இருப்ப தனால், அவனுக்கு எனத் தனியாக உறையும் இடம் இல்லை; அவனிடம் பொருந்தி உறைவதும் (தங்குவதும்) எதுவும் இல்லை; எல்லாமே அவன்; அவனுக்கு மறதி இல்லை; சிறப் பினையுடைய மாயம் நிறைந்த அனைத்துமாக அமைந்தவன். தொழிலில் முதல்முறை, அதாவது படைக்கும் தொழில். 'இடைமுறை' என்பது பிறந்த உயிரினங்களை இடையில் வளர்ச்சியுறக் காக்கும் தொழில். 'கடைமுறை' என்பது அழிக்கும் தொழில். உருவாக்குதல், காத்தல், அழித்தல் ஆகியன திருமாலுக்குரிய தொழில்களாகச் சொல்லப்பட்டுள்ளன. எனவே, திருமாலே சிவனும் பிரம்மனுமாக இருப்பவன் என அறியலாம். கடவுள்-திருமால் ஒருவரே; அவர் எல்லாமாக உள்ளவர் என்பதால் மும்மூர்த்திகளின் ஒட்டுமொத்தமானவர் ஆகிறார்; திருக்குற்றாலநாதர் இத்தகையவரே.

திருமால் நிறத்தால் காயாம்பூவின் வண்ணத்தன்; அருளைக் குடையாகவும், அறத்தைச் செங்கோலாகவும் உடையவனாகி, இருநிழல்படாமல் மூவேழ் (இருபத்தொரு) உலகங்களையும் ஒருகுடை நிழலுக்குள் ஆக்கிய பாதுகாப்பளிப்பவன். திருமால் காக்கும் கடவுள் என்பதற்கு இது எடுத்துக்காட்டு.

சூனியமாகவும், முளையாகவும், பகுத்தறியப்படுபவனாகவும், நிலம், நீர், தீ, காற்று, வான் எனப்படும் ஐம்பூதங்களாகவும், ஐம்புலன்களாகவும், ஆறு ஞானேந்திரியங்களாகவும், ஏழுதாதுக்களாகவும், எண்திசைகளாகவும், ஒன்பது கோள்களாகவும், நான்கு ஊழிக்காலங்களிலும் போற்றப்படும் சிறப்பினை உடையனவாகவும் திருமால் உள்ளான்.

பலவகையான நிறங்களமைந்த கண்களையும் உருவங்களையும் பெயர்களையும் கொண்டு திருமால் பரிபாடலால் போற்றப்படுகிறான். பலவகையான தன்மைகளையும் ஆற்றல்களையும் செயல்களையும் கொண்டுள்ளான். பல வண்ணங்களையும் கொண்டு விளங்குகிறான்.

திருமால் சிவந்த கண்களுடன் கூடிய கரியமேனியனாகவும், கரிய கண்களுடன் வெள்ளை மேனியனாகவும், பொன்நிறக் கண்களுடன் பச்சை மேனியனாகவும் பசிய கண்களைக் கொண்டவனாகவும் உள்ளான்.

இடமாகவும் வலமாகவும் கூத்தாடுபவராகவும், பசுக்களைக் காப்பவராகவும், உயிர்களைக் காப்பவராகவும், காண முடியாத மரபினராகவும், அன்பர் மனத்துள் நீங்காத நினைவாகவும், அழிவற்ற மன்னராகவும், உலகையாளும் வேந்தராகவும், தொன்மை அமைந்த புலவராகவும், நல்ல யாழ்ப்பாணராகவும், துளபமாலை அணிந்த செல்வராகவும், தோல்வியுறாத சங்கினை உடையவராகவும், பொன்னாடையினராகவும், வலம்புரிச் சங்கு போன்ற வெண்ணிறத்தவராகவும், சக்கரத்தைக் கொண்ட வல்லவராகவும், போர்த்திறம் மிக்க மல்லராகவும், திருமகளின் கணவராகவும், பெரிய வலிமை கொண்ட மள்ளராகவும் திருமால் உள்ளார்'' என்றும் பரிபாடல் போற்றுகிறது.

"திருமால் இவ்வுலகம் தோன்றாத காலத்தில் அச்சம் பொருந்திய ஊழிவெள்ள நடுவில் தோன்றிய வாய்மை பேசும் மகனாகிய பிரம்மனோடு, மலர்ந்த தாமரை மலர் அவனது சக்கர நிழலாகும்'' எனவும், பரிபாடல், திருமால் உயிரினங்களைத் தோற்றுவித்தற்குப் பிரம்மனைத்தம் உந்திக்கமலத்தில் தோற்றுவித்தார் எனவும், உலகத்து உயிர்களையும் சக்கராயுதம் காத்தது எனவும் குறிப்பிடுகிறது. எனவே, திருமால் இவ்வுலகத் தோற்றத்திற்கும், உலகில் தோன்றிய உயிரினங்களைக் காத்தற்கும் உரியவராகப் பரிபாடல் சித்திரிக்கிறது.

திருமாலின் வடிவத்தைப் பரிபாடல் ஓவியம்போல் சித்திரித்து விளக்குகிறது:

"திருமணி திரைபா டவிந்த முந்நீர்
வருமழை யிருஞ்சூல் மூன்றும் புரையு மாமெய்;
மாஅ மெய்யொடு முரணிய உடுக்கையை
நோனார் உயிரொடு முரணிய நேமியை;
செயிர்தீர் செங்கண் செல்வ!...."

(பரிபாடல்: 4; வரிகள் : 6 - 10)

"அழகிய நீலமணி, அலைகளின் ஒலிநீங்கிய கடல், சூல்கொண்ட கரிய மழைமேகம் ஆகிய மூன்றனை ஒத்திருக்கும் கரிய மேனியைக் கொண்டவன் திருமால்; அக்கரிய மேனியோடு முரண்பட்ட உடையினன்; பகைவர் உயிரோடு முரண்பட்ட சக்கரப்படை, குற்றம் நீங்கிய செங்கண்களைக் கொண்ட செல்வன்'' என்று பரிபாடல் அவன் தோற்றப் பொலிவை வருணிக்கிறது.

பரிபாடல் நரசிம்மாவதாரச் செய்தியைச் சில வரிகளில் சுருக்கி வெளிப்படுத்துகிறது. சுருங்கக் கூறி விளங்க வைத்தல் என்பதற்கு இவ்வரிகள் எடுத்துக்காட்டு.

"பிரகலாதன் திருமாலாகிய நின்னைப் புகழ்ந்தனன். இரணியன் நெஞ்சம் புகைந்து, மார்பில் சந்தனச் சாந்தும் புலர்ந்தது; பிரகலாதனுக்குப் பற்பல துன்பங்கள் அடையும்படி வருத்தினான்.

*மிக்கநோய் மலர்ந்து கூம்பிய நடுக்கத்தினையுடைய பிரகலாதன், மிக்க புகழுடையவன் ஆதலின், தன் தந்தையை இகழவேண்டியவனாயினும், இகழாத நெஞ்சினன் ஆயினன்; நீ (திருமால்) இரணியனை இகழ்ந்தனை; நல்ல நட்புடைய பிரகலாதனின் நன்மார்பைத் தழுவிக் கொண்டு, நட்புடன் மனம் ஒன்றாத அவனுடைய பெரிய கல்போன்ற மார்பில் படிந்திருந்த செருக்கு அழியும்படி ஒதுங்கினை; மிக்க இன்னல்களுடன் இடிமுரசு முழங்கியது; வெடிபட்ட தூணின் துண்டங்களுடன் இரணியனுடைய தசைத்துண்டங்கள் பல ஆகும்படிப் பிளந்த கூரிய நகங்களைக் கொண்டவனே!'' என்று தன் பக்தன் பிரகலாதனைக் காத்தருள, இரணியனை அழித்த செய்தியைப் பரிபாடல் சிறப்பாக வெளியிடுகிறது.*

*''திருமால் ஆதியில் கேழல் (கூர்மம்) வடிவெடுத்துக் கழுத்தால் ஊழிவெள்ளத்தில் மூழ்கியிருந்த நில உலகை வெளிக் கொணர்ந்து நிலைநிறுத்திய செயல், உலகின் மையத்தில் உயர்ந் துள்ள, பலரால் புகழப்பெறும் மேருமலையின் செயலுக்கு இணையானது'' என்னும் செய்தியை,*

''புருவத்துக் கருவல் கந்தரத்தால்
தாங்கியிவ் வுலகம் தந்தடிப் படுத்ததை நடுவண்
ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்''

(பரிபாடல்: 4; வரிகள் : 22 - 24)

*என்னும் பரிபாடல் வரிகள் தெரிவிக்கின்றன.*

*இயற்கைப் பொருள்கள் அனைத்திலும் திருமாலின் தன்மைகள் அடங்கியுள்ளன. அவை அனைத்தும் அவனிட மிருந்து பிரிந்து சென்று மீண்டும் அவனையே வந்து அடைகின்றன என்னும் உண்மையைத் தெளிவுபடுத்துகிறது. இதுவும் பகவத்கீதையின் கோட்பாட்டுக்கு இசைந்த கருத்தே.*

*ஞாயிற்றின் வெம்மையும், திங்களின் தண்மையும், மாரியின் சுரத்தலும் வண்மையும், உலகத்தின் புரத்தலும் பொறுமையும், காயாம்பூவின் நறுமணமும் ஒளியும், நீரிலுள்ள தோற்றமும் அகலமும், ஆகாயத்திலுள்ள உருவமும் ஒலியும், காற்றிலுள்ள பிறப்பும் ஒடுக்கமும் திருமாலிடத்தில் ஒருங்கே*

உள்ளன என்று பரிபாடல் வெளிப்படுத்துவதன் வாயிலாக, ஞாயிறு, திங்கள், மாரி, ஞாலம், (காயாம்பூ) பூ, நீர், ஆகாயம், காற்று முதலான அனைத்துப் பொருள்களும் திருமால் வடிவங் களே என்பதும், இயற்கையின் வடிவமாக இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான் என்னும் உண்மையைத் தெளிவு படுத்துகிறது.

அப்பாடல் வரிகள் இவையே:

''நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள;
நின் தண்மையும் சாயலும் திங்களுள;
நின் சுரத்தலும் வண்மையும் மாரியுள;
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள;
நின் நாற்றமும் ஒண்மையும் பூவையுள;
நின் தோற்றமும் அகலமும் நீரிலுள;
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்துள;
நின் வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள;
அதனால் இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏம மார்ந்த நிற் பிரிந்து
மேவல் சான்றன எல்லாம்''.

(பரிபாடல்: 4; வரிகள் : 25 - 35)

''இவ்வும் உவ்வும் அவ்வும்'' என்னும் தொடர், ''இவையும் உவையும் அவையும்'' என்னும் பொருளில் அமைந் தது. அனைத்துப் பொருள்களும் திருமாலிடமிருந்து பிரிந்து சென்று மீண்டும் திருமாலையே வந்தடைகின்றன; அவை அனைத்தும் திருமாலின் பாதுகாவலைக் கொண்டவை.

''திருமாலுக்குப் பகைவரும் இலர்; உறவினரும் இலர்; வேற்றுமை இல்லை; அதனைப் போற்றுகின்ற அடியார்கள் பெற்றால், திருமாலை அவர்கள் நினைத்த வடிவில் காணப் பெறுவர்; திருமாலுக்கென வேறு வடிவம் இல்லை'' என்றும் பரிபாடல் கூறுகிறது. திருமுருகாற்றுப் படையிலும், முருகன் அடியார்கள் நினைத்த வடிவில் முருகன் தோற்றமளிப்பவன் என்பது இதனுடன் ஒப்புநோக்கத்தக்கதாகும்.

''திருமால் ஆலமரம், கடப்பமரம், நல்ஆற்று நடுவும், காற்று வழங்குதல் அற்ற (தடுக்கும்) மலையும் பிறவும் அவை அவை பொருந்திய வெவ்வேறு பெயரினை உடையவன்; எவ் விடத்திலும் இருப்பவனும் அவனே! அவனுடைய பக்தர்களுக் குத் தொழும் தன்மைகளின்படி அமர்ந்திருப்பவனும் அவனே! அவர்க்கு ஏவலாளனும் அவனே! அவரவர் செய்கின்ற பொருள் களுக்குப் பாதுகாவலும் அவனே!'' என்று, எல்லாம் அவனே என்னும் உண்மையைப் பரிபாடல் வெளிப்படுத்துகிறது. அப் பரிபாடலின் வரிகள் வருமாறு:

''அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்!
எவ்வயினோயும் நீயே! நின்ஆர்வலர்
தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே!
அவரவர் ஏவலாளனும் நீயே!
அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே!

(பரிபாடல்: 4; வரிகள் : 66 - 73)

''திருமால் உறையும் திருமலை நீலமணிபோல் உள்ளது; பூந்துகில் மாலைக்கதிரவனின் (செவ்வான) வனப்பைப் பெற்றுள்ளது; புனையப்பெற்ற திருமுடியுடையவன் திருமால்; பெரிய மலையிலிருந்து (இறங்கும்) வீழும் பொன்மணியுடைய அருவியைப் போன்று மாறுபட்டுத் தோன்றும் மலையுடை யவன்; கருடப்புள் பொறிக்கப்பெற்ற - புனையப் பெற்ற கொடியினன்; அருள் கொண்ட விண்ணில் உள்ள நிலவு போன்று அழகு விளங்க, அன்புடையார்க்குத் தண்ணருளும் பகைவர்க்கு அச்சமும் செய்யும் சக்கராயுதம் கொண்டவன் திருமால்.

கார்ப்பருவம் வாய்த்தலால், பெரிய விண்ணில் அணியப் பெற்ற சூரியன் சந்திரன் ஆகிய இருவேறு மண்டிலங்கள்போல், சக்கரத்தையும் சங்கையும் கைகளில் ஏந்தியவன் திருமால். மின்னல் தொகுதிகளைப் போல் விளங்கும் பொன் அணிகளை அணிந்தவன்; அருவியின் உருவம் போன்ற முத்துமாலை அணிந்

தவன். இத்தகைய திருமாலின் அகன்ற திருமலையைத் தொடு
வோர்க்கு அவன் தங்கியுள்ள சொர்க்கமாகிய வைகுண்டமுட
நன்கு உரிமையுடையதாகும்'' என்று பரிபாடல் (13) தெ
விக்கிறது.

திருமால் எங்கும் நிறைந்திருப்பினும், அவனுடைய வைகுண்டம் போன்று சிறந்தது திருமலை என்று உயர்த்திக் கூறப்பெறுகிறது. இப்பாடலில் திருமலை 'திருவரை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. அகன்றமலையாகிய திருமலை திரு வேங்கடப் பெருமாள் கோயில் கொண்ட இடம்; வீடுபேறு பெற விரும்பும் அடியார்கள் திருமலையில் திருமாலை வழிபடுதல் சிறந்தது எனக் கருதி வந்துள்ளனர்.

திருமால் சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு என்னும் ஐந்து தன்மைகளாக உள்ளான். அவற்றை உணர்ந்து கொள்ளும் கருவியும் அவனே. ''முன்பு கூறிய ஐந்தனுள் ஒன்றில் போற்றிய விசும்பும் (ஆகாயம்) நீயே! இரண்டினுள் உணரும் காற்றும் நீயே! மூன்றினுள் உணரும் தீயும் நீயே! நான்கினுள் உணரும் நீரும் நீயே! ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்தனாலும் உணரப்படும் நிலனும் நீயே! அதனால், உன் பக்கத்தில் மூவேழ் உலகங்கள் அனைத்துக்கும் அடிப்படையான ஆதியும், அறமும், முதன்மையிலிருந்து மாறுபட்ட காலமும், ஆகாயமும், காற்றுடன் தீயும் நீயே!'' என்று திருமால் அனைத்து மானவன் எனப் போற்றுகிறது.

''சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு
அவையும் நீயே அடுபோர் அண்ணால்!
அவையவை நீயே அடுபோர் அண்ணால்!
அவையவை கொள்ளும் கருவியும் நீயே!
முந்தியாம் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே!
இரண்டி னுணரும் வளியும் நீயே!
மூன்றி னுணரும் தீயும் நீயே!
நான்கி னுணரும் நீரும் நீயே!
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே!
அதனால், நின்மருங் கின்றுமூவேழ் உலகமும்

மூலமும் அறனும் முதன்மையின் இகந்த
காலமும் விசும்பும் காற்றொடு கனலும்

(பரிபாடல்: 13; வரிகள் : 14 - 25)

என்னும் 13ஆம் பரிபாடல் வரிகளால் ஐம்பூதங்களின் தோற்றமும் அவற்றின் சேர்க்கையும் அறிவியல் தன்மையுடன் உணரலாகின்றன.

இசைமையாகிய ஓசையால் அறியப்படுவது வானம்.

ஓசை, ஊறு ஆகிய இரண்டாலும் அறியப்படுவது காற்று.

ஓசை, ஊறு, ஒளி ஆகிய மூன்றாலும் அறியப்படுவது தீ.

ஓசை, ஊறு, ஒளி, சுவை ஆகிய நான்காலும் உணரப்படுவது நீர்.

ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்தாலும் உணரப்படுவது நிலம்.

வானம், காற்று, தீ, நீர், நிலம் ஆகிய பஞ்சபூதங்களின் தோற்றம் இப்பரிபாடலால் அறியலாகிறது. இவற்றின் தனித்தனி உருவமாகவும், ஒட்டுமொத்த வடிவமாகவும் உள்ள இறைவனாகிய திருமால், இவற்றால் உருவாகும் பல பொருள்களின் - பல உயிரினங்களின் வடிவமாகவும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் என உய்த்துணர்வதன் மூலம், எங்கும் எதிலும் இறைமை துலங்கும் உண்மையை அறியலாம்.

ஆதிசேடனாகிய பாம்பணையின் மீது திருமால், அறிதுயில் கொள்வதாகவும், பலராமனாக இருப்பதாகவும், கிம்புரி என்னும் அணி அணிந்த களிறாக விளங்குபவனும் திருமால் எனப் பரிபாடல் புராணச் செய்திகளை வெளிப்படுத்துகிறது.

"..................ஆயிரம் விரித்த
கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளவஞ் சூடிய அறிதுயி லோனும்"

(பரிபாடல்: 13; வரிகள் : 28, 29)

எனவும்,

''விறன்மிகு வலியொலி பொலிபுகழ் புழுதியின்
நிறனுழு வளைவாய் நாஞ்சி லோனும்''

(பரிபாடல்: 13; வரிகள் : 32, 33)

எனவும்,

''இலங்கொளி மருப்பின் களிறும் ஆகி
மூவுரு வாகிய தலைபிரி ஒருவனை''

(பரிபாடல்: 13; வரிகள் : 36, 37)

எனவும் பரிபாடல் கடவுளின் பல வடிவங்களை உணர்த்துகிறது. பல வடிவங்களாகத் தோற்றம் அளித்தாலும், திருமாலாகிய இறைவன் ஒருவனே என்னும் உண்மையை, 'ஒருவனை' என்னும் சொல்லால் உறுதிப்படுத்துகிறது. 'ஒருவன்' என்பதற்கு 'ஒப்பற்றவன்' என்னும் பொருளும் உண்டு.

திருமாலாகிய ஆண்டவன் பல்வேறு இயற்கை வடிவங்களாகவும் தோற்றமளிக்கிறான்.

பாம்புக்குப் பகையாகிய கருடனைக் கொடியாகக் கொண்ட குறையாத செல்வமுடையவன் திருமால்; திருமாலின் ஏவலால் கருடச்சேவல் முதுமொழியாகிய மறையை ஓதுகின்றதாகப் பரிபாடல் குறிப்பிடுகிறது. காராகிய மேகம், காயாம்பூ, கடல், இருள், நீலமணி இவை ஐந்தன் நிறங்களுக்கு ஒத்த அழகிய மேனியையுடையவன் திருமால். திருமாலின் வாய்ச் சொற்கள் வலம்புரிச் சங்கின் ஒலியையும் மறைமொழியாகிய வாய்மை மொழியையும் ஒத்திருக்கும். திருமாலின் சினமொழி வானின் அதிர்வையும் இடியின் ஒலியையும் போன்றிருக்கும்.

திருமாலின் வண்ணமும் வாய்ச் சொற்களும் இயற்கைப் பொருள்களின் சாயலையும் ஒலியையும் ஒத்திருப்பன என்பதால் இயற்கையே ஆண்டவன் உருவமாகவும், இயற்கையொலி ஆண்டவன் ஒலியாகவும் விளங்கும் தன்மையை உணரலாம். ஆண்டவனைக் கட்புலனாலும் செவிப்புலனாலும் உணரத்தக்க பான்மையை அறியலாம்.

''கார்மலர் பூவை கடலை இருள்மணி
அவையைந்தும் உறழும் அணிகிளர் மேனியை;
வலம்புரி வாய்மொழி அதிர்புவான் முழக்குச்சொல்
அவைநான்கும் உறழும் அருள்செறல் வயின்மொழி''

( வரிகள் : 42 - 45)

என்னும் பரிபாடல் வரிகள் (பாடல் எண். 13) திருமாலின் வண்ணத்தையும் வாய்ச்சொற்களையும் பற்றித் தெரிவிப்பதுடன், அவை இயற்கைப் பொருள்களோடு ஒத்து விளங்கும் தன்மை யையும் உணர்த்துகின்றன.

''வாழ்ந்து முடிந்த உயிரினங்களும், வாழும் உயிரினங் களும், தோன்றுதற்குரிய உயிரினங்களும் திருமாலின் திருவடி நிழலில் உள்ளவை'' என்னும் கருத்தில்,

''முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவைமூன்றும்
கடந்தவை யமைந்த கழலின் நிழலவை''

( வரிகள் : 46, 47)

என்னும் வரிகள் அமைந்துள்ளன. உயிரினங்கள் கடவுளாகிய திருமாலை அடைபவை, கடவுளிடமிருந்தே சென்றவை, வாழ் பவை, மீண்டும் தோன்றுபவை என்பதால், உயிரினங்கள் வாழ்ந்து இறந்தாலும் அவை மீண்டும் தோன்றுபவை என்பதும் உய்த்துணரப்படும். உயிரினங்கள் உடலால் அழிவன; உயிராகிய ஆன்மா அழிவதில்லை என்பதால், இறைவனிலிருந்து தோன்றி இறைவனையே அடைகின்றன என உணரலாம். திருமாலாகிய இறையைப் போற்றும் உயிரினங்கட்கு இருமை வினை இல்லை என்பதால் பிறப்பும் இறப்பும் இல்லை.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார்''

என்னும் குறளும் இக்கருத்தையே கொண்டுள்ளது.

''ஒருமை வினையாகிய எல்லாவற்றையும் காத்தருளும் மனத்தினையுடையவன் திருமால்.

திருமாலின் திருவடிகளும் கைகளும் கண்களும் வாயும் செந்தாமரை மலரைப் போன்றன.

*திருமாலின் தொடியும் உந்தியும் தோளணியாகிய வ*
*யமும் தாள்களும் தோள்களும் கழுத்தும் பெரியன.*

*மார்பும் அல்குலும் மனமும் பரந்தவை. கேள்வியறிவு*
*அறிவும் அறப்பண்பும் நுண்ணியன.*

*வேள்வியில் விருப்பும் மறத்தில் வெம்மையு*
*உடையவன்'' என்னும் பொருளில்,*

''ஒருமை வினைமேவும் உள்ளத்தினை;
அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை
அடியும் கையும் கண்ணும் வாயும்
தொடியும் உந்தியும் தோளணி வலயமும்
தாளும் தோளும் எருத்தொடு பெரியை;
மார்பும் அல்குலும் மனத்தொடு பரியை;
கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியை;
வேள்வியும் மறனும் விருப்பொடு வெய்யை''

(பரிபாடல்: 13; வரிகள் : 49 - 5

*என்னும் பரிபாடல் (13) வரிகள் திகழ்கின்றன. ''நீங்காத ஆண்*
*யும், சினவாச் செங்கண்களும், செருக் களத்தில் பகைவ*
*வெல்லும் சக்கரப்படையையும் உடைய செல்வனே! வெல்லு*
*போரினையும் நெருப்பைப் போன்று மலர்ந்த வெட்சிப்*
*வைத்துழாய் மாலையின் இடையில் தொடுத்தணிந்த மார்பி*
*யும் உடையானே! அன்னை என நினைத்து நின் திருவடிகளை*
*தொழுதோம்.*

*பன்முறை அடுத்தடுத்து நின்திருவடிகளை வணங்*
*னோம்; வாழ்த்தினோம். முன்பிறவிகளில் யாம் செய்த தவ*
*பயனால், நின் திருவடிகளை வாழ்த்தினோம். இனிமேலு*
*வரும் பிறவிகளில் எம் விருப்பம் இதுவே'' என்னும் பொருளி*

''அறாஅ மைந்தின் செறாஅச் செங்கண்
செருமிகு திகிரிச் செல்வ! வெல்போர்
எரிநகை இடையிடுபு இழைத்த நறுந்தார்ப்
புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்!

அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்;
பன்மாண் அடுக்க இறைஞ்சினெம்; வாழ்த்தினெம்
முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்
இன்னும் இன்னுமெம் காமம் இதுவே''

(பரிபாடல்: 13; வரிகள் : 57 - 64)

என்னும் பரிபாடல் (13) வரிகள் அமைந்து, திருமாலை எல்லாப் பிறவிகளிலும் தொழுதல் வேண்டும் என்னும் உயரிய குறிக்கோளை உணர்த்துகின்றன.

இறைவனை வணங்குவதால் பிறவி நீங்கிப் பேரின்பம் கிட்டுகிறது. பிறவிகள் அடுத்தடுத்து வந்தாலும் திருமாலை வணங்குதலே நம் கடமை என்பதும் முடிவான கருத்தாகும்.

''திருமாலிருஞ்சோலைமலை குலமலைகளுள் சிறந்தது; ஆரவாரம் பொருந்திய கடலும் கானலும் போன்றும், புல்லிய சொல்லும் பொருளும் போன்றும், எல்லாமாகி வேறு வேறு வடிவங்கொண்டு, ஒரு தொழில் புரியும் இருவராகிய திருமாலையும் பலராமனையும் கொண்டு விளங்கும் நீண்டு நிலைத்து உயர்ந்த குன்றம் திருமாலிருஞ்சோலை மலை. திருமாலின் அருளில்லாமல் துறக்க உலகை அடைய முடியாது'' எனப் பரிபாடல் (15) தெரிவிக்கிறது.

''....... குலவரை சிலவினும்
சிறந்தது; கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம் வேறுவேறுருவின் ஒருதொழில் இருவர்த்
தாங்கு நீள்நிலை ஓங்கிருங் குன்றம்
நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்.

(பரிபாடல் : 15 வரிகள்: 10 - 16)

அரிதாகப் பெறத்தக்க துறக்கத்தை எளிதாகப் பெறும் உரிமையை மாலிருங்குன்றம் அளிக்கவல்லது. அதற்காகத் திருமாலைப் போற்றிப் பாடுவதாகப் பரிபாடல் உணர்த்துகிறது.

''அரிதிற்பெறு துறக்கம் மாலிருங் குன்றம்
எளிதிற்பெற லுரிமை ஏத்துகம் சிலம்ப!''

(பரிபாடல்: 15; வரிகள் : 18-19

*திருமாலிருஞ்சோலையில் கோயில் கொண்டிருக்கு திருமாலுக்கு ஆதிசேடன் தன் தலைகளால் நிழல் செய்வான் பலராமன் மார்பில் துலங்கும் வெண்கடப்ப மாலையை போன்று அங்கு அருவி வீழும்; சிலம்பாறு அருவி மாலை அணிந்து சிறப்புடனும் அழகுடனும் விளங்கும். அதனுட தொடர்புபடுத்திப் பேசும் சிறப்பினது திருமாலிருஞ்சோலை மலை.*

*தாம் விரும்பும் விருப்பங்களை மக்கள் ஆசை வி களாக விதைத்துப் பயன்பெறுவர் என்னும் புகழ்த் தன்மை உடையது. நிலைபெற்ற தண்மையும் இளவெயிலும் கலந் இருளின் வளர்ச்சி எனப் பொன்னால் புனையப்பெற்ற உடுக் யுடன் அமர்ந்துள்ள (கோயில் கொண்டுள்ள) நிலையை மக்கே நினையுங்கள்! அவன் வீசும் புகழையும் கேளுங்கள்!' என்று திருமாலிருஞ்சோலையின் தண்மையில் அருள்புரியு திருமாலின் தன்மையும் பேசப்படுகிறது.*

*சுனையெங்கும் நீலமலர்கள் (குவளை மலர்கள்) மலர் துள்ளன; சுனையைச் சூழ்ந்த கிளைகளிலெல்லாம் அசோ மலர்கள் மலர்ந்துள்ளன. பலநிறக் காய்கனிகள் உள்ளன; மொக் களுடன் வேங்கை மலர்கள் மலர்ந்துள்ளன. அவை மாயே னாகிய திருமாலைப் போன்ற தன்மையுடையன. சென்று தொ வீராக! கண்டு பணியுங்கள்! பெரிய குன்றம் என்னும் பெயர் பர இருக்கிறது; பெரிய ஆரவாரத்தைக் கொண்ட கடல்கொண் உலகின் தொன்மைப் புகழையுடையது. கண்டவர்களுடை மயக்கத்தை அறுக்கும் விரும்பத்தக்க கடவுளாகவும் அம்மலை உள்ளது.*

*குட்டிகளைக் கொண்ட குரங்குகள் மலைக்குமலை தாவுகின்றன; அரும்புகளைக் கொண்ட முல்லை, முறையா*

மலரும் நிகழ்வைக் காட்டுகின்றது; நீலமணியோ என மருட்சியைத் தரும் சுனைநீர் உள்ளது; மயில்கள் கிளைகளில் அகவுகின்றன; குருக்கத்தி இலை உதிருகின்றது; குயிலினங்கள் கூவுகின்றன; புகழப்படும் குழலும் பாண்டிலும் இயம்ப, பாடுவோர் நாவினால் பாடும் பாடல் முழவுடன் சேர்ந்து ஒலிப்பது போல இருக்கும்; அம்மலையில் தோன்றும் ஒலிகள் இடைவிடாது ஒலிக்கும்; பகைவர்களாகிய அவுணர்களை எதிர்த்துப் போரிட்டு அழித்தவனுடைய நிறம் போன்ற குன்று.

இப்பாடலில் உள்ள நீலமலர்கள் திருமாலின் நீலவண்ணத்தைப் போன்றவை; சிவந்த மலர்கள் திருமாலின் பொன் உடுக்கையைப் போன்றிருக்கும்; காய்கனிகள் திருமாலின் அருளுக்கு எடுத்துக்காட்டுகள்.

''ஒன்னார்க் கடந்தட்டான் கேழிருங்குன்று'' என்னும் தொடர், திருமாலின் நிறம்போன்று அமைந்த மலை என்னும் பொருளைத் தருவது. எனவே, திருமாலிருஞ் சோலையின் இயற்கை அமைப்பே திருமாலை நினைவூட்டுவதாகும்.

திருமாலிருஞ்சோலை மலையே திருமால் வடிவுடன் தோன்றுதவதனால், அதன் திசையைத் தொழுமாறு உணர்த்துகிறது 15 ஆம் பரிபாடல்; மனைவி மக்களுடனும் உறவினர்களுடனும் சென்று வணங்குமாறு உணர்த்துகிறது.

திருமாலின் கண்கள் அவனது உந்தித் தாமரையைப் போன்று சிவந்தவை; விரும்பத்தக்க காரிருள்போன்ற மயக்கம் தரும் நீலமணிமேனியன்; எவ்வகைப்பட்ட உலகத்திலும் தோன்றி அந்த இடத்து மக்களின் மயக்கமாகிய துன்பத்தைக் களைபவன். அன்பு பொருந்திய பெரிய மலைக்குரியவன்.

இச்செய்திகளை,

''தைய லவரொடும் தந்தா ரவரொடும்
கைம்மக வோடும் காதலவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்
புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்

வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்
எவ்வயின் உலகத்தும் தோன்றி, அவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பம் களைவோன்
அன்பது மேஎ இருங்குன் றத்தான்.'' (46-53 வரிகள்)

*திருமாலின் வடிவம் அழகாகப் பரிபாடலில் வருணிக்கப் பட்டுள்ளது; தேன் பொருந்திய பசிய துளவமாலை அணிந்தவன்; கரிய குன்றம் போன்றவன்; பேரொளியை யுடையவன்; ஒப்பற்ற குழையை அணிந்தவன்; கருடப்புள் அணிசெய்யும் பொற்கொடி யினன்; வளைந்த அழகிய கூர்மையான நாஞ்சிலாகிய கலப்பைப் படையைக் கொண்டவன்; சினம் பொருந்திய தண்டை உடையவன்; வெற்றிதரும் வலிய சக்கரப்படையை உடையவன்; கட்டமைந்த வில்லையும் வலிய அம்புகளையும் உடையவன்; புள்ளிகள் உடைய கொத்தாக அமைந்த பாராவளையினை உடையவன்; புள்ளிகள் கொண்ட வாளினையுடையவன்; நன்மை புரியும் அழகிய சிறந்த மறைமொழி இதுவென உரைப்பதனால், உள்ளத்தில் பொருந்தி இறைவாழும் திருமாலிருங் குன்றத்தின் அடியில் உறைதல் பொருந்துக என்று பெரும் பெயர்கொண்ட இருவரை (திருமாலையும் பலராமனையும்) போற்றி வணங்கு வோம்'' என்று கீழ்வரும் பரிபாடல் வரிகள் உணர்த்துகின்றன:*

''கள்ளணி பசுந்துளவினவை; கருங்குன் றனையவை;
ஒள்ளொளியவை; ஒருகுழையவை;
புள்ளணி பொலங் கொடியவை;
வள்ளணி வளைநாஞ்சிலவை;
சலம்புரி தண்டேந்தினவை;
வலம்புரி வய நேமியவை
வரிசிலை வய அம்பினவை
புகரிணர்சூழ் வட்டத்தவை; புகர்வாளவை;
எனவாங்கு,
நலம்புரீஇ அஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென உரைத்தலினெம் உள்ளமர்ந்து இசைத்திறை
இருங்குன்றத்து அடியுறை இயைகெனப்
பெரும்பெயர் இருவரைப் பரவுதுந் தொழுதே!''

(பரிபாடல்: 15; வரிகள் : 54-66)

திருமாலின் தன்மைகள் இன்னவை என்று

''நலம்புரீஇ அஞ்சீர் நாம வாய்மொழி''

எனப் பரிபாடல் உணர்த்துகிறது. எனவே, மறைகளை ஓதி அதில் உள்ள ஆன்மீகச் செய்திகளையும் நம் தமிழ்ப் புலவர்கள் தம் பாடல்கள் சிலவற்றுள் உணர்த்தியுள்ளனர் என அறியலாம்.

## பரிபாடல்களில் முருகனைப் பற்றிய ஆன்மீகச் செய்திகள்

பரிபாடல்களுள் முருகனாகிய செவ்வேளைப் பற்றிய பாடல்கள் எட்டு உள்ளன. முப்பத்தொரு பாடல்களுள் எஞ்சி நின்றவை இவையே.

பரிபாடலின் ஐந்தாம் பாடல் முருகனைப் பற்றியது. இதில் முருகனுடைய வேலின் ஆற்றலைப் புலப்படுத்தும் செய்தி சொல்லப்படுகிறது.

பரவிய குளிர்ந்த கடலில் உலகம் துகள்படும்படிப் புகுந்து, மிக உயர்ந்த 'பிணிமுகம்' என்னும் யானையின் மீது அமர்ந்து ஊர்ந்து, போரிட்டு, தீக்கொழுந்து கடலை வற்றும்படிச் சுழற்றி விட்டெறிந்து, துன்பம் செய்யும் அசையும் சூரபதுமனாகிய மாமரத்தின் வேர்களை வெட்டி வெற்றி பெற்ற மக்களுள் ஒருசேரப் பெயர்பெற்ற கொன்று உண்ணலுக்கு அஞ்சாத கொடிய செயல்களையும் கொல்லும் தகைமையையும், மாய அவுணர் களைப் பக்கத்தே அறுமாறு கொன்ற வேல்'' என்று முருக னுடைய வேலின் வெற்றி பேசப்படுகிறது.

''முருகன் குளிர்ந்த சோலைகளைக் கொண்ட நாவலந் தீவின் வடக்கே பொழிலிடத்தில் 'கிரவுஞ்சம்' என்னும் பறவை யின் பெயர்தாங்கிய உயர்ந்த மலையைப் பிளந்து வழியை உண்டாக்கினான்.

முருகன் மென்மையான ஆறுதலைகளையும் பன்னி ரண்டு முழவுபோன்ற தோள்களையும் கொண்ட செஞ்ஞாயிற்றின்

*அழகிய நிறத்தினன்; தாமரை மலரில் பிறந்தவன்'' என்று பரிபாடல் முருகனுடைய கிரவுஞ்ச மலையைத் துளைத்து வழியுண்டாக்கிய ஆற்றலையும் சரவணப் பொய்கையில் தாமரை யில் பிறந்த அவன் பிறப்பைப் பற்றியும் குறிப்பிடுகிறது:*

''நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை!
மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றோர் நிறத்தகை நளினத்துப் பிறவியை''.

(பரிபாடல்: 5; வரிகள் : 8 - 12)

*''சினமுடைய கடவுளின் (சிவபிரான்) குழந்தையே! செவ்வேளே! சால்பு உடையோனே! தலைவனே! என்று அச்சம் பொருந்திய விழவுக்களத்துள் வேலவன் போற்றும் வெறிஅயர் செயல்கள் உள்ளன; அவை உண்மையானவை அல்ல; பொய் யானவையும் அல்ல. எல்லையற்ற உலகங்கள் அனைத்தும் நீயே! ஆதலின் சிறப்படைபவனே! சிறப்பின்றியும் நீங்குவை. மற்ற வர்கள் சிறந்தவற்றுள் உயர்வு அடைதலும், பிறவிகளுள் இழி பிறவி அடைதலும் உன்னுடைய வல்லமையினாலேயே!'' என்னும் பொருளில் முருகனுடைய வல்லமை பேசப்படுகிறது.*

''சிறப்பினுள் உயர்பாகலும்
பிறப்பினுள் இழிபாகலும்
ஏனோர் நின் வலத்தினதே''

(பரிபாடல்: 5; வரிகள் : 19-21)

*என்னும் பரிபாடல் வரிகள் உயர்வுச் சிறப்புக்கும் இழிபிறப் புக்கும் காரணம் முருகன் அருளே என்று உணர்த்துகின்றன.*

*முருகனது பிறப்பு பரிபாடலில் விளக்கமாக அமைந் துள்ளது.*

*சிவபெருமானுக்கும் உமாதேவிக்கும் நேர்ந்த கூட்டத் தின் காரணமாக உமாதேவி கருத்தரித்தனள். இந்திரன் அக் கருவைச் சிதைக்கச் சிவனிடமே வரம்பெற்றுத் தன் கனன்று எரியும் தன் மழுப்படையினால் கருவைச் சிதைக்கிறான். சிதைந்த*

ருவை ஏழுமுனிவர்கள் பெற்றுத் தம் மனைவியர் அப்படியே ’ற்று வளர்த்தால் அவர்தம் கற்புநெறி தவறும் என்று கருதி, ׀ாகத்தீயில் அதனை அவியுடன் இடுகின்றனர்; முத்தீக்கள் உண்டு ׀ர்சிலாக எஞ்சி நின்ற அக்கருவினை அருந்ததி நீங்கலாக மற்ற ஆறு கார்த்திகைப் பெண்டிர் உண்டு கருப்பையிலே தாங்கு ின்றனர்.

இமயத்தில் உள்ள பைஞ்சுனையில் மலர்ந்த தாமரை ›லர்ப் படுக்கைகளில் ஆறுகுழந்தைகளைப் பெறுகின்றனர்.

இதனை,

''கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்;
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற் சூலினரே;
நிவந்தோங்கு இமையத்து நீலப் பைஞ்சுனைப்
பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்''

(பரிபாடல்: 5; வரிகள் : 44 - 49)

ஏன்னும் பரிபாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

அவ் ஆறு குழந்தைகளை இந்திரன் தாக்க முற்பட்ட போது, அவை ஒன்றாகி - ஒருவனாகி முருகனாக அமைந்தன.

இச்செய்தியை,

''பெரும்பெயர் முருக! நின் பயந்த ஞான்றே
அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்
எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென
அறுவேறு துணியும் அறுவ ராகி
ஒருவனை வாழி! ஓங்குவிறல் சேஎய்!''

(பரிபாடல்: 5; வரிகள் : 50-54)

என ஐந்தாம் பரிபாடல் புலப்படுத்தி முருகனைப் போற்றுகிறது.

முருகனுடைய படைக்கருவிகள் அற்ற வெறுங்கைக்கே இந்திரன் தோற்றான். தேவர்கள் திறைப்பொருள்களை முருக னுக்கு வழங்கினர்.

தீக்கடவுள் தன் உடம்பினின்றும் ஒரு கூறு பிரித்து எடுத்துக் கொடியாக வாரணத்தைத் (கோழிச்சேவல்) தந்தனன். இந்திரன் அழகிய பீலியுடைய மயிலை வாகனமாகத் தன் உடலின் ஒரு கூறு பிரித்துத் தந்தான்.

எமன் தன் உடலின் ஒரு கூறு பிரித்து வெள்ளாட்டுக் குட்டியாக்கி வழங்கினான்.

இவ்வாறே பிற தேவர்களும் வில், தோமரம், வாள், ஈட்டி, குடாரி, கணிச்சி, கனலி, மாலை, மணி ஆகிய இவற்றை முருகனுடைய பன்னிரு கைகட்கும் தர அவனும் அவற்றை ஏற்றான்.

இவ்வாறு குழந்தை நிலையிலேயே முருகன் புகழின் எல்லை கடந்து விளங்கினான். இச்செய்தியையும் பரிபாடல் பெருமையுடன் பேசுகிறது.

முருகனுடைய அருள்தன்மையை அடைதற்குரியாரும் அடைய இயலாதாரும் பற்றியும் பரிபாடல் உணர்த்துகிறது.

அவன் அருளை அறங்கொண்டோரும் நிலைபெற்ற நற்குணம் உடையோரும் மாதவம் உடையோரும் அவனை வணங்கியோரும் அடைவர். அழிக்கும் தீயைப் போன்ற நெஞ்சத்தில் சினம் நீட்டித்தவர்களும் அறநெறி சேராச் சீர்மையற்றோரும் தவமழிந்து முருகனை மறந்தோரும் மறு பிறப்பு இல்லை என்பாரும் முருகனை அடைய மாட்டார்கள்.

இந்த உண்மையை,

''நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர்
அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்
சேரா வறத்துச் சீரி லோரும்

அழிதவப் படிவத்து அயரி யோரும்
மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார்''

(பரிபாடல்: 5; வரிகள் : 71 - 76)

என ஐந்தாம் பரிபாடல் தெரிவிக்கிறது.

அப்பாடல், முருகனிடமிருந்து பொருளும் பொன்னும் போகமும் இரந்து வேண்டவில்லை எனவும், அருளும் அன்பும் அறனும் இரந்து வேண்டுபவை எனவும் தெரிவிக்கிறது.

''.......................யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!''

(பரிபாடல்: 5; வரிகள் : 77 - 81)

பொன்னும் பொருளும் போகமும் ஆசையை வளர்ப் பன; அவற்றால் நிலையான இன்பம் இல்லை; அருளும் அன்பும் அறனும் உயிர்களிடம் நேயத்தை வளர்த்து உதவுவன; பேரின் பத்திற்கு அடிப்படையானவை. இறைவனைச் சேர உதவுவன. நிலையான உண்மையைப் பரிபாடல் உணர்த்திப் பயனளிக்கிறது.

பரிபாடலின் **எட்டாம் பாடல்** முருகனைப் பற்றியது. திருப்பரங்குன்றத்திற்குரிய முருகனை வணங்கும் தேவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

திருப்பரங்குன்றத்திற்குத் திருமாலும் சிவபிரானும் பிரம்மனும் உலக இருளைப் போக்கிய ஆதித்தர் பன்னிருவரும், மருத்துவர்கள் இருவரும், வசுக்கள் எண்மரும், பதினொரு உருத் திரர்களும், திசைகாப்போர்களாகிய இந்திரன், நிருதி, இயமன், அக்கினி, வருணன், வாயு, குபேரன், ஈசனாகிய எட்டுப் பேர் களும் மற்றுமுள்ள தேவர்களும் அமரர்களும் அவுணர்களும் வேதங்கற்ற மிக்க தவ முனிவர்களும் முருகனைப் போற்றுதல் குறித்து வருகின்றனர். ஆகவே, திருப்பரங்குன்றம் இமய மலைக்கு நிகராக உள்ளது'' என்று அப்பாடல் திருப்பரங் குன்றத்தை உயர்த்திப் பேசுகிறது.

முருகனை ஈன்றபோது பாயலாகத் தாங்கிய தாமரை மலர்களைக் கொண்ட சரவணப் பொய்கை இமயத்தில் சிறந்து விளங்குதல்போல், திருப்பரங்குன்றத்தில் உள்ள அருவி விழும் சுனை ஒப்புடையதாக உள்ளது.

இந்த உண்மையை,

''இமயக் குன்றினிற் சிறந்து
நின் னீன்ற நிரையிதழ்த் தாமரை
மின் னீன்ற விளங்கிணர் ஊழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்கும் நின்குன்றின்
அருவிதாழ் மாலைச் சுனை''.

(பரிபாடல்: 8; வரிகள் : 12 - 16)

என்னும் பரிபாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

பரிபாடலின் **எட்டாம் பாடலில்,** தலைவன் தலைவிக்கு இடையே ஊடல் தோன்றுகிறது. தலைவன் பரத்தையரைக் கூடிவிட்டு வந்ததனால், அவர்களின் உடலின் நறுமணம் அவன்மீதும் படிந்து நாறுவதாகத் தலைவி ஊடிக்கொள்கிறாள். தலைவன், திருப்பரங்குன்றத்துக் குளிர்ந்த மலைச்சாரலின் மீதும் பார்ப்பார் மீதும் சூளுரைத்து மறுக்கிறான்.

''பரத்தையரைக் கூடிப் பெற்ற மணமன்று; கனிகளின் மீதும் மலர்களின் மீதும் படிந்து வீசும் காற்றில் கலந்து வரும் நறுமணம் எனத் தெளிக!' எனக் கூறுகிறான். இவ்வூடலைக் கண்ட தோழி தலைவனுக்கு அறிவுரை சொல்கிறாள்.

''சான்றோர் பெற்ற மகனாக இருந்தும் தகாதவற்றைச் செய்யும் மகனே! பெற்றவர்க்கு ஒரு பெண் இவள்; இருண்மையும் ஈரமும் மைதீட்டப்பெற்ற கண்களும் கொண்டவள். பெற்றார்க்கு அரியசுமை உடையவளோ? இவளுக்கு என்ன ஆகும் என்பதை அறிந்திலேன்!

''நீர் வரவைக் கொண்ட வையை மணலைத் தொட்டேன்; மணவாழ்க்கை தரும் முருகவேளின் குளிர்ந்த திருப்பரங்குன்றத்து அடி தொட்டேன்'' என்று ஆணையிட்டுக் கூறுவாய்.

உறவினதான வையை மணலிடத்து உனக்குள்ள உறவும் இதுவோ? ஏழுலகங்களை ஆளும் திருமுருகப்பெருமான் மலைமீது நீ கொண்ட அன்பு இதுதானோ?''

''எம்மிடம் அருள் கொண்டதாகக் காட்ட, அருள் தன்மையுடைய முருகன்மீது பொய்ச்சூள் வைத்தால், அளவற்ற அணங்குகளோடு உள்ளவேல் உன்னை உண்டுவிடும். வெற்றியுடைய வெம்மையுள்ளவன் ஊர்ந்து செல்லும் மயில், வேல் ஆகியவற்றின் நிழல் தொட்டுச் சூள் உரைக்காதே! அறவராகிய சான்றோரின் அடிதொட்டுச் சூள் உரைத்தாலும், அவற்றின்மீது சூள் வைக்காதே! குறவன் மகள் வள்ளியின் மீது ஆணை கூறவே கூடாது! வாய்மையாளர் தொட்டுச் சூள் உரைக்கும் திருப்பரங்குன்றத்தோடு வையைக்குத் தக்க சிறப்பளிக்கும் மணல் மீதும் சூள் உரைக்காதே!'' என்பதனால், முருகன் கோயில் கொண்டுள்ள திருப்பரங்குன்றம் சான்றோரும் வாய்மையாளரும் வணங்கத்தக்க பெருமையுடையது என உணரலாம். அங்குப் பொய்மைக்கு இடமில்லை.

''ஏழுலகும் ஆளிதிருவரைமேல் அன்பளிதோ
என்னை அருளி அருள்முருகு சூள்சூளின்
நின்னை அருளில் அணங்கான்மெய் வேல் தின்னும்
விறல்வெய்யோன் ஊர்மயில் வேல்நிழல் நோக்கி
அறவர் அடி தொடினும் ஆங்கவை சூளேல்!
குறவன் மகளாணை கூறேலோ கூறல்!
ஐய! சூளின் அடிதொடு குன்றொடு
வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்!''

(பரிபாடல்: 8; வரிகள்: 64-71)

என்று பரிபாடல், வாய்மையையும் முருகனையும் வள்ளியையும் வேலையும், அவன் கோயில் அருகே உள்ள வையையையும் வையை மணலையும் உயர்த்திப் போற்றுகிறது.

தலைவன், தோழியின் உரையைக் கேட்டு, ''பகைவர்களைச் சுட்டுத் துன்புறுத்தும் இறைவனாகிய முருகன் என் துயர்மிகச் செய்வானாயின் உங்கள் குறைகளை அவன் திருவடி சேர்ந்து கூறுவீர்களாக!'' என்று கூறுகிறான். இக்கூற்றிலிருந்து முருகன் அவனிடம் வேண்டுவார்க்குக் குறைகளைத் தீர்த்தருளும்

தன்மையன் என்பதும் அறியக் கிடக்கிறது. எவ்வாறு அவனைத் தொழவேண்டும் என்னும் நெறிகளையும் தலைவன் உணர்த்துகிறான்.

''மலர்களை மிகுதியாக அவன் மீது தூவுவோம்; பலியினை ஊட்டுவோம்; தாளம் கொட்டுவோம்; தடாரிப் பறையினை முழக்குவோம். முருகன் திருவடிகளைத் தொழுதற்குரிய குளிர்ந்த திருப்பரங்குன்றம்'' என்று உணர்த்துகிறான் தலைவன்.

''மிக ஏற்றுதும் மலர்; ஊட்டுதும் அவி;
தோற்றுதும் பாணி; எழுதும் கிணை; முருகன்
தாள்தொழு தண்பரங்குன்று.

(பரிபாடல்: 8; வரிகள் : 80 - 82)

''தண்பரங்குன்று'' என்பதனால், திருப்பரங்குன்றம் முருகன் அருள் திகழும் இடம் என்னும் பெருமையைப் பெற்றதாகிறது.

பொய்ச்சூள் உரைத்த தலைவனுக்கு, முருகனால் துன்பம் நேரக்கூடாது என்பதற்காகத் தலைவி, ''திருப்பரங்குன்றத்து முருகப்பெருமான் கோயிலுக்குச் சென்று அங்குத் தொங்கும் மணியைக் கையில் தாக்கி முருகன் திருவடிகளில் தலைசேர்த்து வேண்டிக் கொள்கிறாள். நீ உன்னுடைய பரத்தையரை அடையச் செல்லும் போது, தலைவியின் தன்மையைக் காண்க!'' என்று உணர்த்துகிறாள்.

''பருவத்துப் பன்மாண்நீ சேறலின் காண்டை
எருமை இருந்தோட்டி எள்ளீயும் காளை
செருவம் செயற்கென்னை முன்னைத்தன் சென்னி
அருள்வயினான் தூங்கும் மணிகையால் தாக்கி
நிரைவளை ஆற்றிருஞ் சூள்''

(பரிபாடல்: 8; வரிகள் : 85 - 89)

என்னும் தோழியின் கூற்றால், தலைவி தலைவனுடைய நலனையே விரும்புபவள் என்பதும், அவன் பரத்தையரை நாடும் செயலை மறைத்துப் பொய்ச்சூள் உரைப்பதனால், முருகனால் அவனுக்குத் துன்பம் நேரக்கூடாது என்பதற்காகத் திருப்பரங்குன்றத்து முருகனிடம் வேண்டிக் கொள்கிறாள் என்பதும்

அறியும்போது, ஆன்மீக எண்ணம், இல்லறத்தில் ஊடலைத் தீர்த்துத் தவறு செய்யும் கணவனை மன்னித்து அவன் நலனையே விரும்பும் உயரிய பண்பைத் தலைவிக்கு அளிக்கிறது என்பது வியப்பிற்குரியது.

குற்றத்தை மறந்து மன்னித்து நன்மை செய்யும் பண்பாட்டுக்குக் கடவுள் வழிபாடு உதவுகிறது என அறிகிறோம். தமிழ்ப் பெண்டிர் முருக வழிபாட்டில் ஈடுபட்டிருந்தனர் என்பதனைப் பட்டினப்பாலையும் உணர்த்துகிறது.

''காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழாவறா வியலாவணத்து
மையறுசிறப்பிற் றெய்வம் சேர்த்திய
மலரணி வாயில் பலர் தொழுகொடியும்

(வரிகள் 153-160)

பட்டினப்பாக்கத்தில் உள்ள பெண்டிர் மாடிகளில் இருந்தவாறு, தெருவில் ஊர்வலமாகச் செல்லும் திருமுருகப் பெருமான் படிமத்தைத் தம் மென்மையான செங்காந்தள் போன்ற விரல்களால் கைகூப்பி வணங்கிய செய்தியைப் பட்டினப்பாலை தெரிவிக்கிறது.

திருப்பரங்குன்றத்து முருகனுக்கு விழா எடுக்க மகளிர் கொண்டு செல்லும் பொருள்கள் பற்றிப் பரிபாடல் குறிப்பிடுகிறது:

''சிறு அடிகளை உடைய மகளிர் விழாக்கொள்ளத் திருப்பரங்குன்றத்துக்குப் புறப்பட்டுச்செல்கின்றனர்; வேறுபட்ட பல சாந்து வகைகளையும் சிறந்த மணப் புகைப் பொருள்களையும் செல்லும் வழியில் அணையாத விளக்கத்தையும், நறுமணம் கமழும் மலர்களையும் இசைகூறும் முழவையும் மணியையும்

கயிற்றையும் மயிலையும் குடாரியையும் பிணிமுகம் என்னும் யானையையும் உள்ளிட்ட பிற பொருள்களையும் ஏந்தி அடை தற்கு அரிய திருப்பரங்குன்றத்தை அடைந்து முருகப் பெரு மானைத் தொழுதனர்.''

''சீறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்
பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி
அருவரை சேராத் தொழுநர்''

(பரிபாடல்: 8; வரிகள் : 96 - 102)

என்று பரிபாடல் மகளிரின் முருகன் வழிபாட்டிற்குச் செல்லும் மகளிரின் ஆன்மீக உணர்வை உணர்த்துகிறது.

இவ்வாறு முருகனை வழிபடச் சென்ற பெண்கள் முருகனிடம் என்னென்ன வேண்டிக் கொண்டனர் என்பதையும் பரிபாடல் தெரிவிக்கிறது.

முருகப்பெருமானைச் சிற்றின்ப நாட்டமுடன் வழி படாமல் சான்றோர்கள்,

''................................ யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்''

(பரிபாடல்: 5; வரிகள் : 78 - 80)

என்று வேண்டினர்; இச்செய்தியை ஐந்தாம் பரிபாடல் குறிப் பிடுகிறது. ஆயின், எட்டாம் பாடலில் இளம் மகளிர் வேண்டுதல் அவ்வாறு இல்லை; அதற்கு மாறுபட்டதாக உள்ளது. சான் றோர்கள் பேரின்பத்தை வேண்டினர். இளம்பெண்கள் தாம் விரும்பிய காதலரை அடைதற்கும், இல்லறத்தில் ஈடுபட்டு மகப்பேறு இல்லாத மகளிர், மகப்பேறு அடைதற்கும், பொரு ளீட்டச் சென்ற கணவர் பொருளீட்ட அருளுதற்கும், திருப்பரங் குன்றத்து முருகனை வேண்டிக் கொள்வதாக எட்டாம் பாடல் தெரிவிக்கிறது:

"கனவில் தொட்டது கைபிழை யாகாது
நனவிற் சேர்ப்பநின் நளிபுனல் வையை
வருபுன லணிகொள வரங்கொள் வோரும்
கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்,
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்"
(பரிபாடல்: 8; வரிகள் : 103 - 107)

என்பதால் இச்செய்திகளை அறிய முடிகிறது.

பெண்டிருள் சிலர் போர்மேல் சென்ற காதலர் போரில் பகைவரை அழித்து வெற்றிபெற வேண்டும் என்றும் அருச்சித்து வேண்டிக்கொள்கின்றனர்.

அங்கு இடிமுழக்கத்தோடு, பாடுவாரின் பண்ணமைந்த தாளத்தோடு பொருந்திய பாடல்களின் ஒலியும் ஆரவாரமுடன் திகழ்ந்தது எனப் பரிபாடல் ஆன்மீக ஆரவாரத்தையும் தெரிவிக்கிறது.

சிவபிரானுக்குக் கார்த்திகைப் பெண்கள் வாயிலாக முருகன் தோன்றினான் என்னும் செய்தியும், வள்ளியை முருகன் மணந்த செய்தியும், அப்போது இந்திரன் மகள் தேவயானைப் பிராட்டி கண்ணீர் சிந்தினாள் என்னும் செய்தியும் **பரிபாடலின் ஒன்பதாம் பாடலில்** அமைந்த,

"மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்! நீ
மையிருநூற் றிமையுண்கண் மான்மறிதோள் மணந்த
ஞான்று
ஐயிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகள் மலருண்கண்
மணிமறை தலைஇயெனு மாவேனில் காரேற்றுத்
தணிமழை தலையின்று தண்பரங் குன்று"
(பரிபாடல்: 9; வரிகள் : 7 - 11)

என்னும் வரிகள் வாயிலாகத் தெரியலாகின்றன.

தேவயானைப் பிராட்டி அழுத கண்ணீர், நீலமணிபோல் தோன்றியது என்பது இங்கு இனிய கற்பனையாகும். அப்போது திருப்பரங்குன்றத்தில் மழைபெய்த இயற்கை நிகழ்ச்சியைப் பரிபாடல்,

''.................... மாவேனில் காரேற்றுத்
தணிமழை தலையின்று தண்பரங்குன்று''

என்னும் தொடர் மூலம் தெரிவிக்கிறது; மேகங்களும் தே
யானைப் பிராட்டிக்காக அழுதன என்னும் கற்பனை இனி
பயக்கிறது. பெண்களின் வேண்டுகோள்களை ஏற்று அரு
முருகன் தன் பத்தினியாகிய தேவயானைப் பிராட்டியாருக்
வள்ளியை மணந்ததன் வாயிலாகத் துன்பம் இழைத்தான் என்
கடவுளேயாயினும் அவனும் மனிதத்தன்மையுடன் நடப்ப
என்னும் உண்மையைத் தெரிவிக்கிறது.

ஊடிக்கொண்ட தேவயானையின் திருந்தடியில் தே
மாறு திறைப்பொருளாகத் தலைக்கண்ணியை அளித்து வ
கினான். தேவயானையைத் தழுவிக் கொள்ள முற்படும்பே
வள்ளி நாச்சியார் முருகனைத் தழுவினாள்; தேவயானையை
அடித்தனள்.

இக்காட்சியைக் கண்ட இரு பெண்டிருக்கும் உரிய ம
களும் ஒன்றையொன்று எதிர்த்துச் சண்டையிட்டன; கிளி
ஏசிக்கொண்டன; வள்ளிக்குரிய வண்டுகள் தேவயானைக்கு
வண்டுகள் மீது பாய்ந்தன.

வள்ளியின் தோழியர்களும் தேவயானையின் தோழ
களும் தம்தம் மாலைகளையும் மலர்ப்பந்துகளையும் கொ
ஒருவர்மீது ஒருவர் எறிந்துகொண்டனர்.

இருபெண்டிரும் போரிடத் தொடங்கினர்; போர்க்க
களைப் போலவும் குதிரைகளைப் போலவும் போரிட்ட
சடைகளைப் பற்றி இழுத்துக் கொண்டும் சண்டையிட்ட
ஒருவர் உடலை ஒருவர் தாங்கி வளைத்தும், வில்லை வளைத்
போரிடுவதுபோல் போரிட்டனர். கண்களாகிய அம்புக
சினத்துடன் பார்த்துக் கொண்டனர்; வளையல்களை எறிந்
சண்டையிட்டனர்.

முருகன் கடவுளாயினும், அவன் மனைவியர் மன
பெண்களைப்போல் பண்பில்லாமல் சண்டையிட்டுக் கெ

டனர்; இருவரும் முருகனை அடைவதில் தன்னலத்துடன் சாதாரண மானிடப் பெண்களைப் போல் நடந்துகொண்டனர். முருகன்மேல் இருவரும் அன்புள்ளவர்கள் என்பதனை இரு வரின் பிணக்குகளும் காட்டுகின்றன. கடவுளர்கள் மனித நிலை யில், மனிதர் இயல்பினில் திகழ வல்லவர்கள் என்பது இதன் வாயிலாக அறியலாகும் உண்மையாகும்.

பரிபாடலின் ஒன்பதாம் பாடல் சூரபன்மனுடன் முருகன் போரிட்டு வென்ற நிகழ்ச்சி தொடர்ந்தது என்று குறிப்பிட்டு வள்ளியின் தோழியரும் தேவயானையின் தோழியரும் போரிட் டனர் என்றும் பாணர் மகளிர் இருசாராரும் போரிட்டனர்.

கலைவல்லார், கலைவல்லாராகிய எதிர்தரப்பினரை வென்றனர்.

வேல் படையையுடைய முருகப் பெருமான், வட புலத்துக் கற்புமணத்தையும், அன்பினால் ஒன்றுபடுகின்ற உரிமை யினையும், ஏற்ற பண்புடைய வியக்கத்தக்கவன் குமரன்! அதனால், அவனுடைய அடியாராக வாழும் வாழ்க்கையானது நாள்தோறும் சிறக்க வேண்டி வாழ்த்தித் தலைகளைச் சாய்த்து முருகனை வணங்குகின்றனர்.

''மேஎ எஃகினவை;
வென்றுயர்த்தகொடி விறல் சான்றவை;
கற்பிணை நெறியூடு அற்பிணைக்கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர!
வாழ்த்தினேம் பரவுதும் தாழ்த்துதுந்தலை நினையாம்
நயத்தலிற் சிறந்தஎம் அடியுறை
பயத்தலிற் சிறக்க நாள்தொறும் பொலிந்தே!

(பரிபாடல்: 9; வரிகள் : 79 - 85)

தேன்வழியும் மலர்கள், தளிர்கள், அழகிய ஆடை, வடிக்கப்பட்ட மணி, உயர்ந்த வேல் முதலிய காணிக்கைப் பொருள்கள் சுமந்து, சந்தன மணம்வீச, வெள்ளாட்டுக்குட்டி கட்டப்பட்டு அசைத்த கடம்பு மரத்தை வணங்கினர். அவர்கள் உரையோடு இசையும் எழுப்பினர்.

*மலர்ந்த மலர்களின் தேன் மரங்களை நனைக்கும் குன்றத்தில் தீப்பந்தம், இசை, மணப்பொருள்கள், நறுமணப்புகை, சேவல் கொடி ஆகியவை ஒருங்கே எழுந்தவண்ணம் மாலைக் காலங்களில் முருகன் திருவடிகளைப் பொருந்தி இருப்பவர்கள் வழிபடுவர்; அதுவன்றி விண்ணுலக வாழ்க்கையை வேண்டுவோர் யார்?''* என்னும் பொருளில்,

''தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை அசைத்த வேலன் கடிமரம்
பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்
விரிமலர் மதுவின் மரம்நனை குன்றத்துக்
கோலெரி கொளைநறை புகைக்கொடி ஒருங்கெழ
மாலை மாலை அடியுறை இயைநர்
மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்?''

*(பரிபாடல்: 17; வரிகள் 1-8)*

என்னும் பரிபாடல் வரிகள் முருகனுக்குரிய காணிக்கைப் பொருள்களை ஏந்திச் சென்ற செய்தியைத் தெரிவிக்கிறது.

முருகனை அவர்கள் வணங்குவதற்காகவே செல்கின்றனர்; மேலுலக வாழ்க்கையையும் விரும்பவில்லை என்பது இறைவனிடம் கொண்ட உண்மையான பக்தியுணர்வைக் காட்டுகிறது.

''வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'' என்னும் சேக்கிழாரின் கோட்பாடு பரிபாடல் தோன்றிய காலத்தில், முருக பக்தர்களிடையே நிலவியுள்ளது.

திருப்பரங்குன்றத்தில் பல ஒலிகள் எழும் தன்மையைப் **பதினேழாம் பரிபாடல்** குறிப்பிடுகிறது.

ஒருபக்கம் பாணர்கள் மீட்டும் யாழின் இனிய குரல் தோன்றும்; ஒருபக்கம் புதிய வண்டுகளின் இமிரும் இசை எழும்; ஒருபக்கம், கணுக்கள் நிறைந்த புல்லாங்குழலின் இசை இனிமையுடன் எழும்; ஒருபக்கம், பண் நிறைந்த தும்பி பரவி

இசையை ஊதியபடி இருக்கும்; ஒருபக்கம், மார்ச்சனை நிறைந்த முழவின் இசை எழும்; ஒருபக்கம் தலைமை பொருந்திய உயர்ந்த மலையில் அருவிநீர் ஒலியும் ஒலிக்கும்; ஒருபக்கம் நல்ல பாடல் பாடியபடி விறலியர்கள் இடுப்பசைய ஆடிக்கொண்டிருப்பர்; ஒருபக்கம், வாடைக்காற்று வீசுவதனால் பூங்கொடி அசையும்; ஒருபக்கம் பாடினி பாடும் பாலைப் பண்ணின் குரல் இசைக்கு இசைய நீண்ட கிளர்ச்சியினால், உரிமையும் நிறையும் குறையும் தோன்றும்.

ஒருபக்கம், சீராக ஆடும் மயிலின் அரிக்குரல் தோன்றும். மாறுபட்ட சூரபன்மனின் மாறுபாட்டையே முருகனும் மேற்கொண்டு அவனை வென்றான். முருகனுடைய திருப்பரங்குன்றமும் பல ஒலிகளையும் எதிர்த்து எழுப்பி மாறுபடும் தன்மையுடையது.

''ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரல் எழ;
ஒருதிறம், யாணர் வண்டின் இமிரிசை எழ;
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபு எழ;
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத,
ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ,
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப,
ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க;
ஒருதிறம், வாடை உளவயின் பூங்கொடி நுடங்க;
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற;
ஒருதிறம் ஆடுசீர் மஞ்ஞை அரிக்குரல் தோன்ற;
மாறுமா றுற்றனபோல் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்றம் உடைத்து''.

(பரிபாடல் 17 வரிகள்: 9-21)

மதுரைக்கும் திருப்பரங்குன்றத்திற்கும் இடைப்பட்ட வழியில், செல்வோர்களாகிய பெண்களின் கூந்தல்களினின்றும் தேன்சிந்தும் நறுமண மாலைகளின் பூக்களும் ஆடவர்தம் குடுமிகளில் மணம் பொருந்திய மாலைகளின் மலர்களும் விழுந்து வழியில் பரவுதலால் வழிஇல்லை என்னும்படி எங்கும் பூக்கள் இருக்கும்.

வசைநீங்கிய வாய்மையாலும் வேள்வியாலும் திசைகள் தோறும் திருப்பரங்குன்றத்தின் புகழ் பரவியது.

அவி உண்ணும் அகில்பொருந்திய கமழும் நறும்புகை இடங்கள்தோறும் மேலே சென்று தேவர்களின் இமைக்காத இமையையும் இமைக்க வைக்கும்; ஒளிதேயாத கதிர்மண்டிலமும் புகையால் காணுமாறு இல்லை'' என்னும் கருத்தமைந்த பரிபாடல் வரிகள், ''உலகத்துப் பரங்குன்றத்தில் எழும் புகை தேவர்களை இமைக்க வைக்கிறது; சூரிய மண்டலத்தையும் மறைத்து விடுகிறது'' என்பதால், திருப்பரங்குன்றம் விண்ணுலகத்தைவிடச் சிறந்தது என்பதும், முருகன் தேவர்களைவிட மிக உயர்ந்தவன் என்பதும் உய்த்துணரக்கூடிய செய்திகளாகும்.

மேலும், வாய்மையாலும் வேள்வியாலும் இத்தகைய நிலை ஏற்பட்டது என்பதும் சிந்திக்கத்தக்கது; அப்பரிபாடல் வரிகள் வருமாறு:

''வசைநீங்கிய வாய்மையால் வேள்வியால்
திசைநாறிய குன்றமர்ந்து ஆண்டாண்டு
ஆவியுண்ணும் அகில்கெழு கமழ்புகை
வாய்வாய் மீபோய் உம்பர் இமைபிறப்பத்
தேயா மண்டிலம் காணுமா றின்று''.

(பரிபாடல்: 17 வரிகள்: 28-32 )

உலகுக்குத் தன் கதிர்களால் ஒளிதந்து, அதன் காரணமாகக் கடல்நீர் வெப்பமாகி - ஆவியாகி - மேகமாகித் திரண்டு, மழை பெய்தற்கும் காரணமாக உள்ள கதிர் (சூரியன்) கதிரொளி வீசிப் பல ஆண்டுகள் ஆகியும் அதன் ஒளி மங்குவதில்லை; இந்த உண்மை இறைமையின் அழியாத்தன்மையை உணரச்செய்கிறது.

தேயா மண்டிலம் கமழ்புகை மூட்டத்தால், காணாதவாறு மூடப்படினும் அது உள்ளது என்பதனை அனைவரும் அறிவர்; அறியாமைப் புகையால், கதிராகிய இறைவன் நம்மால் உணராதவாறு மறைந்துள்ளான். கதிரவனை மறைக்கும் புகைமூட்டம் நீங்கியதும், கதிர் மண்டிலம் (சூரிய மண்டிலம்) கண்ணுக்குப் புலப்படுகிறது. அதுபோல் மனத்தில் படிந்துள்ள அறியாமைப்

*புகை விலகினால் இறைவனும் மனத்தால் உணரப்படுகிறான் என்னும் இறைச்சிப் பொருளை உணரலாம்.*

*மக்கள், சிறந்த தெய்வம் என முடிவு செய்து அத்தெய்வத்தை வழிபடுவதும், பிற தெய்வங்களை வழிபடுவதனைக் கைவிடுவதும் இயல்பு என்பது பரிபாடல் வாயிலாக அறியலாகிறது. திருப்பரங்குன்றத்து முருகனை வழிபடுவோர் பிற தெய்வங்களை வணங்குதலைக் கைவிட்டதாகப் பதினேழாம் பரிபாடல் தெரிவிக்கிறது:*

''மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!
பணிபுஒரீஇ நின்புகழ் ஏத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதும்; தொழுதும்;
அவையாமும் எம்சுற்றமும் பரவுதும்;
ஏம வைகல் பெறுகயாம் எனவே''

(பரிபாடல்: 17; வரிகள்: 48 - 53)

*''நீலமணியின் நிறங்கொண்ட மயிலையும் ஓங்கிய சேவற்கொடியையும் கொண்டு, பிணிமுகம் என்னும் யானையை ஊர்ந்து சூரபன்மனைப் போரில் வென்ற இறைவனே! பிற தெய்வங்களைப் பணிதல் நீக்கி நின் புகழைப் பாராட்டிப் போற்றி அழகிய நெடிய திருப்பரங்குன்றத்தை நாங்களும் எங்கள் உறவினரும் பாடுவோம்; நின் பாதுகாவலைப் பெறுவோம் என்பதற்காகப் பரவுகிறோம்'' என்னும் பொருளில் முற்குறிப்பிட்ட வரிகள் அமைந்துள்ளன.*

*செவ்வேள் பற்றிய பதினெட்டாம் பரிபாடல், முருகன் சூரபன்மனை அழித்த செய்தியைக் குறிப்பிடுகிறது; இமயத்தோடு ஒத்து உயர்ந்தது திருப்பரங்குன்றம் என்றும் குறிப்பிடுகிறது;*

''போரெதிர்ந்து ஏற்றார் மதுகை மதம்தபக்
காரெதிர்ந்து ஏற்றகமஞ்சூல் எழிலிபோல்
நீர்நிரந் தேற்ற நிலந்தாங்கு அழுவத்துச்
சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்''

(பரிபாடல்: 18; வரிகள்: 1 - 4)

என்னும் வரிகள், போரை ஏற்று எதிர்த்த சூரபன்மன், மற்றும் அவனுடைய சுற்றத்தாருடைய செருக்கைக்கொன்று அழித்தவன் முருகன். நீரேற்ற கருமேகம் போன்ற, கடல்நீரை ஏற்ற நிலத்தின் நடுவில் அச்சத்தை மிகுவித்துச் சுற்றியபடி இருந்த சூரபன்ம னாகிய மாமரத்தை அழித்த வேலை உடையவனே! நீ பிறந்த சிறப்பை ஏந்திய இமயக் குன்றோடு திருப்பரங்குன்றம் உயர்வைக் காட்டப் போட்டியையும் ஏற்கும்'' என்னும் பொருளில் அமைந் துள்ளன.

இமயக்குன்றுக்கு நிகரானது திருப்பரங்குன்றம் என்பத னால், திருப்பரங்குன்றம் உயரத்தில் இமயத்தைவிடத் தாழ்ந்த தாயினும், முருகன் கோயில் கொண்டு தங்கியிருக்கும் புகழால் உயர்ந்தது. இமயம் (கயிலை) சிவனுக்குரியது; திருப்பரங் குன்றம் முருகனுக்குரியது; முருகன் சிவனுக்குக் குரு என்பத னால் அவன் மலையும் உயர்ந்தது.

மலை, கோயில் கொண்டிருப்பதனால், தெய்வத்தன்மை யும், தெய்வத்தன்மையால் பெருமையும் எய்துகிறது என்பது உய்த்துணரப்படும் ஆன்மீகச் செய்தி.

''முறுக்கிய நரம்பிலிருந்து எழும் இசையுடன் இயல் தமிழாகிய பாட்டும் சேர்ந்து சுருதி, மலர், சுடர் ஆகியவை கூடி, நெருப்பில் உருகும் அகிலோடு சந்தனமணமும் கமழும். இவ்வாறு வணங்கும் நின் அடியார்கள் நின்கோயில் கொண்டு வாழும் பதியாகிய திருப்பரங்குன்றத்தைச் சார்வர். எம் சுற்றத்துடன் நின் திருவடிகளைப் பிரியாதிருக்க அருள்புரிக!'' என்று முருகனடியார்கள் வேண்டுகின்றனர்.

''புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து
சுருதியும் பூவும் சுடரும் கூடி
எரியுருகு அகிலோடு ஆரமும் கமழும்
செருவேல் தானைச் செல்வ! நின் அடியுறை
உரிதினின் உறைபதிச் சேர்ந்தாங்குப்
பிரியா திருக்கஎம் சுற்றமோடு உடனே!''

(பரிபாடல்: 18; வரிகள்: 51-56)

''இவ்வுலகம் கடல்களை எல்லைகளாகக் கொண்டது. வானுலகத்தவனான முருகன் இவ்வுலகிற்குப் புகலிடமாகத் தன்னைத் தந்தனன். அறிவின் எல்லையாலும் அறிய முடியாத புகழ்பூத்த கடம்ப மரத்தின் இடத்தில் அமர்ந்து முருகனை ஆன்றோர்கள் போற்றினர். சான்றோர்கள் அடைந்த இன்ப நுகர்ச்சியினை இப்பெரிய உலகத்தோரும் அடையட்டும் என்னும் அருளால்தான் இவ்வுலகில் தோற்றமளித்தான் முருகன்.

மணக்கோலத்தில் தேவயானையுடன் வீற்றிருந்தனன்; மணவிழாவினால் முறையாக மணந்து கொண்ட அவளுடன் திருமணத்திற்கு மாறுபட்ட களவுமணத்தின் மூலம் வள்ளியை யும் மணந்தனன் என்று பரிபாடல், முருகன் தேவலோகத் தவனாயினும், மக்கள் வாழும் உலகில் தோன்றியமை இங்குள் ளோருக்கும் இன்பம் அளிக்கவே என்று உணர்த்துகிறது. மற்றும் முருகனுடைய மாறுபட்ட மண முறைகளையும் தெரிவிக்கிறது.

''நிலவரை அழுவத்தான் வானுறை புகல்தந்து
புலவரை அறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து
அருமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சி மன்
இருநிலத்தோரும் இயைகென ஈத்தநின்
தண்பரங் குன்றத்து இயலணி நின்மருங்கு
சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலும் மயிற்கொடி வதுவை''.

(பரிபாடல்: 19 வரிகள்: 1-7 வரை)

''பிணிமுகம் என்னும் யானையின்மீது ஊர்ந்து வருபவன் முருகன். சந்திரன் விண்மீன்களுடன் மேருமலையை வல மாக வருபவன். சந்திரனைப் போலவே, அவன் மரபில் வந்த பாண்டியனும் திருப்பரங்குன்றத்தை வலம் வருபவன்'' என்னும் செய்தியைக் கீழ்வரும் 19 ஆம் பரிபாடலின் 19-29 வரிகள் தெரிவிக்கின்றன:

''சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் - புலமாண் வழுதி
மடமயி லோடும் மனையவ ரோடும்

கடனறி காரியக் கண்ணவ ரோடும்நின்
சூருறை குன்றின் தடவரை ஏறிமேல்
பாடுவலம்திரி பண்பின் - பழமதிச்
சூடி யசையுஞ் சுவல்மிசைத் தானையின்
பாடிய நாவிற் பரந்த வுவகையின்
நாடும் நகரும் அடைய அடைந்தனைத்தே
படுமணி யானை நெடியோய்; நீ மேய
கடிநகர் சூழ்நுவலுங் கால்''.

(பரிபாடல்: 19; வரிகள் : 22 - 29)

*முருகன் கிரவுஞ்ச மலையை வேல் எறிந்து சிதைத்தவன். அவனைக் காண யானைகள் மீதும் ஊர்ந்து வருவர்; பிற ஊர்தி களிலும் வருவர். யானைகளைத் திருப்பரங்குன்றத்து மலையடி வாரத்தில் வரிசையாக மரங்களில் கட்டி வைப்பர்; குதிரைகளை வழியை விட்டு நீங்கி வரிசையாகக் கட்டி வைப்பார்கள்; திண்ணிய தேர்களை வழிக்கு அயலில் நிறுத்தி வைப்பர். களிறுகளுக்குக் கரும்பைக் கவழமாக உண்ண அளிப்பர்; மலையடிவாரத்தில் யானைகளும் தேர்களும் குதிரைகளும் உள்ள காட்சி, குதிரையின் மீது நிமிர்ந்து செல்லும் சேனையை உடைய பாண்டியனுடைய பாசறையைப் போன்றது. முருகனுடைய திருப்பரங்குன்றத்து மலை அடிவாரத்து இடைநிலத்தைப் போற்றும் வகை பாண்டியன் பாசறை போன்றது'' என்பதுதான்.*

*''படை வலிமையால் எல்லாரையும் வெல்லும் பாண்டி யனே வந்து வணங்கத்தக்கவன் முருகன் என்பதால், அவனை வணங்கவரும் பலருடைய யானைகளும் குதிரைகளும் தேர் களும் முருகனுடைய பலவகைப் படைகளைப் போன்று இருந்தன'' என்னும் கருத்தால், முருகனுடைய பக்தர்கள் வீரர்கள் என்பது உணரப்படும்.*

*இச்செய்தியை 19ஆம் பரிபாடலின் 30-37 வரிகள் உணர்த்துகின்றன:*

''தும்பி தொடர்கதுப்பத் தும்பி தொடராட்டி
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரன் அசைப்பார்
தண்தார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்

திண்தேர் வழியிற் செலநிறுப்பார்; கண்டக்
கரும்பு கவழம் மடுப்பார்; நிரந்து
பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே
குருகெறி வேலோய் நின் குன்றக்கீழ் நின்ற
இடைநிலம் யாமேத்து மாறு''.

*திருப்பரங்குன்றத்தில் முருகனுக்காகப் பல்வகையான இசைக்கருவிகளை மீட்டினர். தெய்வப்பிரமம் என்னும் வீணையைச் சிலர் மீட்டினர்; குழலில் உள்ள துளைகளில் கைவிரல்களை வைத்து இசை எழுப்பினர் சிலர்; யாழில் இளி, குரல், சமம் என்னும் பண்களை மீட்டினர் சிலர்; வேள்வி அழகினைச் சிலர் சொல்லிக் கொண்டிருந்தனர்; யாழ் நரம்புகளிலிருந்து 'கொம்' என்னும் ஒலி செய்ய அதற்கேற்ப முரசினை அடித்து ஒலி செய்தனர் சிலர்.*

*இவையனைத்தும் முருகனை வழிபடுவோர் செயல்கள்.*

''தெய்வப் பிரமம் செய்கு வோரும்
கைவைத் திமிர்குழல் காண்கு வோரும்
யாழின் இளிகுரல் சமம்கொள் வோரும்
வேள்வியின் அழகியல் விளம்பு வோரும்
கூரநாண்குரல் கொம்மென ஒலிப்ப
ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்''

(பரிபாடல்: 19 ; வரிகள்: 40 - 45)

*புராணக் கதைகளை விளக்கும் சிற்பங்கள் திருப்பரங் குன்றத்துக் கோயிலில் அமைக்கப்பட்டிருந்தன. இக்காட்சியை 19ஆம் பரிபாடல் வரிகள் 48-57 உணர்த்துகின்றன.*

*இரதி, காமன் ஆகியோர் சிற்பங்கள் எழுத்து நிலை மண்டபத்தில் அமைக்கப்பட்டிருந்தன; இந்திரன் கொண்ட பூனைவடிவமும் அகலிகை, கவுதமன் ஆகியோரின் வடிவங் களும் சிற்பங்களாக அமைக்கப்பட்டு இருந்தன. சிலர் அச்சிற் பங்கள் சித்திரிக்கும் வரலாற்றைக் காண்போர்க்கு விளக்கிக்*

கொண்டிருந்தனர். முருகனுடைய திருக்கோயிலில் அகன்ற பாறையில் இவை செதுக்கப்பட்டிருந்தன.

இச்செய்தி பற்றிய 19ஆம் பாடலின் வரிகள் 48-57 வருமாறு:

''இரதி காமன் இவளிவன் எனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை இவளக லிகையிவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென்று உரைசெய் வோரும்
இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவும் சுட்டறிவுறுத்தவும்
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச்
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅல் மருகன் மாட மருங்கு''.

பக்தர்கள் முருகனைப் பலவாறு வேண்டுகின்றனர்.

''குறப்பெண்ணை மணந்தவனே! வாழ்த்தும் சிறப் புணவைச் செவியில் கேட்பாயாக! உடையும் மாலையும் செந்நிற மாகக் கொண்டவனே! வேல்படைக்கருவியும் பவழக் கொடி யின் செந்நிறம் கொண்டது; உருவமும் அழகிய சிவந்த தீயை ஒத்திருக்கிறது. முகமும் விரிந்த கதிர்களைக் கொண்ட முற்றாத இளஞாயிற்றைப் போன்றது; கடலில் சூரபன்மனாகிய மாவினை அடியோடு வெட்டியழித்தவன். பகைகொண்ட கிரவுஞ்ச மலை யினைச் செம்மையான வேலால் அழுத்தி அந்த மலையை உடைத்தவன்! நீ இம்மலையிடத்தில் கடம்ப மரத்தினிடையே அமர்ந்துள்ள அழகிய நிலையைச் சொன்னோம். சுற்றத்தோடு போற்றி வணங்கினோம்'' என்னும் பொருள் கொண்ட பாடல் வரிகள் முருகனுடைய சிவந்த தோற்றப்பொலிவையும் கிரவுஞ்ச மலையை வேலால் உடைத்த ஆண்மையையும் திருப்பரங் குன்றத்தில் கோயில் கொண்ட அழகிய தன்மையையும் விளக்கு கின்றன.

(வரிகள்: 95-105)

''குறப்பிணாக் கொடியைக் கூடியோய்! வாழ்த்துச்
சிறப்புணாக் கேட்டி செவி,
உடையும் ஒலியலும் செய்யை; மாற்றாங்கே
படையும் பவழக் கொடிநிறம் கொள்ளும்
உருவும் உருவத்தீ ஒத்தி; முகனும்
விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி;
எவ்வத்து ஒவ்வா மாமுதல் தடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவேல் அழுத்தி
அவ்வரை உடைத்தோய்! நீ இவ்வரை மருங்கில்
கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்
உடங்கமர் ஆயமொடு ஏத்தினம் தொழுதே.

முருகன் 'பிணிமுகம்' என்னும் யானையை ஊர்தியாகக் கொண்டவன். அந்த யானையின் வெற்றிச் சிறப்பு, பரிபாடல் 21இல் பேசப்படுகிறது. ''எரிபோல் விட்டுவிட்டு ஒளி செய்யும் நெற்றிப் பட்டத்தைச் சென்னியில் கொண்டு போர்க்களங்களில் வெல்லும் புகழமைந்த பிணிமுகம் என்னும் களிற்றை ஊர்ந்தவனே! என்னும் பொருளில்,

''ஊர்ந்ததை, எரியுரைஓடை இமைக்கும் சென்னிப்
பொருசமம் கடந்த புகழ்சால் வேழம்'' (வரிகள்: 1, 2)

என்னும் வரிகளால் அதனை அறியலாம்.

அடுத்து முருகனுடைய காலணியின் சிறப்பு வருணிக்கப் படுகிறது.

தைப்பதற்குரிய தோலின் மேல்புறத்தைச் செம்மண் கலங்கலான துவர்நீரில் அழுத்தித் தகைமையுடையதாக்குவர். முதுகுப் புறத்தோலோடு முழுமயிர் செறிந்த அந்த இடத்தில் கோடுகள் மலிந்த பாம்புத்தோலின் பிளவு கண்டது போன்ற மென்மையான மயில் பீலிகளாலே புனையப்பெற்ற 'அடையல்' என்னும் காலணியை அணிந்தவன் முருகன்'' என்னும் பொருளில்,

''தொட்டதை - தைப்பமை சருமத்தின் தாளியை, தாமரை
துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய
வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த
வரிமலி அரவுரி வள்புகண் டன்ன
புரிமென் பீலிப் போழ்புனை அடையல்''

(பரிபாடல்: 21; வரிகள் : 3 - 7)

என்னும் வரிகள் அமைந்துள்ளன.

முருகன் கைவேலின் சிறப்புப் பேசப்படுகிறது. முருகனுடைய தலைமையை அசுரர்கள் ஏற்கவில்லை; சூரபதுமன் மாமர வடிவம் கொண்டான்; அம்மாமரத்தை வேரோடு வெட்டிக் கிரவுஞ்சப் பறவையின் பெயர்தாங்கிய கிரவுஞ்ச மலையை ஒருபக்கம் உடைத்து வழிதிறந்த வேலைக்கையில் உடையவன் முருகன்.

''கையதை - கொள்ளாத் தெவ்வர்கொள் மாமுதல் தடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்புடை திறந்த வேல்''

(பரிபாடல்: 21; வரிகள் : 8, 9)

என்னும் வரிகள் முருகனுடைய வேலின் ஆற்றலை உணர்த்துகின்றன.

''சுருளுடைய வள்ளிப் பூவினை இடையில் இட்டு உருண்டமைந்த கடப்பம் பூங்கொத்தைத் தொடுத்துக் கட்டிய இரு மலர்களின் மணம் கமழும் மாலையைப் பூண்டவன் முருகன்'' என்பதனை,

''பூண்டதை - சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த
உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடு கமழ்தார்''

(பரிபாடல்: 21; வரிகள் : 10, 11)

என்னும் வரிகள் தெரிவிக்கின்றன.

தூயநாவினால் சான்றோர் புகழும் பெருமையுடையது திருப்பரங்குன்றம்; வரிசையாக ஏழ்நீண்ட இலைகள் அடுக்கப் பெற்றது போன்று விளங்கும் ஏழிலைப்பாலை மரங்கள்,

மலையில் இடையில் இருக்கும்; அழகிய அருவியுள்ள நீர்நிலைகள் மேகலாபரணம்போல் இருக்கும்; தேவர்கள் விரும்பும் தண்ணிய திருப்பரங்குன்றம்; குன்றத்தின் அடியில் விரும்பி வந்து உறைபவன் முருகன். வென்றி பொருந்திய அழகிய சேவல் கொடியையுடைய செல்வனாகிய உன்னை வணங்குகிறோம்'' என்னும் பொருளில் முருகன் உறையும் திருப்பரங்குன்றத்தின் பெருமை பேசப்படுகிறது; தேவர்கள் உலகை விரும்பி வருவார்கள்; ஏனெனில், முருகன் அங்கு உள்ளான்.

இக்கருத்தில்,

''அமர்ந்ததை - புரையோர் நாவின் புகழ்நலம் முற்றி
நிரையேழ் அடுக்கிய நீளிலைப் பாலை
அரைவரை மேகலை அணிநீர்ச் சூழித்
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம்;
குன்றத்தடியுறை இயைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வ! நின்தொழுது''
(பரிபாடல்: 21; வரிகள் : 12 - 17)

என்று பரிபாடல் வரிகள் புகழ்கின்றன.

பலவகையான ஒலிகள் பேசப்படுகின்றன; திருப்பரங்குன்றத்தில், மலையின் இருபக்கங்களிலும் மகளிர் மார்பகச் சாந்தினது ஈரம் புலரப் பயன்படும் சாந்தாற்றி போல மேகங்கள் இடிமுழக்கம் செய்து கொண்டிருந்தன; அதனைக் கண்டு புள்ளி மயில்கள் இடம்பெயர்ந்து ஆடின; விரல் செறித்தும் திறந்தும் ஒலிக்கும் மூங்கில் குழலின் இசைக்கேற்ப, தும்பிகள் மலர்ந்த மலர்களில் ஊதிக் கொண்டிருந்தன; புதிய வண்டினங்கள் யாழிசையைப்போல் ஆரவாரம் செய்துகொண்டிருந்தன. தாளத்தோடு கூடிய முழவிசையைப்போல் அருவிநீர் ஒலித்தது; ஒருங்கே அவ்வொலிகள் பரவி ஒலிக்க, வெற்றி முரசினைக் கொண்ட முருகனுடைய திருப்பரங்குன்றம் விளங்கியது.

இயற்கையொலிகளில் இசையை உணரவைக்கும் வரிகளாகப் பரிபாடல் வரிகள் அமைந்துள்ளன:

''மிசைபடு சாந்தாற்றி போல எழிலி
இசைபடு பக்கம் இருபாலும் கோலி

விடுபொறி மஞ்ஞை பெயர்புடன் ஆட
விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப
முரல்குரல் தும்பி அவிழ்மலர் ஊத
யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்
பாணி முழவிசை அருவிநீர் ததும்ப
ஒருங்கு பரந்தவை எல்லாம் ஒலிக்கும்
இரங்கு முரசினான் குன்று''.

(பரிபாடல்: 21; வரிகள் : 30 - 38)

*முருகன் தன் அன்பர்களை வாழ்க்கையில் துன்பங் களினின்றும் மீட்டுக் காத்து உலக இன்பத்துடன் அவர்கட்குப் பேரின்பமும் நல்குவான் என்னும் ஆழ்ந்த கருத்தில் தூய இனிய உவமையுடன் பரிபாடல் முருகனுடைய பேரின்பம் அருளும் பெருமையைப் பேசுகிறது.*

*காட்டாறு வீழும் சுனையில் பெண்ணொருத்தி குளித்துக் கொண்டிருந்தாள்; நீருக்குமேல் வந்து தன் கணவனை நீரில் அழுந்த உள்ள தன் கைக்கு அருகில் மூங்கிற் புணையை விடுமாறு வேண்டுகிறாள்; அவனோ சாயநீர் நிறைந்த வட்டத்தை எறி கிறான்; புணை கிடைக்கப்பெறாது, அரிய ஆழமுடைய நீரில் மூழ்கும் அவள் துயரைக்கண்டு, அவள் கணவன் மகிழ்ச்சி மிகுந்து கொய்தற்குரிய மலருள்ள நீரில் வீழ்ந்து அவளைத் தழுவிக் கரைசேர்க்கும் தன்மையைப் போன்ற தண்ணிய திருப்பரங் குன்றம்'' என்னும் இனிய பொருளில்,*

''தாழ்நீர் இமிழ்சுனை நாப்பண் குளித்தவண்
மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை
வேய்நீர் அழுந்துதன் கையின் விடுகெனப்
பூநீர்பெய் வட்டம் எறியப் புணைபெறாது
அருநிலை நீரின் அவள்துய்கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல் வீழ்ந்து
தழுவும் தகைவகைத்துத் தண்பரங் குன்று''

(பரிபாடல்: 21; வரிகள் : 39 - 45)

*என்னும் பரிபாடல் வரிகள் உலக இன்பத்துடன் வீடுபேற்றுப் பேரின்பத்தையும் அளிக்க அடியார்களைக் காப்பவன் என்னும் அரிய உண்மையைப் பெற வைக்கிறது.*

திருப்பரங்குன்றத்தில் பலவகையான நறுமணங்கள் கலந்திருக்கும் செய்தியைப் பரிபாடல் தெரிவிக்கிறது.

ஆடவர்கள் தங்கள் மார்பில் பூசிய தண்ணிய சந்தன மணம் படிந்த காற்றால், மகளிரின் கூந்தலிலே மணங்கமழும் பொடிகள் உதிர்த்திருந்தனர். அக்கூந்தலில் அம்மணப் பொடிகளிலிருந்து படிந்துவந்த காற்றும், உருண்ட பூங்கொத்துக்களைக் கொண்ட கடம்பிலே அமைந்த நெடுவேளாகிய முருகனுக்கு எடுத்த அழகிய நறுமணம் கமழும் புகையில் நுழைந்த காற்றும் கலந்து தொடர்ந்து வீழும் அருவிகளையும் அரிய மணக்குகைகளையும் கொண்ட பசும்பொன்னணிகலன் அணிந்த முருகனுடைய திருப்பரங்குன்றத்தில் நன்றாக வீசிக்கொண்டிருக்கும்.

முருகனுடைய அடியார்கள் முருகனுடைய திருவடிகளை, ''இன்றுபோல் என்றும் தம் உறவினர்களுடன் ஒருங்கே இருந்து தொழுதுகொண்டிருக்க அருளுக! பகைவரை அழித்த செல்வனே!'' என்று வேண்டுவதாகப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

''மாறமர் அட்டவை; மறவேல் பெயர்ப்பவை;
ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை;
நன்றமர் ஆயமொடு ஒருங்குநின் அடியுறை
இன்றுபோல் இயைகெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வநின் தொழுதே!''

(பரிபாடல்: 21; வரிகள்: 66 - 70)

என்னும் பரிபாடல் வரிகள் முருகன் சூரபன்மன் முதலான பகைவர்களை அழித்தவன் எனவும், வீரவேல் கிரவுஞ்ச மலையைப் பெயர்த்தது எனவும், ஆறிரு தோள்களையும் மலர்ந்த ஆறுமுகங்களையும் கொண்டவன் என்றும் அவன் வீரத்தையும் அவன் தோற்றப் பொலிவையும் உணர்த்துகின்றன.

★ ★

## 4. திருவாசகத்தில் சில ஆன்மீகச் செய்திகள்

திருவாசகம் மாணிக்கவாசகரால் இயற்றப்பெற்ற ஒப்புயர்வற்ற ஆன்மீகநூல்; சிவபெருமானின் மாண்புகளை விளக்குவது; இறைமைப் பண்புகள் மாணிக்கவாசகரால் நன்கு விளக்கப்பெற்றுள்ளன. இந்நூலைக் கற்ற அறிஞர் ஜி.யு. போப் அவர்கள் உள்ளம் கவரப்பெற்று ஆங்கிலத்தில் சிறப்புற மொழி யாக்கம் செய்தார். திருவாசகத்திற்கு உருகாதார் எவரும் இலர்; கல்மனமும் கனிந்துருகும்.

திருவாசகச் **சிவபுராணப் பகுதியில்** இறைவனுடைய தன்மையை மாணிக்கவாசகர் விளக்கியுள்ளார்.

''இறைவனுடைய திருவடிகளின் அழகு எண்ணிப் பார்ப் பதற்கு எட்டாதது. இறைவன் ஒளி வடிவானவன்; எண்ணற்ற வடிவங்களை உடையவன்'' என்று இறைவனை விளக்குகிறார் மாணிக்கவாசகர்.

''எண்ணுதற்கு எட்டா எழில் ஆர்கழல் இறைஞ்சி
விண்நிறைந்து மண்நிறைந்து மிக்காய் விளங்குஒளியாய்
எண்இறந்து எல்லை இலாதானே நின்பெரும்சீர்
பொல்லா வினையேன் புகழும்ஆறு ஒன்று அறியேன்''

என்கிறார்.

மாணிக்கவாசகர் பல பிறவிகளைப் பற்றிக் குறிப்பிடு கிறார்; தாம் பல பிறவிகள் எடுத்து இளைத்ததாகக் கூறுகிறார்.

புல், பூடு, புழு, மரம், பலவகை விலங்குகள், பறவை, பாம்பு, கல், மனிதன், பேய், கணம், அசுரர், முனி, தேவர் ஆகிய எல்லாப் பிறவிகளையும் எடுத்து இளைத்ததாகக் கூறுகிறார்.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்

கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமானே''

என்று பல பிறவிகள் எடுத்து இளைத்துவிட்டதாக வருந்துகிறார் மாணிக்கவாசகர்.

மெய்யறிவாகி விளங்கும் மெய்ச்சுடர், உயிரினங்களை ஆக்குபவனும் காப்பவனும் அழிப்பவனும் அருள்தருபவனும் இறைவனே.

ஆதியாகவும் அந்தமாகவும் நடுவராகவும் அல்லாதவனாகவும் திகழ்பவன் இறைவன்.

நோக்குவதற்கு அரிய நோக்கமாக இருப்பவன்; நுண்ணிய ஆய்வுக்கு அப்பாற்பட்ட நுண்ணிய உணர்வினன். போக்கும் வரவும் புணர்வும் இல்லாத புண்ணியன் என்றும் இறைவனுடைய தன்மைகளை எடுத்துச் சொல்கிறார் மாணிக்கவாசகர்.

''மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே''
''ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்''
''ஆதியனே அந்த நடுவாகி அல்லானே''
''நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே''

இவ்வாறு இறைவனுடைய தன்மைகளை விளக்குகிறார்.

**'கீர்த்தித் திருவகவல்'** என்னும் திருவாசகப் பகுதியில், சிவபெருமானுடைய வெவ்வேறான பலவடிவங்கள், வெவ்வேறு இயற்கைப் பொருள்கள் அனைத்தும் பல நூறாயிரம் இயல்பினவாக மாறுகின்றன என்கிறார். இறைவன் மங்கையொரு பாகனாக - அர்த்தநாரீசுவரனாக இவ்வுலகைக் காக்க வந்தருளினான் என்றும் புகல்கிறார்.

''வேறுவே றுருவும் வேறுவே றியற்கையு
நூறுநூ றாயிர மியல்பின தாகி''

''ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி''

என்கிறார்.

திருவாசகத்தின் திருவண்டப் பகுதியிலும் ஈசனின் அரிய ஆற்றல்கள் பேசப்படுகின்றன.

''அருக்கனிற் சோதியமைத்தோன்', 'மதியில் தண்மை வைத்தோன்'', ''தீயில் வெம்மை செய்தோன்'', ''வானிற் கலப்பு வைத்தோன்'', ''காலில் ஊக்கங் கண்டோன்'', ''நீரில் இன்சுவை நிகழ்ந்தோன்'', ''மண்ணில் திண்மை வைத்தோன்'', ''பல கோடி யெனப்பல பிறவு மனைத்தனைத் தம்வயி னடைத்தோ னஃதான்று'', ''இன்னிசை வீணையி லிசைந்தோன்'', 'பரமன்', 'பழையோன்', 'பிரமன்', 'மால்', 'காணாப்பெரியோன்', 'அற்புதன்', 'அநேகன்', 'சொற்பதங் கடந்த தொல்லோன்', 'சித்தமும் செல்லாச் சேட்சியன்', 'பக்தி வலையிற் படுவோன்', 'ஒருவன் என்னும் ஒருவன்', 'விரிபொழின் முழுதாய் விரிந் தோன்', 'அணுத் தருந் தன்மையி லையோன்', 'இணைப்பரும் பெருமை யில்ஈசன்', 'அரியதில் அரிய அரியோன்', 'மருவிஎப் பொருளும் வளர்ப்போன்'.

'நிற்பன நிறீஇ சொற்பதங் கடந்த தொல்லோன்'

'பூவின் நாற்றம் போன்றுயர்ந்து எங்கும்
ஒழிவுஅற நிறைந்து மேவிய பெருமை'

என்றெல்லாம் இறைவனின் அரிய தன்மைகளைத் தெளிவாக மாணிக்கவாசகர் விளக்கியுள்ளார்.

'போற்றித் திருவகவல்' பகுதியில் பஞ்சபூதங்களின் வடிவாக விளங்குபவன் என மாணிக்கவாசகர் அரிய விளக்கம் தந்துள்ளார்:

''பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி

வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி''.

*என்றுணர்த்தி, மண், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஐந்து வடிவங்களாக அமைந்து இறைவன் இயற்கையின் தோற்றமாக உள்ளான் என்னும் உண்மையை மாணிக்கவாசகர் வெளிப்படுத்தியுள்ளார்.*

***'திருச்சதகம்'*** *என்னும் திருவாசகப் பகுதியிலும்,* ***'அறிவுறுத்தல்'*** *என்னும் தலைப்பில் இறைவனுடைய பஞ்சபூத வடிவத் தன்மையையும் உணர்த்தி, ''ஊனாகவும் உயிராகவும் உண்மையும் இன்மையுமாகவும், கோனாகி 'யான்', 'எனது' என்னும் செருக்குடையவர்களைக் கூத்தாட்டுபவனாகவும், நிலைத்து நிற்பவனாகவும் உள்ளான்'' என்னும் 'எல்லாமாக' உள்ள அவன் ஒப்பற்ற தன்மையை உலகுக்குத் தெரிவித்துள்ளார் மாணிக்கவாசகர்:*

''வானாகி மண்ணாகி
வளியாகி யொளியாகி
யூனாகி, யுயிராகி,
யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே!''

*என்னும் பாடல் இறைவனின் அனைத்துமாக விளங்கும் தன்மையை உணர்த்துகிறது.*

*இறைவன் நடுவிலும் கீழும் மேலும் எவற்றுள்ளும் எள்ளும் எண்ணெயும் போன்றவன் என்னும் அரிய தன்மையை,*

''நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்
எள்ளு மெண்ணெயும் போனின்ற வெந்தையே!''

*என்று இறைவனிடமே விளிக்கும் பாங்கில் மாணிக்கவாசகர் விளக்கியுள்ளார்.*

எங்கும் இறைவன் பரவியவன் என்பதனை, ''நடு, கீழ், மேல், எங்கும் நின்றவன்'' என்னும் பொருளில் சொன்ன மாணிக்கவாசகர், ''எள்ளும் எண்ணெயும் போல்'' என்னும் உவமையை வியக்கத்தக்க முறையில் பயன்படுத்தியுள்ளார்.

இறைவனை இயற்கைப் பொருள்களின் வடிவில் காணமுடியும்; எல்லா உயிரினங்களும் அவன் வடிவங்களே! எள்ளும் இறைவடிவமே! ஆயின், அதனுள் எண்ணெய் இருப்பது கண்ணுக்குப் புலப்படாது; இறைவனும் கண்ணுக்குப் புலப் படாத தன்மையன். எண்ணெய் எள்ளின் அனைத்துப் பகுதியிலும் பரவியிருத்தலைப் போலவே இறைவன் எங்கும் நீக்கமற நிறைந் தவன். இத்தகைய இறைவனின் தன்மையை 'எள்ளும் எண் ணெயும்' நமக்குத் தெரிவிக்கின்றன.

இறைவன் அனைத்துயிர்களுக்கும் தந்தையாகவும் தாயாக வும் விளங்குபவன். இறைவன் சிந்தையாலும் அறிவதற்கு அரியவன். இத்தகைய இறைவனின் தன்மையை,

''எந்தை யாயெம்பி ரான்மற்று மியாவர்க்கும்
தந்தை தாய்தம்பி ரான்றனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலு மறிவருஞ் செல்வனே''

என்னும் பாடல் ('திருச்சதகம்' பாடல்: 47) செப்புகிறது.

**'காருணியத்திரங்கல்'** என்னும் தலைப்பில் அமைந்த பாடல்களுள்,

''ஒருவனே போற்றி ஒப்பில்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி'' (பாடல். 68)

என்று வேண்டும் வரிகளில், ''ஒருவனே போற்றி'' என்று விளிப் பதன் வாயிலாக இறைவன் ஒருவனே என்னும் உண்மையை வெளிப்படுத்துகிறார் மாணிக்கவாசகர்.

உயிர்களைத் தோற்றுவிப்பவன் இறைவன்; ஆயின் அவனோ தோற்றம் இல்லாதவன். இச்செய்தியை,

''போற்றியெவ் வுயிர்க்குந் தோற்றம்
ஆகிநீ தோற்ற மில்லாய்'' (பாடல்: 70)

என்னும் வரிகளில் விளக்குகிறார்.

இறைவனுடைய கருணையாகிய கடலில் உள்ளம் செலுத்தி, விடமுடியவில்லை'' என்று இறைவனிடமே எப்போதும் மனம் செலுத்தும் இயல்புக்கு உவமையாகக் கடல்நீரை முழுதும் நக்கிக் குடிக்க முயலும் நாயின் செயலைக் குறிப்பிட்டு,

''கடலினுள் நாய்நக்கி யாங்குன்
கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை''

என்று தம் அறியாமையை வெளியிடுகிறார் மாணிக்கவாசகர். இத்தொடர் '**நீத்தல் விண்ணப்பம்**' என்னும் தலைப்பில், 13ஆம் பாடலில் இடம்பெறுகிறது.

இறைமையை 'ஆண்டவன்', 'இறைவன்', 'திருமால்', 'சிவன்' என்னும் பெயர்களால் குறிப்பிடும்போது ஆணாகக் கருதுகிறோம். ஆணாகவோ, பெண்ணாகவோ தனிப்பட்ட ஒரு வடிவத்தில் அவன் கட்டுண்டு இல்லை; அவன் எல்லாமாக நிலைத்திருக்கும் தன்மையைக் கருதி மாணிக்கவாசகர்,

''அண்மைய னேயென்றுஞ் சேயாய்
பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை ஆண்மைய
னேஅலிப் பெற்றியனே''

(பாடல்: 22, நீத்தல் விண்ணப்பம்)

என்று குறிப்பிடுகிறார்.

இறைவன் படைப்பில் சாதி வேற்றுமைகளுக்கு இடமில்லை; இனவேற்றுமையுமில்லை.

''குலங்களைந் தாய்'' என்று இறைவன் செயலைப் போற்றுகிறார்.

'திருவெம்பாவை' என்னும் திருவாசகப் பகுதியில், ''ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி'' என்று இறைவனைத் தோற்றமும் முடிவும் இல்லாதவன் என்று குறிப்பிடுகிறார் மாணிக்க வாசகர்.

''முன்னைப் பழம்பொருட்கு
முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும்
பேர்த்துமப் பெற்றியனே''

(திருவெம்பாவை: பாடல் 9)

என்று பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கி நிலைபெறும் அவன் தன்மையை மாணிக்கவாசகர் வியந்து போற்றுகிறார்.

''இறைவனுக்கெனத் தனிப்பட்ட ஊர் இல்லை; அவனுக்கென்று தனியாகப் பெயர் இல்லை; அவனுக்கென உற்ற உறவினர்களோ அயலார்களோ இல்லை'' என்னும் இறைவன் தன்மைகளைக் கூறி அவன் எல்லா இடங்களிலும் எல்லா உயிர்களுமாக விளங்கும் எங்கெங்கும் பொருந்தியுள்ள பரந்துபட்ட மேலான தன்மைகளை,

''ஏதவனூர் ஏதவன்பேர்
ஆருற்றார் ஆரயலார்
ஏதவனைப் பாடும்
பரிசேலோ ரெம்பாவாய்''

(திருவெம்பாவை: பாடல் எண்: 10)

என்று பாடிப் பரவுகிறார் மாணிக்கவாசகர்.

★ ★

## 5. 'காரைக்கால் அம்மையாரின் ஆன்மீகம்'

காரைக்காலம்மையாரின் 'திருவிரட்டை மணிமாலை' யில் சிவபெருமானைப் பற்றிய ஆன்மீகச் செய்திகள் போற்றத் தக்க முறையிலும் மனங்கொள்ளத்தக்க முறையிலும் அமைந் துள்ளன.

''சிவபெருமான் அல்லாது ஈசன் - இறைவன் இல்லை என்று நினைந்து (அவனது உயர்வு கருதி இறைவனை நினைத் தற்கும் தொண்டு புரிவதற்கும் நமக்குத் தகுதியில்லை என்று) கூசி மனத்தில் கொண்டு அவன் புகழ் பேசி அவனை மறவாது வாழ்கின்றவரை மண்ணுலகத்தில் என்றும் பிறவாமல் வீடுபேறு அளித்துச் சிவபிரான் காப்பான்'' எனக் காரைக்கால் அம்மையார் ஈசனைப் புகழ்கிறார்.

அப்பாடல் எளிய நடையில் அவரது நம்பிக்கையை வெளிப்படுத்துகிறது. அப்பாடல் வருமாறு:

''ஈசன் அவன்அல்லா தில்லை எனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து - பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான்.'' (பாடல்: 2)

''சிவபிரான் தன்னைப் பலநாட்கள் வணங்குகின்ற வர்களுடைய துன்பங்களைக் கண்டு சும்மா இருக்க மாட்டான்; துன்பம் தீர்ப்பான்'' என்னும் பொருளில்,

''பிரானென்று தன்னைப்பன் னாள்பர
வித்தொழு வார்இடர்கண்(டு)
இரானென்ன நிற்கின்ற ஈசன்கண்
டீர்!'' (பாடல்: 3)

என்னும் தொடர்கள் அமைந்துள்ளன.

*சிவபிரான் வேதியன்; வேதப்பொருளானவன்; வேதங்கள் தோன்ற ஆதியானவன் - காரணமானவன்.*

*இதனை,*

''வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்(கு)
ஆதியனை'' *என்னும் தொடர் விளக்குகிறது. (பாடல்: 8)*

*இறைவனை எந்த நன்மையையும் எதிர்பார்த்து வணங்கக் கூடாது; துன்பத்தைப் போக்காவிடினும், இரக்கம் கொள்ளாவிடினும், பின்பற்றும் நெறியைப் பணிக்கமாட்டாராயினும், கடவுளிடத்து வைத்த அன்பை அறுத்தல் கூடாது. காரைக்கால் அம்மையார் ஈசனிடம் அன்பு அறாத நெஞ்சங் கொண்டவராகத் திகழ்ந்தார். காரைக்கால் அம்மையார் தம்மைப் பற்றித் தம் 'அற்புதத் திருவந்தாதி'யில் இவ்வாறு கூறிக்கொள்கிறார்:*

''இடர்களையா ரேனும் எமக்(கு)இரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் - சுடர் உருவில்
என்பறாக் கோலத்(து)எரியாடும் எம்மானார்க்(கு)
அன்பறா(து) என்நெஞ்(சு) அவர்க்கு. (பாடல்: 2)

*சிவபெருமானாகிய இறைவனுக்கு ஏழுபிறவியிலும் தாம் அடிமையாவதாகக் கூறுகிறார்; எப்போதும் மற்றவர்க்கு அடிமையாக மாட்டோம் என்கிறார். சிவபிரான் நெருங்கிய சடையும் பிறைநிலவும் கொண்டவர். இக்கருத்தில்,*

''அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம்; என்றும்
அவர்க்கேநாம் அன்பாவ(து) அல்லால் - பவர்ச்சடைமேல்
பாதுகாப்போழ் சூடும் அவர்க்கல்லால் மற்றொருவர்க்(கு)
ஆகாப்போம்; எஞ்ஞான்றும் ஆள்'

*என்னும் பாடல் அமைந்துள்ளது.*

*இதே கருத்தில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த மகாகவி சுப்பிரமணிய பாரதியார்,*

"பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்
பரிபூரண னுக்கே அடிமை செய்து வாழ்வோம்"

என்று விடுதலை முழக்கம் செய்து இறைவனுக்கு மட்டுமே தாம் அடிமை எனக் குறிப்பிட்டார்.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்" என அப்பரும் முழங்கினார்.

காரைக்கால் அம்மையாரின் ஆன்மீக நெறி இறைவனுக்கு மட்டுமே அடிபணியும் நெறியாக அமைந்திருத்தலை அறியலாம். ஆன்மீகம் அச்சத்தைப் போக்கி அடிமைத்தளையைத் தகர்க்க வல்லது என்பதனை உணரலாம்.

"எந்த உயிரையும் படைப்பவன் இறைவனே; தோற்றுவித்து இவ்வுலகில் அழிப்பவனும் அவனே; எம்தந்தையே என அன்புடன் அழைக்கும் எங்களுக்குக் கொடிய துன்பம் வந்தால் அதைப் போக்குவான்" என இறைவனுடைய படைத்தல், அழித்தல், காத்தல் ஆகிய முத்தொழில்களைக் குறிப்பிடுகிறார். பாடல் வருமாறு:

"இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான்; தோற்றி
இறைவனே ஈண்(டு)இறக்கம் செய்வான்; - இறைவனே
எந்தாய்! எனஇரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான்". (பாடல். 5)

***அற்புதத் திருவந்தாதி*** மூலம் வானத்து இறைவன் பக்தர் நெஞ்சத்திலும் உள்ளான் என்னும் உண்மையை எளிய நெறியில் காரைக்கால் அம்மையார் விளக்குகிறார்: தொலைவிலும் அண்மையிலும் உள்ளவன் என்பதன் வாயிலாக அவன் எங்கும் உள்ளவன் என்னும் உண்மையை விளங்க வைக்கிறார்:

"வானத்தான் என்பாரும் என்க; மற்(று) உம்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாமென்க; - ஞானத்தால்
முன்நஞ்சத் தால்இருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தான்என்பன் யான்".

*''உலகத்து உயிர்களை எல்லாம் ஆள்விப்பது ஈசனது அருளே; பிறப்பை நீக்குவதும் அதுவே; அவனருளாலே மெய்ப்பொருளை அறியும் விதியுடையேன்; இறைவனுடைய அருள்தான் எப்போதும் எப்பொருளும் ஆவதாகும்'' என்று சிவனுடைய அருள்தன்மையைப் போற்றுகிறார் காரைக்கால் அம்மையார்:*

''அருளே உலகெலாம் ஆள்விப்ப(து); ஈசன்
அருளே பிறப்பறுப்ப(து); ஆனால் - அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ(து) எனக்கு''. (பாடல் எண்: 9)

*இறைவன் திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்குத் துன்பம் இல்லை; இறைவனுக்கு இனியவர்களாக வாழ்வர்; இனியொரு வினைக்கடலை உருவாக்கும் பிறவிக்கடலை நீந்தியவர்கள் ஆவர்'' என இறைவன் திருவடிகளைப் பொருந்தினால் பிறவித் துன்பம் இல்லை என்னும் அரிய கருத்தில்,*

''இனியோம்நாம் உய்ந்தோம்; இறைவன்தாள் சேர்ந்தோம்;
இனியோர் இடர்இல்லோம்; நெஞ்சே! - இனியோர்
வினைக்கடலை ஆக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண்''.

*(அற்புதத் திருவந்தாதி; பாடல் எண்: 16)*

*''மீளாப் பிறவிக் கனைக்கடலை'' என்னும் தொடர், மீளாப்பிறவி அலைகடல் போன்றது என்னும் பொருளைத் தருகிறது.*

*'கனைகடல்' என்பதற்கு 'ஒலிக்கும் கடல்' என்பது பொருளாயினும் அலைகளால்தான் ஒலி எழுகிறது என்பதால், ஓயாத அலைகள் இடைவிடாத பிறவிகளுக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.*

''பிறவிக்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன்
அடி சேரா தார்''

என்னும் திருக்குறள் கருத்தையொட்டி அம்மையாரின் கருத்தும் அமைந்துள்ளமை ஒப்புநோக்கத்தக்கதாகும்.

இறைவன் தன்மைகள் பற்றி அற்புதத் திருவந்தாதி எளிய முறையில் எடுத்து இயம்புகிறது. ''இறைவன் பக்தியாகிய காதலால் காண்பார்க்குக் காணக்கூடிய தன்மையனே யாவன்; காண்பார்க்கும் காணக்கூடியவன்; சோதியாக மனத்துள் காண்பார்க்குத் தோன்றுவான்; பழைய உலகத்துக்கு ஆதியாய் நின்ற சிவன் இவ்வாறு காணத்தக்கவன்.

இறைவன் அனைத்து வடிவங்களிலும் தோன்றக் கூடியவன். அதனால், ''அவனை அரன் (சிவன்) என்பேனோ? நான்முகனாகிய பிரம்மன் என்பேனோ? அரிய திருமால் என்பேனோ? இறைவன் பண்பை உணர இயலவில்லை'' என்று காரைக்கால் அம்மையார் சிவனாகிய இறைவனை மும்மூர்த்திகளாகவே காண்கிறார். இங்கே சமயக் காழ்ப்புணர்ச்சிக்கே இடமில்லை.

''இப்போது திருமாலாலும் பிரம்மனாலும் அறிய முடியாத சிவபெருமானைக் (இறைவனை) காணும் அறிவு எளிது'' என்று காரைக்கால் அம்மையார் உணர்த்தக் காரணம் என்ன என்பதனைச் சிந்தித்தால் அரிய உண்மையை உணரலாம்.

இறைவன் எங்கும் எந்த வடிவத்திலும் எல்லாமாகவும் நிறைந்தவன் என்பதே அந்த அரிய உண்மை.

இறைவன் காண்பவனாகவும், காட்டுபவனாகவும் அறிவினுள் கலந்து உயிர்கள் அறியும்படித் தானும் அறிபவனாகவும் இருக்கிறான். தீ, உலகம், ஆகாயம் ஆகியவைகளாகவும் அவனே அமைந்துள்ளான்.

அவனே சூரியனாகவும் நிலவாகவும் ஆகாயமாகவும் உலகமாகவும் நீராகவும் காற்றாகவும் உயிராகவும், வேறு திருமேனி கொண்டவனாகவும் உள்ளான். ஞானமயமாகவும் நின்றவன்.

*இவ்வாறெல்லாம் இறைவனது தன்மைகளையும் வடிவங்களையும் விளக்கியுள்ளார் காரைக்கால் அம்மையார். இவற்றைக் கீழ்க்காணும் அற்புதத் திருவந்தாதிப் பாடல்கள் உணர்த்துகின்றன.*

''காண்பார்க்கும் காணலாம் தன்மையனே; கைதொழுது
காண்பார்க்கும் காணலாம்; காதலால் - காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே; தொல்லுலகுக்(கு)
ஆதியாய் நின்ற அரன்.

அரன்என்கோ? நான்முகன் என்கோ? அரிய
பரன்என்கோ? பண்புணர மாட்டேன் - முரண்அழியத்
தானவனைப் பாதத் தனிவிரலால் செற்றானை
பானவனை எம்மானை இன்று

இன்று நமக்(கு) எளிதே; மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை - என்றுமோர்
மூவா மதியானை மூவேழ் உலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு.

அறிவானும் தானே; அறிவிப்பான் தானே;
அறிவாய் அறிகின்றான் தானே; - அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே; விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்.

அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல்காற் றாவான் - அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து''.

*சிவபெருமானுடைய உருவத்துக்கு ஒரு நாளின் காலை, பகல், மாலை, இரவு ஆகிய பொழுதுகள் உவமைகளாகக் காட்டப்பட்டதன் வாயிலாக, இறைவன் காலமாகவே விளங்குபவன் என்னும் நுண்ணிய கருத்தை உணர முடிகிறது. ''காலம் என்று தொடங்கியது? என்று முடியும்?'' என்று ஆய்வு செய்தால்*

*தொடக்கமும் முடிவும் துலங்கமாட்டா; இறைவனுடைய தன்மையும் அத்தகையதே; அவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன்.*

*ஒருநாளின் பல பொழுதுகளின் தோற்றத்தைச் சிவபெருமானின் தோற்றமாக உணர்த்தும் பாடல் வருமாறு:*

''காலையே போன்றிலங்கும் மேனி; கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு; - மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை; மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு''. (பாடல் எண்: 65)

*இறைவனுடைய வடிவம் காலத்தின் வடிவமாக இருக்கிறது என்பதற்கேற்ப, சிவனுடைய கண்டம் நீலநிறமாக இருப்பதனையும் இயற்கை வடிவங்களுக்கு ஏற்றி ஒப்பிட்டுக் காரைக்கால் அம்மையார் உயரிய கற்பனை நயத்துடன் விளக்கி வியப்பில் ஆழ்த்துகிறார்.*

*''சிவபெருமானுடைய கண்டத்து ஒளியை இருளின் வடிவம் என்பதா? மாமேகம் என்பதா? குற்றமற்ற நீலமணி என்பதா?'' என்று ஐயவினா எழுப்பும் பாடலில் குறிப்பிடுகிறார்:*

''இருளின் உருவென்கோ? மாமேகம் என்கோ?
மருளின் மணிநீலம் என்கோ? - அருள் எமக்கு;
நன்றுடையாய்! செஞ்சடைமேல் நக்கிலங்கு வெண்மதியம்
ஒன்றுடையாய்! கண்டத்(து) ஒளி''.

(அற்புதத்தந்தாதி; பாடல் எண்: 88)

*''சிவபெருமான் தனிமுதலாக நின்றவன்; தன்னை இத்தகையவன் என யாராலும் அறிய முடியாத தன்மையன்' என்னும் கடவுள் தன்மைகள்,*

*''ஏகமாய் நின்றானும்', 'தன்னையறியாத தன்மையனும்' (பாடல் எண்: 92) என்னும் தொடர்களால் அறியலாகின்றன.*

★ ★

## 6. சேரமான் பெருமாள்நாயனாரின் 'பொன்வண்ணத்தந்தாதி'யில் ஆன்மீகச் செய்திகள்

*சிவபெருமானுடைய தோற்றத்தைச் சேரமான் பெருமாள் நாயனார் வருணனை புரிகிறார்.*

''விரிகின்ற சூரியன் போன்றது அவன் உடல்; சூரியனுடைய வெம்மையான கதிர்போன்றது கண்டம்; சிவனுடைய திருநீறு வெண்ணிலவு போன்றுள்ளது'' என்னும் பொருளில்,

''விரிகின்ற ஞாயிறு போன்றது
மேனிஅஞ் ஞாயிறுசூழ்ந்
தெரிகின்ற வெங்கதிர் ஒத்தது
செஞ்சடை அச்சடைக்கீழ்ச்
சரிகின்ற காரிருள் போன்றது
கண்டம்அக் காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள
தால்எந்தை ஒண்பொடியே'' (பாடல்: 26)

*திருவாரூர் மும்மணிக்கோவையில்,*

''அமரரும் அறியா ஆதிமூர்த்தி
குமரன் தாதை குளிர்சடை இறைவன்'',

*(19 ஆம் பாடல் வரிகள்: 13-14)*

*என்றும்,*

''உலாநீர்க் கங்கை ஒருசடைக் கரந்து
புலால்நீர் ஒழுகப் பொருகளி றுரித்த
பூத நாதன் ஆதி மூர்த்தி
திருமட மலைமகட் கொருகூறு கொடுத்துத்தன்
அன்பின் அமைத்தவன்''

*(28 ஆம் பாடல் 1-5 வரிகள்)*

என்றும் சிவபிரானின் தன்மைகளைப் புலப்படுத்தியுள்ளார் சேரமான் பெருமாள் நாயனார்.

'அமரரும் அறியா ஆதிமூர்த்தி' என்னும் தொடர் அமரர் களாகிய திருமாலும் நான்முகனும் சிவபெருமானின் அடியையும் முடியையும் கண்டறிய முடியவில்லை என்னும் புராணச் செய்தியைத் தெரிவிக்கிறது.

சேரமான் பெருமாள் நாயனார் தம்முடைய 'திருக் கைலாய ஞானஉலா' என்னும் நூலிலும் இறைவனுடைய அரிய தன்மைகளையும் ஆற்றல்களையும் ஏற்றமுறப் பாடியுள்ளார்.

இறைவனுக்குப் பிறப்பும் மூப்பும் சாக்காடும் இல்லை; இந்த உண்மையை விளக்க, ''பிறவாதே தோன்றினான்'' என் கிறார்.

'காணாதே காண்பான்', 'துறவாதே யாக்கைதுறந்தான்', 'ஆழாதே ஆழ்ந்தான்', 'அகலா தகலியான்', 'ஊழால் உயராதே ஓங்கினான்', 'சூழொளிநூல் ஓதாதுணர்ந்தான்', 'நுணுகாது நுண்ணியான்', 'யாதும் அணுகா தணுகியான்', 'ஆதி', 'அரியாகிக் காப்பான்', 'அயனாய்ப் படைப்பான்', 'அரனாய் அழிப்பவனுந் தானே', 'பரனாய தேவர் அறியாத தோற்றத்தான்', 'எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள் அவ்வுருவாய்த் தோன்றி அருள் கொடுப்பான்', 'எவ்வுருவும் தானேயாய் நின்றளிப்பான்', என்றெல்லாம் அவன் தன்மைகள் - ஆற்றல்கள் பேசப்படு கின்றன.

நமக்குக்காண முடியாதவனாயினும் அவன் அனைத்தை யும் காண்பவன்'' என்னும் கருத்தில் 'காணாதே காண்பான்' என்னும் தொடர் அமைந்துள்ளது. 'துறக்காமல் யாக்கை துறந்தான்' என்னும் தொடர் அவன் பற்றற்றவன் என்பதனையும் உருவமற்றும் இருப்பவன் என்னும் உண்மையையும் வெளிப் படுத்துகிறது.

இறைவன் உள்ளும் புறமும் இருப்பவன் என்பதனை, 'ஆழாதே ஆழ்ந்தான்' என்னும் தொடர் குறிப்பிடுகிறது.

இறைவன் நம் மனத்தில் அகலாமலும் புறத்தோற்றத்திற்குக் காணமுடியாமல் அகன்றும் உள்ளான் என்னும் பொருளில், 'அகலாது அகலியான்' என்னும் தொடர் அமைந்துள்ளது.

மானிடரைப்போல் அவரவர் வினைக்கேற்ப ஊழ்வினையால் உயராமல் ஓங்கி உயர்ந்து விளங்குபவன் என்பதனை 'ஊழால் உயராதே ஓங்கினான்' என்னும் தொடர் பொருள்படுகிறது.

இறைவன் அறிவுமயமானவன்; ஓதி உணரவேண்டிய தன்மை அவனுக்கு இல்லை. 'வாலறிவன்' என வள்ளுவரும் இறைவனைத் தூய அறிவினன் என்கிறார்.

நுண்ணியனாக அவன் ஆக்கப் பெறுவதில்லை. இயல்பாகவே நுண்மைப் பொருளாக விளங்குபவன். அதனாலேயே 'நுணுகாது நுண்ணியான்' என்கிறார்.

இறைவனைக் காண அவனைத் தேடி அவனை அணுகத் தேவையில்லை. அவன் எல்லாமாக இருப்பவன். எப்பொருளும் அவனை அணுகாமலே அப்பொருள்களில் எல்லாம் பொருந்தி உள்ளான். எனவே, 'யாதும் அணுகா தணுகியான்' என்று ஆண்டவனைக் குறிப்பிடுகிறார்.

இறைவன் பழமையானவன்; ''ஆதிபகவன்'' என வள்ளுவரும் குறிப்பிட்டுள்ளார்; ''முன்னைய பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன்'' என மாணிக்கவாசகரும் இறைவனைப் பழமையானவன் என்றே குறிப்பிட்டுள்ளார்.

சிவபெருமான் வேறு திருமால் வேறு அல்லர்; அயனாகிய பிரம்மனும் வேறு அல்லர்.

சிவபிரானே காக்கும் கடவுளாகிய திருமாலாகவும் படைக்கும் கடவுளாகிய பிரம்மனாகவும் விளங்குகிறார். அழிப்பவனும் அவனே. இவ்வுண்மைகளையே,

'அரியாகிக் காப்பான்', 'அயனாய்ப்படைப்பான்' 'அரனாய் அழிப்பவனுந்தானே' என்னும் தொடர்கள் விளக்கு கின்றன.

திருக்குற்றாலநாதர், மும்மூர்த்திகளின் ஒட்டுமொத்த வடிவமாகக் கோயில் கொண்டுள்ளமை இக்கருத்தை அடிப் படையாகக் கொண்டே என்பதனை அறிகிறோம்.

அன்பால் மட்டுமே அவனை உணரமுடியும். அறி வாலும் ஆற்றலாலும் அறிய முடியாது என்பதால்தான், 'பரனாய தேவர் அறியாத தோற்றத்தான்' என்கிறார்.

நம் உள்ளத்துள் எந்த வடிவில் நினைக்கிறோமோ அந்த வடிவில் உள்ளத்துள் இறைவன் தோன்றுவான் என்னும் அரிய உண்மையை, 'எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள் அவ்வுருவாய்த் தோன்றி அருள் கொடுப்பான்' என்கிறார்.

எந்த வடிவத்திலும் இறைவன் நம் உள்ளத்தில் நினைத்த படி வருவான்'' என்பது எண்ணிப் பார்த்தற்குரிய ஆன்மீகச் செய்தியாகும்.

ஒவ்வொருவரும் தாம் வணங்கும் இறைவனை உள்ளத் தில், திருக்கோயிலில் கண்ட சிலைவடிவத்தில் அல்லது தம் கற்பனைக்கேற்ற உருவத்தில் அடிக்கடி நினைத்தல் இயல்பு. உள்ளத்தில் எதை நினைத்தாலும் அது படமாகத் தோன்றும். உள்ளம் அகக்கண்ணாடி போன்றது. எண்ணங்கள் உருவங்களாக அதில் படிகின்றன; எண்ணும் வடிவிலும் அகக்கண்ணுக்குக் காட்சியளிக்கின்றன.

சிற்பி செதுக்கும் சிலையின் அழகை விட, பேரழ குணர்ச்சியுடன் இறைவன் வடிவத்தை எண்ணி, எண்ணிய பேரழகு வடிவில் இறைவனை அகக்கண்ணால் காணலாம்.

உலகில் உள்ள அனைத்து உயிரினங்களும் அவனால் படைக்கப்பட்டு அவனுடைய பல்வேறு வடிவங்களாக

வாழ்கின்றன. அத்தகைய உயிர்களுள் மனித வடிவமும் இருக் லாம்; விலங்கு வடிவமும் இருக்கலாம்; பாம்பு வடிவமு திகழலாம்; மரங்களின் வடிவங்களாகவும் இருக்கலாம். சூரியன் நிலவு, வானம், கடல், ஆறு, நிலம், தீ முதலிய வடிவங்களாகவு விளங்கலாம். இத்தகைய வடிவ வேறுபாடுகளால், இறைவனை யும் தாம்தாம் விரும்பியவாறு கற்பனை செய்து கண்டுணர்ந்து சிலைகளாகவும் வடித்துத் திருக்கோயில்களும் அமைத்துப் பூசை செய்து மலரால் அருச்சனை செய்தும் வழிபாடு நடத்துகிறோம் ''எல்லா இயற்கைப் பொருள்களும் தெய்வங்களே; எல்ல உயிர்களும் கடவுளின் அங்கங்களே!'' என்னும் மெய்யுணர் தேவை.

★ ★

# 7. திருமுருகாற்றுப்படையில் உணர்த்தப்பெறும் ஆன்மீகச் செய்திகள்

'திருமுருகாற்றுப்படை' நூல் பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று; இதனை இயற்றியவர் நக்கீரர்.

திருமுருகாற்றுப்படை முருகன் கோயில் கொண்டுள்ள திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழனி), திருவேரகம் (சுவாமிமலை), குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய அறுபடை வீடுகளைப் பற்றிய ஆன்மீக நூல்.

சூரபன்மன் மாமரமாக வடிவெடுத்து விளங்க, அம் மாமரத்தின் அடிப்பகுதியை முருகனுடைய அடைய முடியாத நல்ல புகழையுடைய செவ்வேல் வெட்டியது'' என்று அவுணர்களை வென்ற முருகனுடைய வேலின் வெற்றி பேசப் பெறுகிறது:

''அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேல் சேஎய்'' (வரிகள்: 59-61)

திருச்சீரலைவாய் முருகனுடைய ஆறுமுகங்கள் வழங்கும் அருள் நிறைந்த தோற்றங்கள் விளக்கப்பட்டுள்ளன:

ஒருமுகம் பெரிய இருள் பொருந்திய உலகம் குற்றமின்றி விளங்கப் பலகதிர்கள் விரிந்தமைந்ததாகத் தோற்றுகிறது; ஒருமுகம், ஆர்வலர்கள் (பக்தர்கள் - அடியார்கள்) போற்றும் பான்மையில் இனிதாக அமைந்து அன்புடன் மகிழ்ந்து வரங் கொடுத்து அமைந்துள்ளது; ஒருமுகம் மந்திர விதிப்படி வழுவாத அந்தணர்களின் வேள்வியை ஏற்பதாக உள்ளது; ஒருமுகம், எஞ்சியுள்ள பொருள்களைக் களிப்புடன் நாடி நிலவைப் போல் திசைகளை விளக்குகிறது; ஒருமுகம், பகைவர்களைத் தேய்த்துச் செல்லும் போரில் அழித்துக் கறுவுகொண்ட நெஞ்சத்தோடு

போர்க்களத்தை விரும்பியது; ஒருமுகம் குறவர்களின் மென்மை யான மகள், கொடிபோன்ற இடையினை உடைய மெல்லியளான வள்ளியோடு நகைத்துக் கொண்டிருந்தது.

முருகப்பிரானுடைய பன்னிருகைகளின் செயல்களை யும் திருமுருகாற்றுப்படை விளக்குகிறது:

1. வானில் கதிரவனோடு சென்று அவன் வெம்மையைத் தாங்கும் மரபினையுடைய முனிவர்க்கு அருள் செய்ய உயர்ந்தது ஒருகை; 2. வள்ளியின் இடையை ஏந்தியது ஒரு கை; 3. ஒரு கை அழகிய ஆடையை அணிந்த துடையின் மீது அசைந்தது. 4. ஒரு கை அங்குசத்தைச் செலுத்தியது; 5, 6 இரு கைகளில் அழகிய கரிய கிடுகுகள் விளங்க வேல் வலப்புறம் அமைந்திருந்தது; 7. ஒருகை மார்புடன் விளங்கியது; 8. ஒருகை மாலையுடன் விளங்கியது; 9. ஒருகை கீழே விழும் தொடியின்மீது அமைந்து அதனைச் சுழற்றிக் கொண்டிருந்தது; 10. ஒருகை பாடும் இனிய மணி படும்படி அசைத்தது; 11. ஒருகை நீலநிற ஆகாயத்தின் மிக்க மழைபொழிய வைத்தது; 12. ஒருகை தேவ மகளிர்க்கு (தேவ யானைக்கு) மாலைசூட்டியது.

''விண்செலல் மரபின் ஐயர்க் கேந்தியது
ஒருகை; உக்கம் சேர்த்தியது ஒருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசைஇயது
ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை இருகை
ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப ஒருகை
மார்பொடு விளங்க ஒருகை
தாரொடு பொலிய ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ட ஒருகை
பாடின் படுமணி இரட்ட ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட ஆங்குஅப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி''.

(வரிகள்: 107-118)

திருவாவினன் குடியைப் பற்றிப் பாடும்போது, முனிவர்களைப் பற்றிய வருணனை வாயிலாக அவர்களின் தூய எளிய தவ வாழ்க்கை திருமுருகாற்றுப்படையில் துலக்கப்பெறுகிறது.

மரவுரி அணிந்த உடுக்கையர்; சீரான வலம்புரிச் சங்கு போன்ற வெண்மையான நரை முடியினர்; குற்றமற இமைக்கும் உருவினர்; மான்தோலினை அணிந்த தசை அழிந்த எலும்புகள் எழுந்து இயங்கும் மார்பையுடையவர்கள்; பல நாட்கள் உண்ணாது விரதம் பூண்டவர்கள். பகையோடு சினம் நீக்கிய மனத்தினர்; சிறிதும் கற்றவர்கள் அறியாத அறிவினை உடையவர்கள்; கற்றோர்க்குத் தாம் எல்லையாகிய தலைமையினை உடையவர்கள்; காமமுடன் கடுஞ்சினம் அறுத்த காட்சியினர்; துன்பம் சிறிதும் அறியாத இயல்பினை உடையவர்கள். குற்ற மற்ற அறிவினர்'' என்று துறவிகளின் உடை, முடி, யாக்கை, மனம், அறிவு, தூய உள்ளம் ஆகியன பற்றி உணர்த்தப் பெறுகிறது.

ஆன்மீக நெறியினர் எத்தகைய எளிய வாழ்க்கையினராகவும் உண்டி சுருக்குதல், மாசற்ற மனம் கொள்ளுதல், சினமும் பகையுணர்வும் அற்ற தூய நெஞ்சினராகத் திகழ்தல் ஆகிய அறவாழ்க்கையை யுடையவராகவும் விளங்க வேண்டும் என்பதனைத் திருமுருகாற்றுப்படை இயம்புகிறது: உள்ளத்திலும் அறிவிலும் தூய்மை பொலிவதனால் அவர்கள் இறைவனுடைய தன்மையினராகின்றனர்; இறைவனை அடையும் தகுதியும் பெற்றவராகின்றனர்.

முனிவர்களைப் பற்றிய செய்தி வருமாறு:

''சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்

கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர்....'' 126-137)

*பழமுதிர்சோலையில் உள்ள முருகனை அடியார்கள்,*

*''கார்த்திகைப் பெண்டிர் அறுவர் பெற்ற ஆறு திருமுகங்கள் கொண்ட செல்வனே! ஆல்அமர் கடவுள் சிவபிரானுடைய புதல்வனே! இமயமலையைச் சார்ந்த மலைமகளாகிய உமையின் மகனே! பகைவர்க்குக் கூற்றுவனே! வெல்லும் போருக்குரிய கொற்றவையின் சிறுவனே! பழையோள் குழவியே! வானோர் வணங்கும் விற்படைக்குரிய தானைத் தலைவனே! போரில் ஒப்பற்றவனே! போரிடும் வலிய வீரனே! அந்தணர்க்குச் செல்வமாக இருப்பவனே! அறிந்தோர் புகழ்ந்துரைக்கும் மலை மங்கையராகிய வள்ளியின் கணவனே! ஆண்மை மிக்கோருள் ஆண் சிங்கமே! வேல்கொண்ட பெரிய கையினையுடைய மிக்க பெரும் செல்வ! கிரவுஞ்ச மலையை அழித்த குன்றாத வெற்றியினையுடைய விண்ணை அளாவிய உயரிய மலைக்குரிய குறிஞ்சிக் கிழவனே! பலர்புகழும் நன்மொழிப் புலவர் ஏறே! பெறுதற்கரிய மரபினையுடைய பெரும்பெயர் முருகனே! விரும்பியவூர்கட்கு விரும்பிய பொருளை நுகரச் செய்யும் பெருமைக்குரிய பேராளனே! ஏங்கினவர்கட்கு அருள்புரியும் பொன்னொளிபூண்ட குழந்தையே! நெருங்கிய போர்க்காலத்தில் வென்று ஆடுகின்ற நிலத்தில் பரிசிலர்களை ஆதரிக்கும் அழகிய வடிவுடைய நெடுவேளே! பெரியோர் போற்றி வணங்கும் பெரும்பெயர் கொண்ட கடவுளே! சூரபன்மனாகிய மாமரத்தை அறுத்த வலிமையுடைய மதயானையின் வலிமையுடையவனே! போராற்றல் மிக்க ஒப்பற்றவனே! பெருமையுடைய தலைவனே!'' என்று இரவலனாக வந்த அடியார் முருகன் அருளை இறைஞ்சுகின்றனர்.*

*''இறைவனாகிய முருகனை அளந்தறிதல் மன்னுயிர்களுக்கு அரிது'' எனவும் ''நினக்கு ஒப்பானவர் எவருமிலர்'' எனவும் முருகனைப் போற்றுகின்றனர்.*

தெய்வத்தன்மையுடைய வல்லமை விளங்கும் வானளாவிய உயர்ந்த வடிவத்தில் வந்தடைந்து கண்டோர் வருந்துதற்குக் காரணமாகிய பேருருவத்தை அடக்கிக் கொண்டு பழமையான தன் மணம் கமழும் தெய்வ இளம் அழகைக் காட்டி, ''அஞ்சற்க! நின்வருகையை அறிவேன்'' என்று அன்புடைய நன்மொழியைக் கலந்து, கரிய கடல் சூழ்ந்த உலகத்தில் ஒப்பற்றவனாகித் தோன்ற அழிவற்ற வீடுபேறாகிய சிறந்த பெறுதற்கு அரிய பரிசில் அருள்வாயாக!'' என்று இரவலராக வந்த அடியார் வேண்டுகிறார்:

''தெய்வம் சான்ற திறல்விளங் குருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்தி
அணங்குசால் உயர்நிலைதழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவுஎன
அன்புடை நன்மொழி அளைஇ விளிவுஇன்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி''. (வரிகள்: 287-295)

முருகன் வானளாவிய (எல்லா உலகங்களையும் தழுவிய) பேருருவம் உடையவனாக இருந்தாலும் தன் அடியார்களுக்கு ''அஞ்சற்க!'' எனக்கூறி நெருங்கிவந்து வீடுபேறு அருளும் தன்மையன் என்பதனால், இறைவன் எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்டவன் என்பதும் அனைத்தையும் அறிந்தவன் என்பதும் பெறப்படும்.

★ ★

# 8. திருக்கண்ணப்ப தேவர் திருமறம் உணர்த்தும் ஆன்மீகச் செய்திகள்

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் இறைவனது அன்பில் சிறந்த அடியவராகிய கண்ணப்ப நாயனாரைப் பற்றி நக்கீர தேவநாயனார் நெஞ்சம் நெகிழ்ந்து நயமுற 162 அடிகளில் அரிய வரலாற்று ஆன்மீக இலக்கியம் படைத்துள்ளார். அவ் வினிய இலக்கியம் 'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' என்னும் தலைப்பில் அமைந்துள்ளது.

திருக்கண்ணப்ப நாயனார், 'திண்ணன்' என்னும் பெயரினர். திருக்காளத்தியைச் சார்ந்த பொத்தப்பி நாட்டு உடுப்பூர் வேட்டுவர்; பெற்றோர் தந்தை, நாகன், தாய் தத்தை ஆகியோராவர்.

திருக்காளத்தியப்பருக்கும் பசிக்கும் என வருந்திய உள்ளம் கொண்ட திண்ணன், விலங்குகளை வேட்டையாடி, இறைச்சியைத் தீயிலிட்டுப் பொசுக்கிப் பக்குவப்படுத்தினார்; வாயிலிட்டுச் சுவைத்துத் தேர்ந்தார்; சுனைநீரை மஞ்சன நீராகத் தன் வாயில் முகந்து வைத்துக் கொண்டார்; செந்நிறப் பூக்களைத் தன் தலைமுடியில் செருகிக்கொண்டார்; திருக்காளத்திச் சிவபிரானுக்குச் சிவகோசரியார் என்னும் மறையோன் துகில்சுற்றி, தூநீர் ஆட்டி, மலரால் அலங்கரித்து அருச்சனை செய்து வழிபாடு செய்த பிறகு, திண்ணன் சென்று தீயிலிட்டுப் பக்குவப்படுத்திய இறைச்சியை இறைவனுக்கு உணவாகப் படைத்தார்; வாயில் முகந்து சென்ற நீரால் அபிடேகம் செய்தார்; அவற்றிற்கு முன்னர் சிவகோசரியார் சூட்டிய மாலை முதலியவற்றைத் தம் செருப்புக் காலால் அகற்றினார். சிவபிரானை அலங்கரித்த பிறகு அக்காட்சியைக் கண்டு கண்டு உள்ளம் கசிந்து அன்பினால் கூத்தாடினார். இறைவனை வணங்குவோர் கல்வியறிவு அற்ற வேட்டையாடும் கொடுந்தொழிலராயினும் தூய உள்ளன்பு உடையவர்களாயின் அதனை இறைவன் உகந்து ஏற்று வீடுபேறு அளிப்பான் என்பதற்குக் கண்ணப்பர் வரலாறு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது:

''பூசனை தன்னைப் புக்கொரு காலில்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
இடுபுனல் மேனியில் ஆட்டித் தன்தலைத்
தங்கிய துவர்ப்பூ ஏற்றி இறைச்சியில்
பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக்
கண்டுகண் டுள்ளங் கசிந்து காதலில்
கொண்டதோர் கூத்துமுன் ஆடிக் குரைகழல்
அன்பொடும் இறுக இறைச்சி ஆரா
அன்பொடும் கானகம் அடையும்''. (வரிகள்: 58-66)

*சிவகோசரியாரின் கனவில் திண்ணனாரின் பண்புகளைச் சிவபெருமான் விளக்குகிறார்; ''உரிமையில் சிறந்த மாதவன்; அவன் உவந்து இயங்கிய இடம் முனிவர் வனம்; அவன் செருப் படிகள் விருப்பான தூவும் பூக்கள்; அவன்வாய் தூய பொற்குடம், அதில் தங்கும் நீர் கங்கையின் நீர்; நீருக்கு இடும் மாமணிகள் அவனுடைய வரிசையான பற்கள்; அப்பற்களுக்கிடும் தூயமலர் அவனது நாக்கு; எச்சில் கலந்த நீர் விடும்பொழுது உறிஞ்சிய அவனது மீசையாகிய புல்லிய மயிர் தருப்பைப் புல்லைவிட நமக்கு இனியதே; அவன் தலையில் தங்கிய சருகாகிய இலை, கற்பகத்து மலரே; அவன் உகந்து இட்ட இறைச்சி எனக்கு நல்ல மாதவம் உடையோர் இட்ட நெய்யும் பாலும் அவியும் ஆகும்.'' என்று திண்ணனாரின் பேரன்பை அவன் செயல்களைக் கொண்டு சிவபிரான் விளக்கும் வரிகள் இறைவனின் பேரருளினை நன்கு உணர்த்துகின்றன. அவை வருமாறு:*

''புரிவொடு பூசனை செய்யும்
குனிசிலை வேடன் குணமவை ஆவன
உரிமையிற் சிறந்தநன் மாதவன் என்றுணர்
அவனுகந் தியங்கிய இடம்முனி வனமதுவே, அவன்
செருப்படி யாவன விருப்புறு துவலே
எழிலவன் வாயது தூயபொற் குடமே
அதனில் தங்குநீர் கங்கையின் புனலே
புனற்கிடு மாமணி அவன்நிரைப் பல்லே
அதற்கிடு தூமலர் அவனது நாவே
உப்புனல் விடும்பொழு துரிஞ்சிய மீசைப்

புன்மயிர் குசை யினும் நம்முடிக் கினிதே அவன்தலை
தங்கிய சருகிலை தருப்பையிற் பொதிந்த
அங்குலி கற்பகத் தலரே அவனுகந்து
இட்ட இறைச்சி எனக்குநன் மாதவர்
இட்ட நெய்பால் அவியே''

*(வரிகள்: 98-112)*

*திருக்காளத்தியப்பருக்குரிய மூன்று கண்களுள் ஒன்றில் உதிரம் இடைவிடாமல் ஒழுகியது கண்டு திண்ணன் நடுக்குற்றுக் கண்ணீர் சிந்துகிறார்; யார்இச் செயல் செய்தது எனத் திரிந்து தேடியும் எவரையும் காணாமல், மருத்துவம் செய்ய முற்படு கிறார்; மருந்துகளைப் பிழிகிறார்; குருதி நிற்கவில்லை; தன் கண்ணைக் கணை கொண்டு தோண்டி எடுத்துப் பழுதுற்ற சிவ பெருமானின் கண்ணில் அப்புகிறார்; குருதி நிற்கக் கண்டு மற்றொரு கண்ணும் பழுதுறவே தன் மற்றைக் கண்ணையும் அம்பினால் தோண்ட முற்படும்போது, தடுத்தற்பொருட்டு,*

''நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பஎன்
அன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்ப''

*என்று காளத்தியப்பன் இன்னுரை கூறி, அழகிய சிவலிங்கத் தினின்றும் தோன்றிய மலர்க்கையால் கண்ணப்பனின் கையை அம்புடன் பிடித்து அருள்கிறார். கண்ணப்பருக்கு இவ்வாறு இறைவன் அருள்புரிகிறார்.*

*'கல்' என்று சிவலிங்கத்தைக் கருதாமல் உயிருள்ள தெய்வம் என் நம்பித் தன் கண்ணையே தோண்டி எடுத்து அப்பி வைத்த செயல் கண்ணப்பநாயனாருடைய தீவிர இறையன்பை உணர்த்துகிறது. கண்ணே உடல் உறுப்புகளுள் மிக உயர்ந்தது; கண்ணையே அப்பித் தியாகம் செய்த அவரது ஆன்மீக உணர்வின் அளவை யாராலும் அளவிட்டு உணரமுடியாது.*

*பிறர் துன்பத்தைப் போக்கும் உணர்வு ஆன்மீக உணர்வு களுள் மிகச் சிறந்த உணர்வு என்று உணரலாம்.*

★ ★

# 9. கம்பர் காட்டும் ஆன்மீகம்

இராம காதையாகிய கம்பராமாயணத்தில் அமைந்துள்ள யுத்த காண்டம் - இரணியன் வதைப்படலத்துள், திருமாலின் மாண்புகள் உணர்த்தப்பெற்றுள்ளன. மும்மூர்த்திகளுள் முதன்மை யானவனாகிய அவன், என்றும் அழியாதவன் எனப் புகழப் பெறுகிறான்.

''எற்றை நாளினு முளனெனு மிறைவனு மயனும்
கற்றை யஞ்சடைக் கடவுளுங் காத்தளித் தழிக்கும்
ஒற்றை யண்டத்தி னளவினோ அதன்புறத் துலவா
மற்றை யண்டத்துந் தன்பெய ரேசொல வாழ்ந்தான்''

என்னும் பாடலால், காத்தல், அளித்தல், அழித்தல் ஆகிய முத் தொழில்களுக்கும் இறைவன் திருமாலாகவும் பிரம்மனாகவும் சிவனாகவும் விளங்குகிறான். உயிரினங்களைத் தோற்றுவிக்கும் செயலை, 'அளித்தல்' என்னும் சொல் குறிப்பிடுகிறது.

''எற்றை நாளினு முளனெனு மிறைவனும்'' என்னும் தொடர் என்றும் உள்ளவன் திருமால் எனச் சுட்டுகிறது.

பிரகலாதனுடைய ஆசிரியர், இரணியன் பெயரைச் சொல்லும்படிக் கூறியபோது, பிரகலாதன் இருகாதுகளின் துளைகளையும் பொத்திக்கொண்டு, ''நற்றவமன்று'' என்று கூறி மறுக்கிறான்; மேலும், வேதத்தின் உச்சியாகிய - மெய்ப்பொரு ளாகிய நாராயணனின் பெயரை விரித்துரைக்கிறான். இதனை,

''ஓதப் புக்கவ னுந்தைபே ருரையென லோடும்
போதத் தன்செவித் தொளையிரு கைகளாற் பொத்தி
மூதக் கோயிது நற்றவ மன்றென மொழியா
வேதத்துச்சியின் மெய்ப்பொருட் பெயரினை விரித்தான்''

என்னும் பாடல் (எண்: 22) வெளிப்படுத்துகிறது.

''வேதத்தின் முதற்சொல் பிரணவம்; அது முதலில் கூ
பொருள் நாராயணன்'' என்னும் உண்மையை, ''முன்னை மூ
தின் முதற்பெயர் மொழிவது மொழிந்தேன்'' என்று பிரகலா
மூலம் கம்பர் விளக்கியுள்ளார். (25 ஆம் பாடல்).

மேலும் பிரகலாதன்,

ஆதி நாயகன் பெயரன்றி யான்பிறிதறியேன்'' (பாடல்:

என்கிறான்; முதன்மையான தலைவன், ஆதிநாயகன் திருப
எனச் சொல்லப் பெற்றமையை அறியலாம்.

''நாராயணன் எல்லாப் பொருள்களுக்கும் முடிவு எல்
யாகக் காணப் பெற்றவன்'' என்பதும்,

''தொல்லை நான்மறை வரன்முறைத் துணிபொருட்
கெல்லாம்
எல்லை கண்டவ னகம்புகுந் திடங்கொண்ட தென்னுள்''

(பாடல்:

என்னும் வரிகளால் அறியலாகிறது.

''மறைகள் ஓதத் தொடங்கும்போது முதலில் சொல்
பெறுபவன், ஒப்பற்றவன், அனைவர்க்கும் தலைவன் நா
யணன். அவன் திருப்பெயர் உணரக் கருதக் கேட்டிடக் க
டுரைத்துத் துன்பங்களைக் கடக்க உரியது. இதனைவி
மற்றொன்று இல்லை'' எனப் பிரகலாதன் கூறுகிறான்.

இதனை,

''சுருதி யாதியில் தொடங்குறு மெல்லையிற் சொல்லும்
ஒருவன் யாவர்க்கும் நாயகன் திருப்பெய ருணரக்
கருதக் கேட்டிடக் கட்டுரைத் திடர்க்கடல் கடக்க
உரிய மற்றிதின் நல்லதொன் றில்லென வுரைத்தான்''.

(பாடல்: 4

எனக் கம்பர் ஏற்றமுறப் பிரகலாதன் வாயிலாக உணர்த்துகிறார்

இம்மண்ணுலகம் முதற்கொண்டு எல்லா உலகங்களிலும் வாழ்கின்ற சரம், அசரம் என்னும் பொருள்களின் உள் பொருந்திய மனத்தில் உள்ள அறிவும் நினைப்பது இவ் எட்டெழுத்துக் களேயன்றி மற்றவை இல்லை.

நிற்பன, திரிவன எல்லாம் நாராயணனையே நினைக் கின்றன என்பதால், அனைத்துள்ளும் இறைவன் பொருந்தியுள்ள உண்மையை உணரலாம்.

''மண்ணி னின்றுமேல் மலரய னுலகுற வாழும்
எண்ணில் பூதங்கள் நிற்பன திரிவன விவற்றின்
உண் ணிறைந்துள கரணத்தி னூங்குள வுணர்வும்
எண்ணு கின்றதிவ் வெட்டெழுத் தேபிறி தில்லை''.
(பாடல்: 43)

என்னும் பாடல் மேற்குறிப்பிட்டுள்ள உண்மையை உணர்த்து கிறது.

''வித்தின்றி விளைவதொன் றில்லை'' என்னும் தொடர் வாயிலாகக் கடவுள் ஒருவர் இல்லாமல் எந்த உயிரும் இல்லை என்பதனை அறியலாம்.

இரணியனுக்குப் பிரகலாதன் கூறுவதாகக் கம்பர் உலகத் தார்க்கு இறைவனைப் பற்றிய அரிய உண்மைகளை நாரா யணன்மேல் ஏற்றிக் கூறியுள்ளார். இது உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனிபோல் வெளிப்படை எனவும் தெளிவாக்குகிறார்:

''வித்தின்றி விளைவதொன் றில்லை வேந்தநின்
பித்தின்றி யுணர்தியே லளவைப் பெய்குவன்
உய்த்தொன்று மொழிவின்றி யுணர்தற் பாற்றெனாக்
கைத்துன்று நெல்லியங் கனியிற் காண்டியால்''.
(பாடல்: 58)

''இந்த அரியதத்துவத்தைக் கூறுவேன்'' என்னும் பொரு ளில், ''அளவைப் பெய்குவன்'' என்னும் தொடர் அமைந் துள்ளது.

*''இறைவன் எல்லா உலகங்களையும் படைத்தவன்; அவற்றுள் பல உயிரினங்களாக நிலைத்து நின்றவன்; அவற்றுள் தங்குபவனாகிய அவ் இறைவன் பின்னும் முன்னும் அற்றவன்; அவற்றிலிருந்து நீங்காதவன்; அவனுடைய தொன்மையான நிலையை ஒருவரால் துணிந்து சொல்ல முடியாது'' என்னும் பேருண்மையை,*

''தன்னுளே யுலகங்க ளெவையுந் தந்தவை
தன்னுளே நின்றுதா னவற்றுட் டங்குவான்
பின்னிலன் முன்னில னொருவன் பேர்கிலன்
தொன்னிலை யொருவராற் றுணியற் பாலதோ''.

*(பாடல் எண்: 59)*

*''பரந்துள்ள பொருள்கள் எல்லாவற்றையும் வெவ்வே றாகப் பகுத்துக் காண்பன சாங்கியம், யோகம் என்பன. அவற்றை உணர்ந்தவர்களன்றி மற்றவர்கள் இறைவனுடைய ஓங்கியுயர்ந்த ஒப்பற்ற நிலையை உணரமாட்டார்கள் என்னும் தத்துவத்தை,*

''சாங்கியம் யோகமென் றிரண்டு தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை யுணர்ந்தவர்க் கன்றி யன்னவன்
ஓங்கிய தனிநிலை யுணரற் பாலதோ'' (பாடல் எண்: 60)

*என்னும் பாடல் தெரிவிக்கிறது.*

*இறைவனுடைய தன்மையை அளவையாகிய தத்துவத்தால் அறிய முடியாது; அறிவுக்கும் அப்பாற்பட்டது; உபநிடதங்களின் சொற்களின் பொருள்களால் சொல்ல முடியாதவன் இறைவன்; மறைந்துள்ள அவன் மாயத்தன்மையை யார் அறிவர்? அவன் மெய்ம்மையைக் கண்டவர் எவரும் இலர்.*

*இவ் உண்மைகளை,*

''அளவையா னளப்பரி தறிவி னப்புறத்து
உளவையா வுபநிடதங்க ளோதுறு

கிளவியார் பொருள்களாற் கிளக்கு றாதவன்
களவையா ரறிகுவார் மெய்ம்மை கண்டிலார்''.

(பாடல்: 62)

''இறைவன் மேலுலகம், நிலவுலகம், கீழுலகம் ஆகிய மூன்று உலகங்களின் வடிவமாக விளங்குபவன்; சத்துவம், இரசசு, தமசு என்னும் மூன்று குணங்களின் உருவமாக இருப்பவன்; யாவையுமாய், எவருமாய் எண்ணற்ற பொருள்களாகவும் உயிர்களாகவும் வேறுபட்டு நீக்கமற நிலைத்துள்ள ஒருவன்; தேவரும் முனிவரும் உணரத்தக்க அம்முதற்பொருள் தேயுமோ? (அழியுமோ?)'' என்னும் எல்லாமாக விளங்கும் இறைவனின் மாட்சியை,

''மூவகை யுலகுமாய்க் குணங்கள் மூன்றுமாய்
யாவையு மெவருமா யெண்ணில் வேறுபட்டு
ஓவலி லொருநிலை யொருவன் செய்வினை
தேவரு முனிவரு முணரத் தேயுமோ'' (பாடல்: 63)

என்று கம்பர் பிரகலாதன் வாயிலாக விளக்குகிறார்.

''கருமமாகவும் கருமத்தின் பயனாகவும் அப்பயன்தரும் முதல் தலைவனாகவும் இறைவனாகிய தானும் ஆனவன்; அத்தகைய இறைவனுடைய அருமையையும் பெருமையையும் அறியவல்லவர்கள், இம்மை மறுமை என்னும் கடலில் இருந்து கரைஏறப் பெறுவர் (வீடுபேறு அடைவர்)'' என்னும் உண்மைகளை,

''கருமமுங் கருமத்தின் பயனு மப்பயன்
தருமுதற் றலைவனுந் தானு மானவன்
அருமையும் பெருமையும் அறிய வல்லவர்
இருமையென் றுரைசெயுங் கடனின் றேறுவார்.

(பாடல். 64)

என்னும் பாடல் அறிவிக்கிறது.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார்''

என்னும் திருக்குறள் உண்மையைக் கம்பரும் உணர்த்தியுள்ள பாங்கு அறிந்து இன்புறத்தக்கதாகும்.

இறைவனைக் கண்டு பிறருக்கும் உணர்த்திக் காட்டுவார் உள்ளங்களுள் நிறைந்திருக்கும் உணர்வாக இருப்பவன் நாரா யணன். மண்ணிலும் வானிலும் மற்ற மூன்றுமாகிய நீர், நெருப்பு, காற்று என்பவற்றிலும் மறைந்துள்ளான். நெடியவனும் ஒப்பற்ற வனுமாகிய நாராயணன் எண்ணற்றவன்; கண்களிலும் மறைந் துள்ளான்.

உள்ளும் புறமுமாகி எங்கும் நிறைந்துள்ள இறைவன் எண்ணற்றவன். எனினும் கண்ணில் நெருங்கி இருப்பதனால் - (மிகவும் நெருக்கமாக) நம்முள் இருப்பதனால் அவனைப் புறத்தே கண்ணுக்கு அப்பால் ஒரே ஒரு பொருளாக மட்டும் காணமுடியாது; எண்ணற்ற பொருள்களின் ஒட்டுமொத்தமே ஆண்டவன் வடிவம் என்பது கீழ்வரும் பாடலால் உணரத் தகும் உண்மையாகும்:

கண்ணினுங் கரந்துதான் கண்டு காட்டுவார்
உண்ணிறைந் திடு முணர் வாகி யுண்மையில்
மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்
எண்ணினும் நெடியவ **னொருவ னெண்ணிலான்.**

(பாடல்: 71)

இப்பாடல் மூலம் ஒன்றாகிய ஆதிமுதல்வன் பலவாகி எண்ணற் றவன் ஆயினன் எனவும் உணரலாம்.

"காமம் வெகுளி முதலிய எண்ணத்தக்க தீமைகளையும் அவற்றின் வலிமையையும் ஒழிக்கும் செயலை உடையவன்; அவனது திருப்பெயர்களின் சிறப்புக்களும் அவனுடைய மற்ற சோர்வளிக்காத நெடிய பாதுகாவலும் மற்றவர்களால் சொல்லத் தக்கனவோ?" என்று இறைவன் எல்லாக் குற்றங்களையும் போக்கிப் பேரின்பமாகிய பாதுகாவலை அளிப்பவன் என்னும் அரிய உண்மையைக் கம்பர் பிரகலாதன் வாயிலாக உணர்த்து கிறார்.

''காமமும் வெகுளியும் முதல கண்ணிய
தீமையும் வன்மையுந் தீர்க்குஞ் செய்கையான்
நாமமு மவன்பிற நலிகொடா நெடுஞ்
சேமமும் பிறர்களாற் செப்பற் பாலவோ''

(பாடல் எண்: 73)

இறைவனுடைய எல்லாம் அடங்கும் பேருருவமாக ஆலமரமும் அவனுள் ஒடுங்கும் அனைத்துயிர்களின் சிற்றுருவங்களாக ஆலமர விதைகளும் திகழ்கின்றன. இறைவன்வேறு, உயிர்கள் வேறு எனப் புறத்தே தோற்றங்கள் வெவ்வேறாக இருந்தாலும் இறைவனும் ஆன்மாக்களும் வெவ்வாறாக இல்லை; இறைவனிலிருந்தே ஆன்மாக்கள் உருவாகியுள்ளன. அவை இறுதியில் இறைவனிலேயே ஒடுங்குகின்றன. இந்த அரிய உண்மையுடன், காலம், கருவி, இடம், அவற்றின் பயனும் இறைவனே என்னும் உண்மையையும் கம்பர் விளக்கியுள்ளார்; மேலும், பயன்களைத் துய்ப்பவனும் அவனே; சீலமும் (ஒழுக்கமும்) செல்வமும் அவனே என்பதும் அவர் கொள்கை. இத்தகைய விளக்கம் தரும் பாடல் வருமாறு:

''காலமுங் கருவியு மிடனு மாய்க்கடைப்
பாலமை பயனுமாய்ப் பயன்றுய்ப் பானுமாய்ச்
சீலமு மவைதருந் திருவு மாயுளன்
ஆலமும் வித்துமொத் தடங்கு மாண்மையான்''.

(பாடல் எண்: 74)

இறைவன் ஓசையாகத் திகழ்பவன் என்னும் கருத்தையும், நாராயணன் உள்ளும் புறத்தும் திகழ்பவன் என்னும் உண்மையையும், வேதங்களும் மயங்கும் தன்மையன் என்னும் தன்மையையும் கம்பர் விளக்குகிறார்:

உள்ளுற வுணர்வினி துணர்ந்த வோசையோர்
தெள்விளி யாழிடைத் தெரியுஞ் செய்கையான்
உள்ளுளன் புறத்துள னொன்றும் நண்ணலான்
தள்ளரு மறைகளு மருளுந் தன்மையான்.

(பாடல்: 75)

திருமால் 'ஓம்' என்னும் ஓரெழுத்துள் உயிர் எழுத்தாக உள்ளான். அஉம் என்னும் மூன்றெழுத்துக்களுள் உயிராகிய அகரமாக உள்ளான்; எழுத்துக்களுக்கெல்லாம் அடிப்படையாக உள்ளான். அறிவுக்கு அறிவாகவும் உள்ளான். மூவுலகங்களிலும் பரவியுள்ளான். புகையும் நெருப்பும் போல் தொடர்ந்த தோற்ற முடையவன். இறைவன் நெருப்பாகவும் ஆன்மாக்கள் நெருப்பையொட்டிய (தொடர்ந்த) புகைகளாகவும் உள்ளன. 'அ' எழுத்து முதலெழுத்து; இறைவனாக 'அ' விளங்க மற்ற எழுத்துக்கள் அதனிலிருந்து தோன்றிப் பல உயிர்களாக உள்ளன.

இறைவன் 'ஓம்' என்னும் பிரணவப் பொருள் என்பதனைக் கம்பர் விளக்குதல், திருவள்ளுவருடைய திருக்குறளையும் விளக்குவதாக அமைகிறது.

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்னும் முதற்குறள் இக்கருத்தையே வெளிப்படுத்துகிறது. கடவுள் வாழ்த்தின் இரண்டாம் குறள் ''தூயஅறிவு வடிவானவன் இறைவன்'' என்னும் பொருளில், ''வாலறிவன்'' என்று குறிப்பிடுகிறது.

திருமாலின் வாமனாவதாரக் கதையைக் கம்பருடைய, ''தாம் மூவுலகமுந் தழுவிச் சார்தலால்'' என்னும் தொடர் சுட்டுகிறது. திருக்குறளும், ''உலகளந்தான் தாயதெல்லாம்'' என்றே தெரிவிக்கிறது.

இக்கருத்துக்களைத் தழுவிய கம்பரது பாடல் வருமாறு:

''ஓமெனு மோரெழுத் ததனி னுள்ளுயிர்
ஆமவன் அறிவினுக் கறிவு மாயினான்
தாம மூவுலகமுந் தழுவிச் சார்தலால்
தூமமுங் கனலும்போற் றொடர்ந்த தோற்றத்தான்''.

(பாடல்: 76)

திருமால் கடலும் அலையும் போல வேறுபாடில்லாதவன். மதங்கள் மலர்களைப் போன்றவை; அம்மலர்களைத் தொடுத்து மாலையாக்குகின்றனர்; அம்மலர்களுள் மணம் ஒரே தன்மையுடையது; மலர்கள் தனித்தனியே இருப்பனபோல் சமயங்கள் தனித்தனியே வெவ்வேறு கருத்துக்களைச் சொன்னாலும் மாலையாகத் தொடுக்கும்போது இணைகின்றன. இறைவனும் கடல் போன்றவன்; அலைகள் பலவாயினும் அவை கடலுக்கு அப்பாற்பட்டவை அல்ல; கடலின்பாற்பட்டனவே. இறைவனும் அவனிடமிருந்து தோன்றிய உயிர்களும் வெவ்வேறாகத் தோன்றினும் அவை ஒன்றே; இரண்டன்று என்னும் அத்துவைதக் கோட்பாடு இதன்மூலம் வெளிப்படுகிறது. இத்தகைய அரிய உண்மையை வெளியிடும் கம்பரது பாடல் வருமாறு:

''காலையி னறுமல ரொன்றக் கட்டிய
மாலையின் மலர் புரை சமய் வாதியர்
சூலையின் திருக்கலாற் சொல்லு வார்க்கெலாம்
வேலையுந் திரையும்போல் வேறு பாடிலான்''.

(பாடல் எண்: 77)



# 10. சிலப்பதிகாரம் உணர்த்தும் ஆன்மீகச் செய்திகள்

'சிலப்பதிகாரம்' தமிழில் தோன்றிய முதல் காப்பியம் சேரவேந்தன் செங்குட்டுவனுக்கு இளவலாகிய இளங்கோவடி களால் இயற்றப் பெற்றது; கண்ணகி-கோவலன் வரலாற்றை உணர்த்துவது.

சிலப்பதிகாரத்துள் ஊழ்வினையின் ஆற்றல் உணர்த்தப் பெறுகிறது. சைவம், வைணவம், சமணம் ஆகிய சமயங்கள் போற்றப்பெற்றுள்ளன. பல சமயக் கடவுளர்கள் வழிபடப் பெற்றனர் என்னும் சமயக் காழ்ப்பற்ற பெருமிதச் செய்தியை யும் சிலப்பதிகாரம் உணர்த்துகிறது. இளங்கோவடிகளின் பரந்த உயர்ந்த மனமே இத்தகைய சமய ஒருமைப்பாட்டுணர்வு சிலப்பதிகாரத்துள் விதைக்கப்பட்டமைக்குரிய காரணமாகும்.

மங்கல வாழ்த்துப் பாடல், சிலப்பதிகாரத்தின் முதல் காதை: இப்பகுதியில், திங்கள், ஞாயிறு, மழை ஆகிய மூன்று இயற்கைப் பொருள்கள் இளங்கோவடிகளால் வழிபாட்டிற் குரியனவாகப் போற்றப் பெற்றுள்ளன.

''திங்கள் சோழ மன்னனுடைய வெண்கொற்றக் குடை யினைப் போன்று இவ் அழகிய உலகில் தண்மையாகிய அருளைப் பரப்புகின்றது. எனவே, போற்றுவோம்!

ஞாயிறு காவிரி நாடனது ஆணைச் சக்கரம்போல் மேரு மலையை வலமாகத் திரிகிறது; அதனால், ஞாயிற்றைப் போற்றுவோம்.

மாமழையைப் போற்றுவோம்; கடல் சூழ்ந்த உலகிற்குச் சோழனது அருளைப்போல் மேல்நின்று நீரைச் சுரப்பதனால் மாட்சிமையுடைய மழையைப் போற்றுவோம்'' என்று இயற்கை வழிபாட்டு நெறியைப் புகுத்தியுள்ளார். இறைவனை இயற்கை வடிவத்தில் கண்டு வழிபடும் நெறிமுறை இது எனலாம். திங்கள்,

ஞாயிறு, மழை ஆகிய மூன்றும் உயிரினங்கள் நிலவுதற்கும் வாழ்தற்கும் மரபுகள் வழிவழியாகத் தோன்றுதற்கும் இன்றி யமையாதவை. மேலும் அவை மூன்றனையும் கண்கண்ட தெய்வங்களாகக் கருதி மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

*இயற்கை வழிபாட்டுக்குரிய பாடல்:*

''திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்குஅலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை
போன்றுஇவ்
அம்கண் உலகு அளித்த லான்.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும் -
காவிரி நாடன் திகிரிபோல் பொன்கோட்டு
மேரு வலந்திரித லான்.

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும் -
நாமநீர் வேலி உலகிற்கு அவன் அளிபோல்,
மேல்நின்று தான்சுரத்த லான்''. (வரிகள்: 1-9)

என்று இயற்கை வழிபாட்டுடன் இளங்கோவடிகள் தம் சிலப் பதிகாரக் காப்பியத்தைத் தொடங்கி இனிமையாக இறுதிவரை நடத்திச் செல்கிறார்.

திங்களாகிய நிலவை ஏன் போற்ற வேண்டும்? திங்கள் அழகிய இடத்தைக் கொண்ட உலகுக்குக் குளிர்மையாகிய தண்மையைச் செய்கிறது. அதனால், உலகத்து உயிர்களுக்கு நன்மை விளைகிறது.

'ஞாயிறு' எனப்படும் கதிரவனை ஏன் போற்ற வேண் டும்? கதிரவன் காவிரி நாடனாகிய சோழவேந்தனது ஆணைச் சக்கரம்போல் பொன்மலையாகிய மேருமலையை வலம் வரு கிறது. இயற்கைப் பொருள்கள் உலகில் நலமுடன் வாழச் சூரிய னுடைய வருகை இன்றியமையாதது; சூரியக்கோள் மற்ற கோள் கள் தன்னைச் சுற்றி இயங்கும் தன்மையில் நடுவில் உள்ளது.

எனவே, நடுவுநிலையில் நின்று செங்கோன்மை தவறாத சோழ மன்னனைப் போல் திரிவதாக இளங்கோவடிகள் அறிவுபூர்வ மாக உணர்த்தியுள்ளார்.

மாமழையை ஏன் போற்ற வேண்டும்? சோழ மன்ன னுடைய அருள்தன்மைபோல் வானில் நின்று உலகில் அது பொழிந்து நன்மை செய்வதனால் போற்ற வேண்டும்.

இச்செய்திகள் இயற்கையை இறைமையாகக் கருதி வழிபடும் தன்மையில் அமைந்துள்ளன.

திங்களாகிய நிலவினைச் சிவபெருமான் தம் சடை முடியில் சூடியுள்ளனர். முழுநிலவு அமையும் பௌர்ணமி நாட்களில் பெரும்பாலான விழாக்கள் நடத்தப் பெறுகின்றன. திங்கள் வழிபடுதற்குரிய இயற்கைத் தெய்வமாகிறது.

ஞாயிறு உயிரின வாழ்வுக்கு ஒளியும் வளர்ச்சியும் தருகிறது: ஞாயிறு இன்றேல் இந்த நில உலகமே தோன்றி யிருக்காது; அந்த முறையிலும் ஞாயிறு உலகின் முழுமுதற் பொருளாகக் கருதி வழிபடுதற்குரியதாகிறது. ''காய்கதிர்ச் செல்வன்'' எனவும் இளங்கோவடிகள் ஞாயிற்றைப் போற்றி யுள்ளார்.

உலகம் கடலால் சூழப் பெற்றிருப்பினும் மழைநீரா லேயே வாழ்கிறது. கடல், மழை தோன்றுவதற்கு அடிப்படை யாயினும், மழை நீரே அனைத்துயிர்களுக்கும் உணவாக அமை கிறது; உணவுக்குரிய தானியங்கள் தரும் பயிரினங்கள், தாவ ரங்கள் வளரவும் வாழவும் உதவுவது மழையே; மழை இல்லை யெனில் உழவு இல்லை; வாழ்வு இல்லை; மகிழ்ச்சி தரும் விழாக்கள் இல்லை; இறைவழிபாடும் இல்லை. எனவேதான், திருவள்ளுவரும் 'வான்சிறப்பு' அதிகாரத்தில் மழையின் இன்றி யமையாமையையும் சிறப்பையும் போற்றியுள்ளார்.

கண்ணகியின் வடிவம் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் வடிவம் எனப் போற்றுகிறார் இளங்கோவடிகள்;

தீதிலா வடமீனாகிய அருந்ததியின் கற்புத்திறம் கண்ணகியின் திறம் என்றும் புகழ்கிறார்:

''போதில்ஆர் திருவினாள் புகழ்உடை வடிவு என்றும்
தீதுஇலா வடமீனின் திறம் இவள்திறம் என்றும்''
(வரிகள்: 26, 27)

கோவலன் செவ்வேளாகிய முருகனோடு ஒப்பிடப் பெற்றுப் பாராட்டப் பெறுகிறான்:

''பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டு ஏத்தும் செவ்வேள்' என்று இசைபோக்கிக் காதலால்
கொண்டு ஏத்தும் கிழமையான் கோவலன் என்பான்
மன்னோ!
(வரிகள்: 37-39)

அகத்தியன் இட்ட சாபத்தின் விளைவால் வானுலகத்து ஊர்வசி, இந்திரன் மகன் சயந்தனுடன் இம்மண்ணுலகில் மாதவியாகத் தோன்றினாள்; அந்த மாதவியின் மரபில் தோன்றியவள் கோவலன் காதலி மாதவி.

ஊர்வசியின் மண்ணுலகத் தோற்றம் பற்றிய செய்தியை உணர்த்தும் பாடல் வரிகள் வருமாறு:

''தெய்வ மால்வரைத் திருமுனி அருள
எய்திய சாபத்து இந்திர சிறுவனொடு
தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பு அருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை
தாதுஅவிழ் புரிகுழல் மாதவி.'' (அரங்கேற்றுகாதை)
(பாடல் வரிகள்: 1-7)

இந்திர விழவு ஊர் எடுத்த காதையுள், மண்ணக மடந்தையின் கோலம் பேசப்பெறுகிறது. மண்ணக மடந்தை, உலக மடந்தை, நிலமடந்தை, பூமாதா என்று மக்களால் போற்றப்

*பெறுகிறாள். இந்திய நாட்டைப் பாரதமாதா என்பது போன்றே உலகத்தை 'மண்ணக மடந்தை' என, உலக அன்னை என்னும் பொருளில் தெய்வமாக இளங்கோவடிகள் போற்றியுள்ளார்:*

''அலைநீர் ஆடை, மலைமுலை ஆகத்து,
ஆரப் பேரியாற்று, மாரிக் கூந்தல்,
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை''

*(வரிகள்: 1-3)*

*இங்கு, உலக அன்னையாகிய தெய்வத்தாய் அலை நீராகிய கடலை ஆடையாகவும், மலைகளை முலைகளாகவும் மலையிடத்துப் பெரிய ஆறுகளை முத்து வடங்களாகவும், மழை மேகத்தைத் தன் கூந்தலாகவும் கொண்டுள்ளதாக இளங்கோ வடிகள் போற்றிப் பெண்தெய்வ வழிபாட்டுக்கு உருவம் படைத்துச் சிலப்பதிகாரத்தின் மூலம் வழிவழியாக உலவ விட்டுள்ளார்.*

*இந்திரனது ஏவலின்படி காவிரிப்பூம்பட்டினத்திற்குக் காவல்பூதம் வந்ததாகவும் அப்பூதத்திற்குக் கோயில் உள்ளதாகவும் இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்:*

''தேவர் கோமான் ஏவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகை'' (வரிகள் 66-67)

*காவல்பூதத்தின் பலிபீடிகையில், புழுக்கல், எள்ளுருண்டை, நிணச்சோறு, பூ, நறும்புகை, பொங்கல் ஆகியவை படைக்கப் பெற்றன என்னும் செய்தியினை,*

''புழுக்கலும் நோலையும் விழுக்குஉடை மடையும்
பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து''

*என்னும் வரிகளால் அறியலாம்.*

*நாடு முழுதும்,*

''பசியும் பிணியும் பகையும் நீங்கி,
வசியும் வளனும் சுரக்க என'' வாழ்த்தினர்.

நரபலி இடும் மரபும் அறியலாகிறது. மன்னன் வெற்றி கொள்ள வேண்டி வீரர்களுள் சிலர் தங்கள் தலைகளை வெட்டிப் பலிக்கொடை வழங்கினர் என்னும் செய்தி மெய்சிலிர்க்க வைக்கிறது; நாட்டுப்பற்றையும் வெளிப்படுத்துகிறது:

''வெந்திறல் மன்னற்கு உற்றதை ஒழிக்க'' எனப்
பலிக் கொடை புரிந்தோர் வலிக்குவரம்பு ஆகஎனக்
கல்உமிழ் கவணினர், கழிப்பிணி மறைத்தோல்,
பல்வேல் பரப்பினர் மெய்உறத்தீண்டி,
ஆர்த்துக் களம் கொண்டோர் ஆர்அமர் அழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை,

''வெற்றி வேந்தன் கொற்றம் கொள்க'' என,
நற்பலி பீடிகை நலம்கொள வைத்து ஆங்கு
உயிர்ப்பலி உண்ணும் உருமுக்குரல் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி ஊட்டி''.

(வரிகள்: 79-88)

பலி பீடிகைக்கு முன்னர் படைவீரர்கள் சென்றனர்; ''கொடிய திறமையுடைய எம்மன்னனுக்கு ஏற்படும் துன்பங்களை ஒழிப்பாயாக!'' என்று பூதத்திற்குப் பலிக்கொடை அளிக்க முற்படுவோர் வேண்டிக்கொண்டனர். அவர்கள் கல்வீசும் கவண் வீரர்கள், வேல்படை வீரர்கள் ஆவர்; கடும்போரிட்டுச் சுட்டெரிக்கும் கண்களையுடையவர்கள். 'வெற்றிவேந்தன் வெற்றி கொள்க!' எனத் தம் தலைகளை நல்ல பலிபீடிகையில் மன்னன் நலன் எய்துமாறு வைத்தனர்; உயிர்ப்பலி உண்ணும் பூதத்தின் இடிமுழக்கம் எங்கும் ஒலித்தது; முரசொலி முழங்க நரபலியிட்டனர்'' என்னும் செய்திகள் மேற்குறிப்பிட்ட பாடலில் உள்ளன.

கணவனைப் பிரிந்து வாடும் மனைவியர்கள் மீண்டும் கணவனை அடைய வேண்டி வழிபாடு செய்யும் முறை பற்றித் தேவந்தி கண்ணகிக்குத் தெரிவிப்பதாகச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் உணர்த்தியுள்ளார்:

''சோமகுண்டம் சூரியகுண்டம் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
தாம்இன் புறுவர் உலகத்துத் தையலார்''.

(கனாத்திறம் உரைத்த காதை) (வரிகள்: 59-61)

காவிரியாறு கடலோடு கலக்கும் புகாரின் நெய்தல் நிலத்தில் உள்ள கானலில் சோமகுண்டம் சூரியகுண்டம் என்னும் இரு துறைகளில் மூழ்கிக் காமவேள் கோட்டம் சென்று தொழுதால் உலகத்துப் பெண்டிர் தம் கணவரோடு இன்புறுவர் என்று சிலப்பதிகாரம் உணர்த்துகிறது.

கணவனையே தெய்வமாகக் கருதும் பெண்கள் இவ்வாறு காமவேள் கோட்டம் சென்று வணங்குவதனைப் பெருமையாகக் கருதவில்லை என்பதும் சிலப்பதிகாரச் செய்தி யாகும்.

தேவந்திகை, காமவேள் கோட்டம் சென்று தொழும் படிச் சொன்ன கூற்றைக் கண்ணகி ஏற்கவில்லை. ''பீடு அன்று'' என மறுமொழி கூறி மறுத்துவிடுகிறாள். ''பெருமை இல்லை'' என்பதே இதன் பொருள். பத்தினிப் பெண்டிர்க்குத் தெய்வ மாகக் கருதி வழிபடுதற்குரியோர் அவர்களுடைய கணவன் மார்களே என்னும் உயரிய நோக்கம் அக்காலப் பெண்டிர்க்கு இருந்துள்ளது.

சமண சமயத்தார் வணங்கும் அருகக் கடவுளின் தன்மை களையும் பலபெயர்களையும் சாரணத்தலைவன் கவுந்தியடி களுக்கு அறிவுறுத்துகிறான்:

''கழிபெருஞ் சிறப்பின் கவுந்தி காணாய்;
ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை;
இட்ட வித்தின் எதிர்த்துவந்து எய்தி
ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணா
கடுங்கால் நெடுவெளி இடும்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்

அறிவன், அறவோன், அறிவரம்பு இகந்தோன்
செறிவன், சினேந்திரன், சித்தன், பகவன்.
தருமமுதல்வன், தலைவன், தருமன்,
பொருளன், புனிதன், புராணன், புலவன்,
சினவரன், தேவன், சிவகதி நாயகன்,
பரமன், குணவதன், பரத்தில் ஒளியோன்,
தத்துவன், சாதுவன், சாரணன், காரணன்,
சித்தன், பெரியவன், செம்மல், திகழ்ஒளி,
இறைவன், குரவன், இயல்குணன், எங்கோன்;
குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்,
சங்கரன், ஈசன், சுயம்பு, சதுமுகன்,
அங்கம் பயந்தோன், அருகன், அருண்முனி
பண்ணவன், எண்குணன், பாத்தில் பழம்பொருள்,
விண்ணவன், வேதமுல்வன், விளங்கும் ஒளி,
ஓதிய வேதத்து ஒளிஊறின் அல்லது
போதார், புறவிப் பொதி அறையோர் என''.

(வரிகள்: 170-191
நாடுகாண் காதை)

''வலிய ஊழ்வினை வேண்டா என விலக்கினாலும் அது, இட்ட விதையைப் போல் நம்மை எதிர்த்து வந்து அடையும்; அதுவந்து நம்மைப் பொருந்தும்போது அதனை ஒழிக்கவும் முடியாது; கடுங்காற்றுள்ள நெடுவெளியில் ஏற்றிய சுடர்போன்று, உடம்பிடையே உயிர்கள் ஒருங்கே உடன் நிற்கமாட்டா.

அனைத்தும் அறிந்தவன், அறமுடையான், அறிவின் எல்லை கடந்தவன், எல்லாவற்றிலும் செறிந்திருப்பவன், ஐம்புலன்களை வென்றவன், அறிவுவடிவமானவன், பகவன், அறமுதல்வன், தலைவன், அறவடிவானவன், எல்லாப் பொருள் களிலும் இருப்பவன், தூய்மையானவன், பழமையானவன், புலவன், சினத்தையடக்கியவன், தேவன், சிவகதிக்குத் தலை வன், மேன்மையானவன், குணமுடையவன், பரத்திற்கு ஒளி யானவன், இறைவன் தத்துவங்களைக் கொண்டவன், சாதுவன்,

சாரணன், காரணன், சித்தன், பெரியவன், செம்மல், திகழும் ஒளியானவன், இறைவன், தலைவன், நற்குணங்கள் இயல்பாக அமைந்தவன், எம் தலைவன், குறைவில்லாப் புகழுடையவன், குணமுடைய பெரிய கோமான், சங்கரன், ஈசன், சுயம்பு, சதுமுகன், வேதங்களை அருள் செய்தவன், அருகன், அருள் புரியும் முனிவன், பண்ணவன், எண்குணன், பகுத்தற்கு இய லாத பழம்பொருள், விண்ணவன், வேதமுதல்வன், ஒளியாக விளங்குபவன்; ஓதிய வேதத்து அறிவினை அடைந்தால் அல்லது இதழ்கள் விரிகின்ற பிறவிப் பொதியாகிய அறையினை நீங்க மாட்டார்கள் என்னும் அருகனின் இயல்புகளைச் சாரணன் உணர்த்துவதாக இளங்கோவடிகள் உணர்த்தியுள்ளார்.

சாரணர் உரைத்த அறவுரையினைக் கேட்ட கவுந்தி யடிகளும் அருகனின் பெருமைகளைப் பேசுகிறார்:

''காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றை அவித்த அருக தேவனது ஞானத் திருமொழிக்கல்லது என் செவிகள் திறக்கமாட்டா; காமனை வென்றோனது ஆயிரத்தெட்டு நாமங் களையல்லாமல் மற்றவற்றை என் நா சொல்லாது; ஐம்புலன் களை வென்றவனது திருவடிகளையல்லாது பிறவற்றைக் கைக்கெட்டும் தொலைவில் கண்டாலும் என் கண்கள் காணா; அருளறம் பூண்டவனுடைய திருமெய்க்கல்லாது, என் பொரு ளற்ற உடம்பு நிலத்தில் பொருந்தாது; அருகன், அறவன், அறி வோற்கு அல்லது என் இரு கைகளும் ஒருங்கே குவியமாட்டா; மலர்மேல் நடந்த அருகதேவனது மலரடிகளையல்லாமல் என்மீது உச்சி அணியப் பொறுக்காது. இறுதியில்லாத இன்ப முடைய கடவுள் மொழிக்கு அன்றி மாறுபட்டு ஓதி என் மனம் வேறுபக்கம் பெயராது'' என்று அருக தேவனுக்காகவே தன் உடல், சொல், மனம் ஆகியவை உள்ளன என்று கவுந்தியடிகள் அருகன் புகழ் மட்டுமே பேசுபவராக உள்ளார். இந்த நிலை, ஒவ்வொருவரும் தாம் விரும்பும் வடிவத்தில் கடவுளைக் கொண்டும் நினைந்தும் வழிபடலாம் என்னும் கருத்தை நிலை நாட்டுவதாக அமைகிறது.

மாதவராகிய சாரணரும் பிறவியைத் தரும் பாசம் கவுந்திக்குக் கெடுமாறு அருளி வான்வழி சென்றதாக இளங்கோ வடிகள் குறிப்பிடுகிறார்.

இப்பகுதி சமயத் தீவிரவாதிகளின் ஆன்மீக உறுதிப் பாட்டைக் காட்டுகிறது; **நாடுகாண் காதையில்** இடம்பெறும் இக்கோட்பாட்டினைக் கீழ்க்காணும் வரிகள் தெரிவிக் கின்றன:

''சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதல்
காவுந் தியுந்தன் கைதலை மேற்கொண்டு,
ஒருமூன்று அவித்தோன் ஓதிய ஞானத்
திருமொழிக்கு அல்லது என் செவியகம் திறவா;
காமனை வென்றோன் ஆயிரத்து எட்டு
நாமம் அல்லது நவிலாது என் நா;
ஐவரை வென்றோன் அடியிணை அல்லது
கைவரை காணினும் காணா என் கண்;
அருளறம் பூண்டோன் திருமெய்க்கு அல்லது என்
பொருள்இல் யாக்கை பூமியிற் பொருந்தாது;
அருகன், அறவன், அறிவோற்கு அல்லது என்
இருகையும் கூடி ஒருவழிக் குவியா;
மலர்மிசை நடந்தோன் மலரடி அல்லது என்
தலைமிசை உச்சி தான்அணிப் பொறாஅது;
இறுதியில் இன்பத்து இறைமொழிக்கு அல்லது
மறுதர ஓதி என் மனம்புடை பெயராது''
என்றவள் இசைமொழி ஏத்தக் கேட்டு, அதற்கு
ஒன்றிய மாதவர், உயர்மிசை ஓங்கி,
நிவந்து, ஆங்கு ஒருமுழம் நீள்நிலம் நீங்கிப்,
'பவந்தரு பாசம் கவுந்தி கெடுக' என்று,
அந்தரம் ஆறாப் படர்வோர்த் தொழுது
'பந்தம் அறுக' எனப் பணிந்தனர் போந்து''.

(வரிகள்: 192-213)
(நாடுகாண் காதை)

மாங்காட்டு மறையவன் வாயிலாகத் தமிழகத்தில் உள்ளார் மட்டுமேயன்றித் திருமால் அடியார்கள், கிடந்த வண்ணம் அமைந்த திருவரங்கநாதரையும் நின்றவண்ணம் இருந்த நெடியோனாகிய திருவேங்கடவனையும் சென்று தொழுதல் மரபாக இருந்து வந்துள்ளது.

திருவரங்கநாதரின் திருக்கோலம் மாங்காட்டு மறையவனால் எழிலுற வருணிக்கப்பட்டுள்ளது:

''நீலமேகம் நெடும்பொற் குன்றத்துப்
பால்விரித்து அகலாது படிந்தது போல,
ஆயிரம் விரித்துஎழு தலைஉடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர்தொழுது ஏத்த,
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்''

(காடுகாண் காதை; வரிகள்: 35 - 40)

என்று போற்றி உரைக்கப் பெறுகிறார் திருவரங்கநாதர்.

''நீலமேகம் நீண்ட அழகிய மலையின் பக்கமெல்லாம் விரிந்து அகலாமல் படிந்து உள்ளதைப் போல ஆயிரம் தலைகளை விரித்து எழுகின்ற அருந்திறலாகிய ஆதிசேடன் என்னும் பாயலில் பள்ளிகொண்டு பலரும் தொழுது போற்றும்படி, விரிந்த அலைகளையுடைய அகன்ற காவிரியின் ஆற்றிடைக்குறையில் திருமகள் அமர்ந்த மார்பினையுடைய திருமாலின் கிடந்த வண்ணமும்'' எனத் திருமாலின் கிடந்தவண்ணம் போற்றப் பெறுகிறது.

திருவேங்கட மலையில் திருமால் நின்ற வண்ணத்தையும் மாங்காட்டு மறையவன் வாயிலாக இளங்கோவடிகள் மாண்புற விளக்கியுள்ளார்:

''வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி,
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து,

மின்னுக் கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு,
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும், பால்வெண் சங்கமும்,
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி,
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு,
பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய,
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்,
என்கண் காட்டு என்று என்உளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட்டு உள்ளேன்.''

*(வரிகள்: 41-53)*
*(காடுகாண் காதை)*

''அருவிகள் மிகுந்த திருவேங்கடமலையின் இரு பக்ரிலும் உச்சியில், ஞாயிறும் நிலவும் விளங்குகின்றன. .யில் ஓங்கிய இடத்தில் மின்னலாகிய ஆடையை உடுத்து, பில்லை ஏந்தி, நல்ல கருமேகம் நின்றதுபோல், பகைவரை நும் சக்கரப் படையும், பால் போன்ற வெண்சங்கமும், தகை ) தன் தாமரை போன்ற கையில் ஏந்தி, நலம்கிளர் ஆரம் ல் அணிந்து, பொன்னிற மலர்களாகிய ஆடையுடன் ிவுடன் தோன்றிய செங்கண் வண்ணமும் என் கண்களுக் ாட்டுக என மனம் வாட்டமுற மேற்கு மலைப்பகுதியில் 'மாங்காடு' என்னும் ஊரில் உள்ளவனாகிய மறையோன் ;ன்'' என்று மாங்காட்டு மறையவன் திருமாலின் காட்சி ம் அவர் கோயில் கொண்டுள்ள திருவேங்கட மலையின் கை எழிலையும் விளக்குவதாக இளங்கோவடிகள் திரு ர் அடியவராகவே மாறி ஆழ்ந்த அன்புடன் பாடியுள்ளார்.

இங்கே இயற்கைக் கோலமே ஆண்டவன் திருக்கோல கொள்ளப்பட்டமை எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

திருமாலிருங்குன்றத்தில் அமைந்த மூன்று பொய்கை சிறப்புப் பேசப்பெறுகிறது:

''திருமால் குன்றத்துச் செல்குவிர் ஆயின்,
பெருமால் கெடுக்கும் பிலம் உண்டு; ஆங்கு
விண்ணோர் ஏத்தும் வியத்தகு மரபின்
புண்ணிய சரவணம் பவகா ரணியோடு
இட்டசித்தி எனும் பெயர் போகி,
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுஉள; - ஆங்கு
புண்ணிய சரவணம் பொருந்துவிர் ஆயின்,
விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவிர்;
பவகா ரணி படிந்து ஆடுவிர் ஆயின்
பவகா ரணத்தின் பழம்பிறப்பு எய்துவிர்;
இட்ட சித்தி எய்துவிர் ஆயின்
இட்ட சித்தி எய்துவிர் நீரே''.

*(வரிகள்: 91-103)*
*(காடுகாண்காதை)*

*''திருமாலிருங்குன்றம் சென்றால், அங்கே மயக்கப் கெடுக்கும் பிலத்துவழி உள்ளது; அங்கு விண்ணோர் போற்றும் வியக்கத்தக்க மரபினையுடைய புண்ணிய சரவணம், பவ காரணி, இட்டசித்தி என்னும் சிறப்புமிக்க மூன்று பொய்கைகள் உள்ளன.*

*புண்ணியசரவணப் பொய்கையில் நீராடினால், இந்திரன் இயற்றிய ஐந்திர நூலின் சிறப்பைப் பெற்றவராவீர்; பவகாரணி யில் படிந்து நீராடினால் இப்பிறவிக்குக் காரணமாகிய பழப் பிறப்பை அறிவீர்கள்; இட்டசித்தியில் நீராடினால், எண்ணி யதை அடைவீர்கள்'' என்று மூன்று பொய்கைகளின் சிறப் புக்கள் மாங்காட்டு மறையோனால் பேசப்படுகின்றன.*

*புண்ணிய நன்னீர்களின் ஆற்றல்கள் அறிந்து மக்களால் போற்றப்பெற்று அவற்றில் நீராடினால் நன்மைகள் ஏற்படும் என நம்பப்பட்டுள்ளது.*

மயக்கும் தெய்வம் பற்றிய செய்தியும் சிலப்பதிகாரத்துள் இடம்பெறுகிறது. அத்தெய்வம் பல வடிவங்கள் எடுக்கும் ஆற்றல்மிக்கது. அதுபற்றி மாங்காட்டு மறையோன் கூறக் கோவலன் அறிகிறான். மதுரைக்குச் செல்லும் காட்டுவழியில் அத்தெய்வம் எதிர்ப்படுகிறது.

வஞ்சகச் செயல்களைப் போக்க உதவும் உண்மையை உணரவைக்கும் **பாய்கலைப்பாவை மந்திரம்** அறிந்தவன் கோவலன்; அம்மந்திரத்தை நாவில் ஒலிக்க, வயந்தமாலையாக வந்த மயக்கும் தெய்வம், தன் உண்மை நிலையை உணர்த்து கிறது; ''வனசாரிணி யான்; மயக்கம் செய்தேன்; கண்ணகிக்கும் கவுந்தியடிகட்கும் என் செயலைக் கூறாது செல்க!'' என வேண்டுகிறது; அவ்விடத்தை விட்டும் நீங்குகிறது.

மனிதருக்குள் தெய்வம் ஏறப்பெற்று ஆடிச் செய்திகள் சொல்லும் அற்புதச் செயல் சிலப்பதிகாரத்து வேட்டுவ வரியில் சொல்லப்பெறுகிறது. மறவர் குலத்தைச் சார்ந்த சாலினிமீது தெய்வம் அடைந்து அவள் உடலின் மீது மயிர்கள் குத்திட்டு நிற்கின்றன; கையை மேலே உயர்த்துகிறாள். ஊர்மன்றத்தில் அடியெடுத்துவைத்து வெறியாடுகிறாள். ''மறக்குடித் தாயத்தில் வழிப்பறியால் வரும் வளம் சுரக்கவில்லை; எயினர்கள் அறக்குடியினர்போல் அவிந்து அடங்கினர்; கொற்றவைக்குரிய கடனைச் செலுத்தினால் அன்றி வில்லால் எய்தும் வெற்றியை அவள் தரமாட்டாள். கள்ளுண்டு வாழும் வாழ்க்கையை வேண்டு வீர்களேயாயின், வழிப்பறி செய்து உண்ணும் மக்களே! பலிக் கடன் தாருங்கள்!'' என்று அவள் தெரிவிக்கிறாள்.

குமரியைக் கொற்றவையாகக் கருதி வழிபடும் நெறி, எயினர் குடியினரிடம் நிலவியது என்பதற்கு வேட்டுவ வரியில் அகச்சான்று உள்ளது:

''தொன்மையான எயினர் குடியைச் சார்ந்த குமரி யொருத்தியின் செறிந்த கூந்தலுக்குச் சிறிய வெண்மையான பாம்புக் குட்டியைப் போன்ற கயிற்றைச் சுற்றிக்கட்டினர்; காட்டுப் பன்றியின் வளைந்த வெண்கொம்பைப் பறித்து, அவள்

முடியில் முளைக்கும் வெண்திங்கள் எனச் சார்த்தினர்; வெண்ணிறப் புலிப்பற்கள் கொண்ட தாலியை அவளுக்கு அணிவித்தனர்; வரியும் புள்ளியும் கலந்த புலித்தோலை மேகலையாக உடுத்தினர்; வயிரவில்லை வளைத்து உள்ளங்கையில் தந்தனர்; கலைமானின் மீது அவளை அமர்த்தினர்; பாவை, கிளி, கானக் கோழி, நீலநிறமயில், பந்து, கழங்கு ஆகியவற்றைத் தந்து வணங்கினர்.

வண்ணக்குழம்பு, சுண்ணப்பொடி, குளிர்ந்த நறுமணச் சந்தனம், புழுக்கல், எள்ளுருண்டை, நிணச்சோறு, மலர், புகை, நறுமணப் பொருள்கள் ஆகியவற்றைக் குற்றேவல் செய்யும் எயிற்றியர் பின்னே ஏந்திவந்தனர்; வழிப்பறி செய்யும்போது அறையும் பறை, சூறையிடும்போது ஒலிக்கும் சின்னம், கோடு, குழல், பெருமை பொருந்திய மணி ஆகியவை ஒருங்கே ஒலிக்கப் பெண் தெய்வத்தின் முன்னர் நிறுத்தி வெற்றியின் விலையாகப் பலி உண்ணும் மலர்ப்பலி - பீடிகையைக் கொண்ட கலைப்பரி ஊர்தியையுடைய கொற்றவையைத் தொழுது வணங்கினர்'' என்னும் அரிய எயினர் குடியினர் பின்பற்றிய கொற்றவை வழிபாட்டு முறைகளைப் பின்வரும் வரிகள் வாயிலாக அறியலாம்:

''இட்டுத் தலைஎண்ணும் எயினர் அல்லது
சுட்டுத் தலைபோகாத் தொல்குடிக் குமரியைச்
சிறுவெள் அரவின் குருளைநாண் சுற்றிக்
குறுநெறிக் கூந்தல் நெடுமுடி கட்டி,
இளைசூழ் படப்பை இழுக்கிய ஏனத்து
வளைவெண் கோடு பறித்து, மற்றது
முளைவெண் திங்கள் என்னச் சாத்தி
மறம்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண்பல் தாலிநிரை பூட்டி
வரியும் புள்ளியும் மயங்கு வான்புறத்து
உரிவை மேகலை உடீஇப் பரிவொடு
கருவில் வாங்கிக் கையகத்துக் கொடுத்துத்
திரிதரு கோட்டுக் கலைமேல் ஏற்றிப்

பாவையும் கிளியும் தூவி அம்சிறைக்
கானக் கோழியும் நீனிற மஞ்ஞையும்
பந்தும் கழங்கும் தந்தனர் பரசி
வண்ணமும் சுண்ணமும் தண்ணறுஞ் சாந்தமும்
புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் மேவிய விரையும்
ஏவல் எயிற்றியர் ஏந்தினர் பின்வர
ஆறெறி பறையும் சூறைச் சின்னமும்
கோடும் குழலும் பீடுகெழு மணியும்
கணங்கொண்டு துவைப்ப அணங்குமுன் நிறீஇ
விலைப்பலி உண்ணும் மலர்ப்பலி - பீடிகைக்
கலைப்பரி ஊர்தியைக் கைதொழுது ஏத்தி.

*(வரிகள்: 20-44)*
*(வேட்டுவ வரி)*

*சாலினி தன்னுடைய கொற்றவை கோலத்தில் இருந்த வாறு தெய்வம் ஏறப்பெற்றுச் சில உண்மைகளை உரைப்ப தாகச் சிலப்பதிகாரம் சொல்கிறது:*

''இவளோ கொங்கச் செல்வி, குடமலை யாட்டி
தென்தமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து;
ஒருமா மணி ஆய், உலகிற்கு ஓங்கிய
திருமா மணி எனத் தெய்வம் உற்று உரைப்ப''

*(வரிகள்: 47-50)*
*(வேட்டுவ வரி)*

*என்னும் வரிகள் கண்ணகியின் வருங்கால உயர்வை உணர்த்து கின்றன.*

*'கொங்கச் செல்வி', 'குடமலையாட்டி', 'தென்தமிழ்ப் பாவை செய் தவக்கொழுந்து', 'ஒரு மாமணி', 'திருமாமணி' என்னும் அடைமொழிகள் கண்ணகிக்குச் சூட்டப்பெற்று அவளது எதிர்கால உயர்வை உணர்த்துகின்றன; இக்கூற்றுகள் பலிக்கின்றன எனலாம்.*

கணவனுடன் மலர் விமானத்தில் வானுலகு அடை பிறகு கண்ணகியைக் கொங்கர்கள் போற்றுகின்றனர்; செ குன்றம் என்னும் மேற்கு மலையைக் கண்ணகியடைகிறா பாண்டிய நாட்டிற்கு வந்ததனால்தான் அவள் வழக்குரைத் வென்று உண்மையை - தன் கணவன் கோவலன் கள்வனல்ல என்னும் உண்மையை நிலைநாட்டுகிறாள். இதனால் தென்தமிழ் பாவை செய்த தவக்கொழுந்தாகிறாள். காவிரிப்பூம்பட்டினத்தி ஒப்பற்ற மாமாணிக்கமாகத் தோன்றித் திருமாமணியாக உலகி ஓங்கிய புகழ் பெறுகிறாள். இவ்வாறு கண்ணகி தெய்வ பெண்ணாக உயர்ந்த திறம் முன்கூட்டியே சாலினி வாயிலா உணர்த்தப்பெறுகிறது. நிகழக்கூடியதனை முன்கூட்டியே உணர்த்தும் திறனை அறிவிக்கிறது சிலப்பதிகாரம் எனலாம்.

கொற்றவையின் கோலமும் புகழும் வேட்டுவ வரியி சிறப்புற உணர்த்தப்பெற்றுள்ளன.

''யானைத் தோலினைப் போர்த்தவள் கொற்றவை புலித்தோலை உடுத்தவள்; காட்டெருமையின் கரிய தலைமீது நின்றவள்; வானோர் வணங்க, மறைக்குமேல் மறைப்பொருளா ஞானக்கொழுந்தாக நடுக்கம் இல்லாமல் நிற்பவள். வரிவளை கையில் வாளேந்தி மகிடாசூரனை வதைத்தவள்; கலைமா போல் நின்றவள்; திருமால், சிவன், பிரம்மன் ஆகியோரி அகமாகிய மலரின்மீது நிலைபெற்ற அழகிய விரிகதிர் ஒ விளக்காகி நிற்பவள். சங்கையும் சக்கரத்தையும் கைகளில் ஏந்தி யவள்; சிவந்த கண்களையுடைய சினமுற்ற ஆண்சிங்கத்தின் மீது நின்றவள்; முடியில் கங்கையை அணிந்த நெற்றிக் கண்ணை யுடைய சிவபிரானின் ஒருபகுதி மங்கை வடிவமாக மறைகள் போற்றும்படி நிற்பவள்'' எனக் கொற்றவையின் மாட்சியையு வீரச்செயல்களையும் கீழ்வரும் சிலப்பதிகார வேட்டுவ வரிகள் உணர்த்துகின்றன:

''ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரிஉடுத்துக்
கானத்து எருமைக் கருந்தலைமேல் நின்றாயால் -
வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்குஇன்றி யேநிற்பாய்!

வரிவளைக்கை வாள்ஏந்தி மாமயிடற் செற்று
கரியதிரி கோட்டுக் கலைமிசைமேல் நின்றாயால் -
அரி அரன் பூமேலோன் அகமலர்மேல் மன்னும்
விரிகதிர்அம் சோதிவிளக்குஆகி யேநிற்பாய்!

சங்கமும் சக்கரமும் தாமரைக் கைஏந்திச்
செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால் -
கங்கைமுடிக்கு அணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் மறைஏத்த வேநிற்பாய்!

(வேட்டுவ வரி)
(முன்னிலைப் பரவல்)

*கொற்றவை ஆடிய கூத்து பற்றிய செய்தி அறியலாகிறது:*

''ஆங்குத்,
துன்று மலர்ப்பிணையல் தோள்மேல் இட்டு - ஆங்கு
அசுரர் வாட அமரர்க்கு ஆடிய
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே''

*அசுரர் வருந்த விண்ணவர்களுக்காக ஆடிய மரக்கால் கூத்து இங்கு உணர்த்தப்பெறுகிறது.*

*மரக்கால்மேல் நின்று அவுணர்கள் வீழ வாட்கூத்தும் ஆடினாள்:*

''மாயஞ்செய் வாள்அவுணர் வீழ நங்கை மரக்கால்மேல்
வாளமலை ஆடும் போலும்''

*என்னும் வரிகள் வாட்கூத்தைப் பற்றிச் சொல்லுகின்றன.*

*எயினர்கள் தங்கள் தலைகளைக் கொய்துகொண்டு மிடற்றிலிருந்து ஒழுகிய குருதியைக் கொற்றவைக்குப் பலிக் கொடையாக வழங்குகின்றனர்.*

''அடுபுலி அனையவர் குமரிநின் அடிதொடு
படுகடன் இது; உகு பலிமுக மடையே''

என்னும் தொடர்களால் குருதிவெள்ளமாகிய மடை அடிதொடு படுகடன் ஆக அமைகிறது.

எயினர்கள் இரக்கம் இல்லாமல் வழிப்பறி செய்யக் கொல்பவர்கள்; கொற்றவையின் அருள்வேண்டி,

''கண்ணில் எயினர் இடுகடன் உண்குவாய் -
விண்ணோர் அமுது உண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சு உண்டு இருந்து அருள் செய்குவாய்''

என்று கூறுகின்றனர்.

எயினர்கள் கண்ணோட்டம் இல்லாதவர்கள்; அவர்கள் இடுகின்ற பலிக்கடனை உண்ணும்படிக் கொற்றவையை வேண்டுகின்றனர்; ''விண்ணோர் அமுது உண்டும் சாகும்போது ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டும் என்றும் நிலையாக இருந்து அருள் செய்பவளே!'' என்று கொற்றவையின் அழிவில்லாத தன்மையை உணர்த்துகின்றனர்.

அடைக்கலக்காதையில் கற்புடைய மகளிர் தெய்வ மகளிராகக் கருதப்பட்டு அவர்களுடைய தெய்வ ஆற்றல்கள் சொல்லப்பட்டுள்ளன:

''இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்;
'வானம் பொய்யாது; வளம் பிழைப்பு அறியாது;
நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது;
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு' என்னும்
அத்தகு நல்லுரை அறியா யோநீ?''.

(வரிகள்: 144-149)

கண்ணகி கோவலனுக்கு இனிய துணைவியானவள்; கற்பைக் கடமையாகக் கொண்ட தெய்வம்; இத்தகைய தெய்வம் அல்லாமல் பொற்புடைய தெய்வம் யாம் காணவில்லை என்று மாதரியிடம் கண்ணகியையும் கோவலனையும் அடைக்கலப் படுத்தும்போது கவுந்தியடிகள் போற்றியுரைக்கிறார்.

''பத்தினிப் பெண்டிர் வாழும் நாட்டில் மழை பெய்தல் பொய்க்காது; வளமை தவறாது; நாட்டையாளும் மன்னனது கொற்றமும் அழியாது'' என்று பத்தினிப் பெண்டிரினால் நிகழும் நன்மைகளை அவர்களுடைய ஆற்றல்களாகக் கவுந்தியடிகள் வெளிப்படுத்துகிறார். இதே கருத்தில்தான் வள்ளுவரும்,

''தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்
பெய்எனப் பெய்யும் மழை''.

(குறள்: 55)

என்னும் குறள் வாயிலாகக் கற்புடைய பெண் ''பெய்'' என்று சொன்னால் மழையும் பெய்யும் என்று கற்புடைய பெண்டிரின் ஆற்றலை வெளிப்படுத்தியுள்ளார். கற்புநெறி என்பது ஒழுக்கந் தவறாத, கணவன்பால் ஆழ்ந்த அன்புடைய திண்ணிய நெஞ்சங் கொண்ட பெண்ணின் அறநெறியாகும். இத்தகைய திண்ணிய நெஞ்சம் கணவனைத் தெய்வமாகக் கருதும் உணர்வே அவளுடைய தூய ஆன்மீக நெறியாகிறது.

சிலப்பதிகாரக் கொலைக்களக் காதையில் கோவலன் கண்ணனாகவும் கண்ணகி நப்பின்னையாகவும் உருவகம் செய்யப் பெற்றுள்ளனர். 'சிலப்பதிகாரம்' சமண சமயத்தைச் சார்ந்த இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதாயினும், சைவம், வைணவம் ஆகிய சமயங்களும் கடவுளர்களும் உயர்வாகப் போற்றப்பெற்றுள்ளனர். மேலும், தமிழகத்தில் அக்காலத்தில் பல சமயங்களுக்கிடையே பல ஒற்றுமைக் கூறுகள் நிலவின என அறிய முடிகிறது; மக்கள் பின்பற்றிய சமயங்களையும் கடவுளர் களையும் காழ்ப்புணர்ச்சியின்றிப் போற்றும் பரந்த உள்ளம் இளங்கோவடிகளுக்கு இருந்துள்ளது. ஆன்மீகப் பெருந்தன்மை நிலவியதனைச் சிலப்பதிகாரம்,

"ஆயர் பாடியின் அசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமுது உண்ணும் நம்பி! ஈங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமம் தீர்த்த விளக்குக் கொல்!..."

*(வரிகள்: 46-51
கொலைக்களக் கதை)*

என்னும் வரிகள் வாயிலாக உறுதிப்படுத்துகிறது.

வடமதுரை ஆயர்பாடியில் யசோதனையின் வளர்ப்பு மைந்தனாகக் கண்ணன் இருந்தான்; அவன் திருமாலின் மறு அவதாரம்; நப்பின்னை கண்ணன் மனைவி; கண்ணனை வளர்த்தத் தாய் யசோதை. கண்ணனாகக் கோவலனும் நப் பின்னையாகக் கண்ணகியும் யசோதையாக மாதரியும் உருவகம் செய்யப்பெற்றுள்ளனர்; வடமதுரையைச் சார்ந்த ஆயர்பாடியில் யசோதை வாழ்ந்தாள்; தென்மதுரையைச் சார்ந்த புறஞ்சேரி ஆயர்பாடியாக விளங்கியது; அங்கு மாதரி வாழ்ந்தாள். உண்மை யான ஆன்மீகவாதிகளுக்குச் சமயவேறுபாடு கருதும் குறுகிய மனம் இல்லை; இளங்கோவடிகள் மிக உயர்ந்த ஆன்மீகச் சான்றோர்; தமிழகம் கண்ட ஆன்மீகச் சான்றோர்களுள் மிகமிக உயர்ந்தவர் இளங்கோவடிகள் எனலாம்.

வைணவர்க்குரிய முழுமுதற் கடவுளாகிய கண்ணன் சிலப்பதிகாரத்துள் போற்றப்பெற்றுள்ளான். கண்ணன் ஆயர் பாடியில் தன் தமையன் பலராமனுடனும் தன் காதலி பிஞ்ஞை யுடனும் ஆடிய குரவைக்கூத்து பற்றிய புராணச் செய்தி தெரி விக்கப் பெறுகிறது. அந்தக் குரவைக்கூத்து நிகழ்த்தினால் துன்பம் நீங்கும் என்னும் நம்பிக்கையும் இருந்துள்ளது.

பெருந்துன்பம் வருவதற்கு அடையாளமாகக் குடத்துப் பால் உறையாமை, குவிந்த இமிலை உடைய ஏறு கண்ணீர் சொரிதல், உறியில் வெண்ணெய் உருகாமை, ஆடாமல் ஆட்டுக்

குட்டிகளாகிய மறிகள் முடங்கிக் கிடத்தல், ஆவினங்களின் கழுத்தில் கட்டப்பெற்ற மணிகள், நிலத்தில் அற்று வீழ்தல் ஆகியன குறிப்பிடப்பெற்றுள்ளன. மனம் வருந்திய ஐயை யாகிய தன் மகளிடம் மாதரி,

''............... மனம் மயங்காதே!
மண்ணின் மாதர்க்கு அணி ஆகிய
கண்ணகியும் தான் காண
ஆயர்பாடியில் எருமன்றத்து
மாயவனுடன் தம்முன் ஆடிய
வாலசரிதை நாடகங்களில்,
வேல்நெடுங்கண் பிஞ்ஞையோடு ஆடிய
குரவை ஆடுதும் யாம்'' (ஆய்ச்சியர் குரவை)

என்று கூறுவதாக இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். இச் செய்தி ஆய்ச்சியர் குரவையில் இடம்பெற்றுள்ளது.

கண்ணனாகிய மாயவன் செயல்கள் இளங்கோவடிகளால் நயமுடன் அழகுறவும் இனிமை இழையோடவும் ஆய்ச்சியர்குரவையில் போற்றிப் பரவப் பெற்றுள்ள பாடல் வருமாறு:

''கன்று குணிலாக் கனிஉதிர்த்த மாயவன்
இன்று நம் ஆனுள் வருமேல், அவன் வாயிற்
கொன்றையம் தீம்குழல் கேளாமோ! தோழீ!
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் ஆனுள் வருமேல், அவன் வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ!
கொல்லையம் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல், அவன் வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ! தோழீ!
தொழுனைத் துறைவனோடு ஆடிய பின்னை -
அணிநிறம் பாடுகேம் யாம்!
இறுமென் சாயல் நுடங்க நுடங்கி

அறுவை ஒளித்தான் வடிவென்கோ யாம்?
அறுவை ஒளித்தான் அயர, அயரும்
நறுமென் சாயல் முகமென்கோ யாம்?
வஞ்சம் செய்தான் தொழுனைப் புனலுள்
நெஞ்சங் கவர்ந்தாள் நிறைஎன் கோயாம்?
நெஞ்சங் கவர்ந்தாள் நிறையும் வளையும்
வஞ்சம் செய்தான் வடிவுஎன் கோயாம்?
தையல் கலையும் வளையும் இழந்தே
கையில் ஒளித்தாள் முகம்என் கோயாம்?
கையில் ஒளித்தாள் முகங்கொண்டு அழுங்கி
மையல் உழந்தான் வடிவென் கோயாம்?''

(ஆய்ச்சியர் குரவை)

கன்றைக் குறுந்தடியாகக் கொண்டு விளாங்கனியை உதிர்த்த செயல், பாம்பைக் கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்த செயல், கொல்லையம் சாரலில் குருந்த மரத்தை ஒடித்த செயல், நுண்ணிடையாள் சேலையை ஒளித்த செயல் ஆகிய கண்ணனுடைய பல செயல்களையும் கண்ணன் இசைத்த குழலின் இசை இனிமையையும், அழகிய மென் சாயலுடையவள் முகத்தையும், கண்ணனது நெஞ்சம் கவர்ந்தவளது நிறையும் வளையல்களும் கண்ணனது வடிவமாக (நிறமாக) இருந்ததைப் பற்றியும், கலையும் (புடவை) வளையும் இழந்தாளது நாணம் மிக்க முகத்தை அவள் தன் கையில் ஒளித்தமை பற்றியும் அவள் முகத்தைக் கண்டு மனம் இரங்கி அவளிடம் கண்ணன் மையல் கொண்டமை பற்றியும் மேற்குறிப்பிட்ட பாடல்கள் அழகுற விளக்குகின்றன.

இறைவன் துன்பம் துடைப்பவன்; விளையாடல்கள் புரிபவன்; எப்பொருளும் அவன் வடிவங்களே; தன்னை விரும்புவாரின் விருப்பங்களை ஏற்று இரக்கம் கொண்டு அருளுபவன். இத்தகைய அருட் செயல்களை நுட்பமாக இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

ஆய்ச்சியர் குரவையில் கண்ணனுடைய அரிய செயல்கள் பலவாறாகப் போற்றிப் பாடப்பெற்றுள்ளன:

''வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு
கலக்கினையே''.

திருமால் மேருமலையாகிய வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கித் தொன்மையில் ஒருநாள் பாற்கடலின் வயிற்றைக் கலக்கினான்.

''கடல் வயிற்றைக் கலக்கிய திருமாலாகிய கண்ணனின் கைகளை மானிடப் பெண்ணாகிய யசோதை தயிர்கடையும் கயிற்றால் கட்டினாள்'' என்னும் செய்தியை

''கலக்கிய அசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை!''

என்னும் வரி தெரிவிக்கிறது. தன்பால் அன்புடையவர்கட்குக் கட்டுப்பட்டவன் இறைவன் என்னும் அரிய உண்மையை இதனால் அறியலாம்.

''திருமால் முடிவான பொருளினன்'' என்னும் உண்மையை,

'அறுபொருளிவன் என்றே அமரர்கணம் தொழுதேத்த''

என்னும் வரி தெரிவிக்கிறது.

கண்ணனாகிய திருமாலின் திருவடிகளின் பெருமைகளை,

''இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி!''

என்று இளங்கோவடிகள் போற்றுகிறார்.

இராமாவதாரத்தில் திருமாலாகிய இராமன் அடி சிவப்புற நடந்த துன்பத்தையும் இளங்கோவடிகள்,

''மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து''

என்று குறிப்பிட்டுள்ளார்.

திருமாலாகிய இறைவனின் புகழைக் கேளாத செவி பயனற்றது எனவும், சிவந்த கண்களையும் திருவடிகளையும் கைகளையும் திருவாயையும் உடைய திருமாலாகிய கரியவனைக் காணாத கண்களைப் பயனற்றவை எனவும், கம்சனை அழித்தவனும் கௌரவர்களிடம் பஞ்சபாண்டவர்களுக்காகத் தூது நடந்தவனும் ஆகிய கண்ணனைப் போற்றாத நா பயனற்றது எனவும் இளங்கோவடிகள் திருமாலின்பால் பேரன்புபூண்டுப் பாடியுள்ளார். ''நாராயணா!' என்னா நாவென்ன நாவே!'' என்றும் நாராயணன் புகழைப் பாடவே நா திகழ்தல் வேண்டும் என்னும் ஆழ்ந்த பேரன்பை உள்ளடக்கி ஆய்ச்சியர் குரவையில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய செய்திகள் பிற்காலத்தில் ஆழ்வார்களுக்கு வழிகாட்டி இருத்தல் வேண்டும் என்று கருதலாம்.

மனிதர்களும் தெய்வமாகலாம் என்பதற்குச் சிலப்பதிகாரம் வழிகாட்டுகிறது. முன்னர் வேட்டுவர் குலக் குமரியைக் கொற்றவையாகக் கொண்டு வழிபாடு நிகழ்த்தியதைப் போன்றே குன்றக்குறவர்கள் கண்ணகியை,

''இவள்போலும் நங்குலக்கோர்
இருந் தெய்வம் இல்லை'' ஆதலின்
சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடியீரே!
நிறங்கிளர் அருவிப் பறம்பின் தாழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளு மின் சிறுகுடி யீரே!
தொண்டகம் தொடுமின்; சிறுபறை தொடுமின்;
கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்;
குறிஞ்சி பாடுமின்; நறும்புகை எடுமின்;
பூப்பலி செய்ம்மின்: காப்புக்கடை நிறுமின்;

பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின் -
ஒருமுலை இழந்த நங்கைக்குப்
'பெருமலை துஞ்சாது வளஞ்சுரக்க' எனவே''

(வரிகள்: 9-22) (குன்றக்குரவை)

என்று போற்றுகின்றனர்.

கண்ணகியைப் போல் பெரிய தெய்வம் குன்றக்குரவர் களுக்கு இருந்ததில்லை எனத் தெய்வங்களுக்கெல்லாம் பெரிய தெய்வமாகக் கண்ணகியை உயர்த்துகின்றனர்.

குன்றக்குறவர்கள் கண்ணகியைக் கண்டு நிற்கும்போது வானவர்கள் கண்ணகியின்மேல் மலர்மாரி பொழிந்து, அவள் கணவன் கோவலனோடு அவளைக் கொண்டு சென்றனர்.

கண்ணகி வானுலகு சென்ற காரணத்தால் தெய்வங் கொள்ளுங்கள்! அருவிகள் நிறைந்த செங்குன்றத்தின் சாரலில் கீழே வேங்கைமர நிழலில் தெய்வங் கொள்ளுங்கள்! தொண் டகப் பறையை முழக்குங்கள்! சிறுபறை அறையுங்கள்! வாயில் கொம்பு வைத்து ஊதுங்கள்! மணியை ஒலியுங்கள்! குறிஞ்சிப்பண் பாடுங்கள்! நறும்புகை எடுங்கள்! பூப்பலி செய்யுங்கள்! காப்புக் கடை நிறுத்துங்கள் (காப்புக்கடை - Compound) போற்றுங்கள்! பலமலர்களைத் தூவுங்கள்! பெருமலை ஒழியாமல் வளம் சுரக்கவேண்டி இவ்வாறு கண்ணகியைப் போற்றிப் பரவும்படி சிறுகுடியினராகிய குன்றக்குறவர்கள் தம் இனத்தாரைக் கண்ணகி வழிபாடு நிகழ்த்த அழைக்கின்றனர்.

குன்றக்குரவர்கள் வணங்கும் குலதெய்வமாக முருகப் பெருமான் திகழ்கிறான். முருகன் மலைமகளாகிய உமாதேவி யின் மைந்தன்; எனவே, அவன் மலைமகள் மகன்; குறவர் மகளாகிய வள்ளியம்மையின் நிலையினை உயர்த்தியவன் முருகன்; குறவர்குல மகளாக இருந்த அவளைக் காதலித்து மணந்ததன் வாயிலாகத் தெய்வப் பெண்ணாக உயர்த்திய செயலையே குன்றக்குறவர்கள் மூலம் இளங்கோவடிகள் குறிப் பிட்டுள்ளார். குறமகளாகிய வள்ளியுடன் ஒப்பற்ற அறுமுக

னாகிய முருகனுடைய திருவடிகளைத் தொழுவதாகக் கூறுகின்றனர்:

''மலைமகள் மகனை! நின் மதிநுதல் மடவரல்
குலமலை உறைதரு குறவர்தம் மகளார்
நிலைஉயர் கடவுள்! நின் இணையடி தொழுதேம் -
பலரறி மணம் அவர் படுகுவர் எனவே
குறமகள் அவள்எம் குலமகள்; அவளொடும்
அறுமுகஒருவ! நின் அடியிணை தொழுதேம்
துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
பெறுகநல் மணம்; விடுபிழை மணம் எனவே''.

(பாடல்கள்: 17, 18)
(குன்றக்குரவை)

பிழைமணம் நீக்கி நல்ல மணம் பெறக் குன்றக் குறவர்கள் முருகனை வேண்டுகின்றனர். ஏனெனில், முருகன் வள்ளியைக் காதலித்துத் திருமணம் புரிந்தவன்.

கடவுள் தன்மையுடையவர்களைக் கடவுளர்களாகவே போற்றி வழிபடும் மரபு தமிழர்கள் மரபு என்பதனைக் கண்ணகிக்குச் சிலை வடித்துக் கோயில் அமைத்த சேரன் செங்குட்டுவன் செயலால் அறியலாம். அந்த நெறியில் கண்ணகியின் வடிவச் சிலை அமைக்கும் எண்ணத்தைச் சேரன் செங்குட்டுவன் உள்ளத்தில் அவன் பத்தினி வேண்மாள் விதைத்தாள்.

''நம் அகல்நாடு அடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்''

என்று அவள் கணவன் செங்குட்டுவனிடம் வேண்டுகோள் விடுக்கிறாள். இந்நிகழ்ச்சி சிலப்பதிகாரக் காட்சிக்காதையில் இடம்பெறுகிறது.

சேரன் செங்குட்டுவனுடைய இமயப் பயணத்திற்கு முன்னர் திருவனந்தபுரத்தில் கோயில் கொண்டுள்ள - அறிதுயில்

*அமர்ந்த திருமாலின் சேடத்தை ஏற்ற செய்தி, கால்கோட் காதையில் சொல்லப்பட்டுள்ளது:*

''குடக்கோக் குட்டுவன் கொற்றங்கொள் கென
ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடம் கொண்டு, சிலர்நின்று ஏத்தத் -
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி, அணிமணிப் புயத்துத்
தாங்கினன்.....................

*(வரிகள்: 61-67 வரை)*
*(கால்கோட் காதை)*

*சேரன் செங்குட்டுவன் சிவபெருமானை வழிபடுபவன் ஆயினும், திருமாலின் மீதும் பேரன்பினன் என்பதனை அறிய முடிகிறது. தலையில் சிவபெருமானுடைய திருவடிகளை வைத்ததனால்·திருமாலின் சேடத்தைத் தன் தோளில் தாங்கினான்.*

*உயிர் பல்வேறு வடிவங்களைக் கொள்ளும் இயல்பினை இளங்கோவடிகள் நடுநற்காதையில் விளக்கியுள்ளார்:*

''விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்;
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கின் எய்தினும் எய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்;
ஆடும் கூத்தர்போல், ஆருயிர் ஒருவழி
கூடிய கோலத்து, ஒருங்குநின்று இயலாது;
''செய்வினை வழித்தாய் உயிர்செலும்'' என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை ஆதலின்
எழுமுடி மார்ப! நீ ஏந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே!''

*(வரிகள்: 159-170)*
*(நடுகற்காதை)*

''விண்ணோராகிய தேவர்களின் வடிவினை அடைந்த உயிர், மக்கள் வடிவில் வந்து பிறந்தாலும் பிறக்கும்; மக்கள் உடம்பைப் பெற்ற உயிர் விலங்குகளின் உடலை அடைந்தாலும் அடையக்கூடும்; விலங்கின் உடலிலிருந்து நீங்கிய உயிர் கலங்கும் துன்பங்கொண்ட நரகராகி விடவும் கூடும்.

ஆடும் கூத்தரைப்போல் அரிய உயிர் ஒருவழி கூடிய வடிவத்தில் ஒருங்கே நிலைத்துநின்று இயங்காது. ''செய்யும் வினையின் வழியே உயிர் செல்லும்'' என்பது பொய்யில் காட்சியோராகிய மெய்ப்பொருள் உணர்ந்தோரின் பொருள் பொதிந்த உரை'' என்பதே இளங்கோவடிகள் நம் உயிரின் தன்மையைப் பற்றி உணர்த்தும் உயரிய ஆன்மீகக் கருத்தாகும்.

மன்னர்கள் தங்களுக்குரிய மறைகளில் உள்ள விதிகளின் படி வேள்விகள் செய்தல் மரபாக இருந்துள்ளது. மாடலமறையோன் சேரன் செங்குட்டுவனுக்கு நிலையாமையை உணர்த்தி அவன் செய்ய வேண்டிய ஆன்மீகக் கடமைகளை நிறைவேற்றுமாறு அறிவுரை கூறுகிறான்:

''வானவர் போற்றும் வழிநினக்கு அளிக்கும்
நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பான்
அருமறை மருங்கின் அரசர்க்கு ஓங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்;
நாளைச் செய்குவம் அறம் எனின், இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்;
இதுஎன வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகின் முழுவதும் இல்லை;
வேள்விக் கிழத்தி இவளொடுங் கூடித்
தாழ்கழல் மன்னர் நின்னடி போற்ற
ஊழியொடு ஊழி உலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை!' என்று
மறையோன் மறைநா உழுது வான்பொருள்
இறையோன் செவி செறுவாக வித்தலின்''

(வரிகள் 175-188)

(நடுகற்காதை)

*அரசர்க்குரிய வேள்விகள் செய்தல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறான் மாடலமறையோன்; ''நாளைக்கு அறம் செய்வோம் எனில் இன்றே கேள்விக்குரிய நல்ல உயிர் நீங்கி னாலும் நீங்கும். வாழ்நாளின் இறுதி இது என வரையறுத்து வாழும் நாளை உணர்ந்தோர் கடல்சூழ்ந்த இவ்வுலகில் முழு வதும் இலர்'' என்றும் அறம் உரைக்கிறான்.*

*வரந்தரு காதையில், மாடல மறையோன் வாயிலாக, ''நல்ல அறச்செயல்களைச் செய்தவர்கள் பொன்னுலகம் அடை வர்; அன்புள்ளம் சிறந்தோர் பற்றின் காரணமாகப் பிறப்பர்; அறப்பயன் விளைதல், மறப்பயன் (தீவினைப்பயன்) விளை தல், பிறந்தவர் இறத்தல், இறந்தவர் பிறத்தல் ஆகியன புதியன அன்று; தொன்மையான இயல்பான வாழ்க்கை'' என்று ஆன்மீக அறச்செயல் பற்றிச் சேரன் செங்குட்டுவனுக்குச் சொல்லப்படுகிறது:*

''நற்றிறம் புரிந்தோர் பொற்படி எய்தலும்
அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே; தொன்றியல் வாழ்க்கை - ''

*(வரிகள்: 136-140)*

*இளங்கோவடிகள் சிலப்பதிகாரக் காப்பியத்தின் இறுதிப் பகுதியில் தெளிவான ஆன்மீகம் சார்ந்த நிலையான அறக்கோட் பாடுகளை உலகத்தவர்க்கு உணர்த்தியுள்ளார்:*

''பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்;
தெய்வம் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்;
பொய்யுரை அஞ்சுமின்; புறஞ்சொல் போற்றுமின்;
ஊனூண்துறமின்; உயிர்க் கொலை நீங்குமின்
தானம் செய்ம்மின்; தவம்பல தாங்குமின்;
செய்ந்நன்றி கொல்லன்மின்; தீநட்பு இகழ்மின்
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்

பிறவோர் அவைக்களம் பிழைத்தும் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின்; பிழையுயிர் ஓம்புமின்;
அறமனை காமின்; அல்லவை கடிமின்;
கள்ளுங் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்;
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது, ஒல்லுவது ஒழியாது;
செல்லும் தேளத்துக்கு உறுதுணை தேடுமின்;
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்''.

*(வரிகள்: 186-202)*

*கவலையையும் துன்பத்தையும் விடுதல், தெய்வத்தைத் தெளிதல், தெய்வந்தெளிந்தோரைப் பேணுதல், பொய்யுரை சொல்ல அஞ்சுதல், புறங்கூறுதலை நீக்குதல், ஊன் உணவைத் துறத்தல், உயிர்க்கொலை செய்யாமை, தானம் செய்தல், பல தவநெறிகளை ஏற்றல், செய்த நன்றியைக் கொல்லாமை, தீநட்பை இகழ்தல், பொய்க்கரி (சாட்சி) சொல்லாமை, பொருள் பொதிந்த மொழியிலிருந்து நீங்காமை, அறவோர் அவைக்களத் திலிருந்து அகலாமை, அறமற்றோர் அவைக்களத்தில் சேராமை, பிறர்மனை சேர அஞ்சுதல், துன்புறும் உயிர்களைப் பாதுகாத்தல், அறமனை காத்தல், அறமல்லாதவற்றை விலக்குதல், கள்ளை யும் களவையும் காமத்தையும் பொய்யையும் பயனில் சொல்லை யும் உறுதியுடன் விடுதல், செல்லும் மறுமையுலகத்திற்கு வேண்டிய உற்ற துணையாகிய அறத்தைத் தேடுதல் ஆகிய மனத்துக்கும் மன்பதைக்கும் நிலையான பயன்தரும் ஆன்மீகக் கோட்பாடுகள் இளங்கோவடிகளின் தெளிவான ஆன்மீக நெறி கள் என மேற்குறிப்பிட்ட சிலப்பதிகார வரிகள் வாயிலாக அறிகிறோம்.*

*சிலப்பதிகாரம் இத்தகைய கோட்பாடுகளைச் செறி வாகக் கொண்ட உயரிய ஆன்மீகக் காப்பியம் என்பது தெளிவு.*

★ ★

## 11. பெரிய புராணம் காட்டும் கண்ணப்ப நாயனாரின் உயர் ஆன்மீக நெறிகள்

சேக்கிழார் இயற்றிய மாண்புசால் பெரிய புராணத்தில் கண்ணப்ப நாயனார் வரலாறு, கண்ணப்பனாரை இறையன்பில் ஈடுஇணையற்ற ஆன்மீகத் தொண்டராகக் காட்டுகிறது. மனம் நெகிழ்ந்து மெய்சிலிர்க்க வைக்கின்றன அவரது இறையன்புக் குரிய செயல்கள்!

தமிழகத்திற்கு வடக்கே ஆந்திர மாநிலத்தில் அமைந் துள்ள காளத்தி என்னும் சிவத்தலப் பெருமை கொண்ட ஊர். பொத்தப்பி நாட்டைச் சார்ந்த ஊராக விளங்கியது, உடுப்பூர் என்னும் ஊர். வேடர் தலைவன் நாகன் என்பான் அங்கு வாழ்ந் தனன். அவன் மனைவியின் பெயர் தத்தை என்பது. நீண்ட நாட்க ளாகக் குழந்தைப் பேறு இல்லாமல் இருந்ததனால், முருகப் பெருமானை, நாள்தோறும் குழந்தைப் பேறு வேண்டி வழிபட்டு வந்தனர். தத்தை கருவுற்று ஆண்மகவை ஈன்றாள்.

குழந்தைப் பருவத்திலேயே அக்குழந்தை வலிமையுடன் ஏந்துவதற்கு அரிய நிலையில் இருந்ததனால் 'திண்ணன்' என்று பெயர் சூட்டினர்.

திண்ணன் பேசிய மழலைச் சொற்கள், கங்கை நீரினும் புனிதமுடைய அவனுடைய திருவாய் நீரினுள் நனைந்து அமுதம் ஊறி ஒழுகிவந்த தீஞ்சொற்கள் என்று சேக்கிழார், திண்ண னாரின் எச்சில் நீராகிய உமிழ்நீரைக் கங்கை நீருக்கு ஒப்பிட்டுப் பேசுகிறார்.

''புண்ணிய கங்கை நீரிற் புனிதமாந் திருவாய் நீரி
லுண்ணனைந் தமுத மூறியொழுகிய மழலைத்
தீஞ்சொல்''

(கண்ணப்ப நாயனார் புராணம்; பாடல் எண்: 22)

என்று கண்ணப்ப நாயனார் மீது கொண்ட பக்தியினால் அவரது குழந்தைப் பருவ எச்சிலைப் போற்றிப் பரவியுள்ளார். குழந்தைப் பருவத்து எச்சில் கங்கை நீரினை விட உயர்ந்தது என்று புகழ்ந்த தற்கேற்பவே, காளத்தி மலையில் திருக்காளத்தியப்பருக்கு எச்சிற்படுத்திச் சுவைத்துப் பார்த்துக் கொண்டு சென்ற முள்ளம் பன்றியின் இறைச்சியைக் காளத்தியப்பர் உயர்ந்ததாகக் கருதி ஏற்றதாகக் குறிப்பிட்டுள்ளார் சேக்கிழார்.

திண்ணன் வில்வித்தை பயிலும் பருவம் அடைந்தார். வில்வித்தை நன்கு கற்றார். பதினாறு வயதடைந்தார். நாகனும் மூப்படைந்தான். அவனால், முன்புபோல் விலங்குகளை வேட்டையாட இயலாமற்போனது. திண்ணனுக்கு வேட்டுவர்க் குரிய மரபு உரிமை தாங்கும்படி, வேட்டுவர்க்குத் தலைவ னாக்கினான்.

திண்ணனார் நாணன், காடன் என்னும் இரு காவல ருடன் வேட்டையாடக் காளத்தி மலைப்பகுதிக்குச் சென்றார்.

காளத்தியப்பர் வைகும் திருமலைச் சாரலையடைந் தார் திண்ணனார். நாணனைப் பார்த்து, ''காளத்தியப்பர் குன்றை யடைவோம்; திருக்காளத்தியப்பரைக் கும்பிடுவோம்'' என்றார். காளத்தியப்பர் இருக்குமிடம் எங்கே? போவோம்'' என்றார். திருமுகலியாற்றை அடைந்தனர்; வேட்டையாடிய பன்றியைத் தீக்கோல் செய்து நெருப்பிலிடுமாறு காடனிடம் கூறிவிட்டு நாணனுடன் மலையேறிச் சென்றார் திண்ணனார்.

திண்ணனார் பொன்முகலியாற்றங்கரையை யடைந்து, தெளிந்த ஆற்றில் இறங்கியதும் அவர் சிந்தையும் தெளிந்ததாகச் சேக்கிழார் அழகுறவும் வியப்புறவும், திண்ணனாரின் மனம் காளத்தியப்பரை நாடிய தொடக்க நிகழ்ச்சியைப் புலப்படுத்து கிறார். காளத்தியப்பர் குடிகொண்ட காளத்தி மலையைக் கண்டதும் களிவரு மகிழ்ச்சி பொங்கியதாம். பொன்முகலி யாற்றில் குறுக்கே சென்று வேட்டுவர் குலமலையின் - காளத்தி மலையின் சாரலை அடைந்தார்.

கடவுள்பால் அன்பு தோன்றச் சிந்தையில் தெளிவு வேண்டும். தெளிவான ஆற்றுநீரில் இறங்கியதும் மனம் தெளிந்த தாகக் கூறுகிறார் சேக்கிழார். இக்காட்சியையும் நிகழ்ச்சியையும்,

''அளிமிடை கரைசூழ் சோலை யலர்கள் கொண் டணைந்த
வாற்றின்
தெளிபுன லிழிந்து சிந்தை தெளிவுறுந் திண்ண னார்தாங்
களிவரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச்சாரல் சேர்ந்தார்.

(பாடல் எண்: 100)

என்னும் பாடல் அழகுற உணர்த்துகிறது.

முன்பு செய்த தவத்தின் தொடர்ச்சியாக முடிவில்லாத பேரின்பமாகிய காளத்தியப்பர்பால் கொண்ட அன்பை எடுத்துக் காட்டும் பொருட்டு அளவில்லாத ஆர்வம் மிகுந்து, நிலைபெற்ற பெருங்காதல் மிக, வள்ளலாராகிய சிவபெருமான் மலையை நோக்கி என்பு நெகிழ்ந்து உருகி உள்ளத்தில் எழு வேட்கையோடு நாணனுடன் மலையேறிச் சென்றார் திண்ணனார்.

''பேணு தத்துவங்கள் என்னும் பெருகும் சோபானம் ஏறி ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல'' என்று காளத்தியப்பர் மலையை ஏறி நேர்படச் செல்வதற்கு உவமை சொல்கிறார் சேக்கிழார். முன்கூட்டியே திண்ணனாரின் உயர்ந்த பேறாகிய சிவபெருமானை அணையும் நிலையை உணர்த்தி விடுகிறார். சேக்கிழார்

''முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்பமான
வன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
யென்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை
யோடும்''.

(பாடல்: 102)

''நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானமேறி
யாணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்
நீணிலை மலையை யேறி நேர்படச் செல்லும் போதில்.

(பாடல்: 103)

காளத்தி மலையில் கோயில் கொண்டுள்ள காளத்தியப்பரைக் காணாததற்கு முன்னரே சிவபெருமானுடைய அருள் மிகுந்த அருள்திரு நோக்கத்தைத் திண்ணனார் அடைந்து விட்ட தாகச் சேக்கிழார் புலப்படுத்துகிறார்; பிறவியடைந்ததன் முந்தைய சார்புவிட்டு நீங்கியதாகவும் சேக்கிழார் குறிப்பிடு கிறார். ஒப்பற்ற அன்புருவமாகத் திண்ணனார் மாறியதாக, அவர் இறைவனுடைய மிகுந்த ஒளியின் நிழலை அடைந்த பேரின்ப நிலையை வருணிக்கிறார் சேக்கிழார்:

"திங்கள் சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணா முன்னே
யங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தித்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட்டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்."

(பாடல்: 104)

உள்ளத்து ஒளியாகிய மெய்ஞான ஒளிமிகுந்து விளங்கிய தன்மையைத்தான் ''பொங்கிய வொளி'' என்கிறார் சேக்கிழார். ஆன்மீக அறிவையே ''ஒளி'' என்னும் சொல் புலப் படுத்துகிறது.

திருக்காளத்தி மலையில் கொழுந்தாக எழுந்தருளியுள்ள காளத்தியப்பரைக் கண்டார்; பேருவகை தோன்றியது. அன்பின் வேகம் மேலே செல்ல மிகுந்த விரைவுடன் இறைவன் மீது மோகங்கொண்டு ஓடிச் சென்று காளத்தியப்பரைத் தழுவிக் கொண்டு மோந்து நின்றார்.

பக்தி நூல்களைக் கல்லாமல், சான்றோர் பேருரைகளைக் கேட்டறிய வாய்ப்பும் இல்லாத திண்ணனார் இறைவன் மீது கொண்ட பேரன்பு இயல்பாகத் தோன்றியது; உண்மையானது.

இயல்பான பேரன்பு தாயின் மீது பச்சிளங் குழந்தை கொள்ளும் அன்பைப் போன்றது. இறைவனைத் தழுவிக் கொண்டு மோந்து நின்ற நிலை, உயரிய இறையன்பையும் ஆன்மீக உள்ளுணர்வையும் வெளிப்படுத்துகிறது.

இந்தப் பேரன்புநிலையைச் சேக்கிழார்,

''மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள
**வேகநா** யகரைக் கண்டா ரெழுந்தபே ருவகை யன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமா யோடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார்.

(பாடல் 105)

என்கிறார்.

திண்ணனார் காளத்தியப்பரைத் தழுவிக் கொண்ட பிறகு நீண்டநேரம் பெருமூச்செறிந்து நின்றார்; உடலில் நிறைந்துள்ள மயிர்க்கால்கள் தோறும் உடல் முழுதும் புளகம் பொங்கியது; மலர்போன்ற கண்களினின்றும் கண்ணீர் அருவி பாய்ந்தது; இறைவன் அந்த மலையில் தனியாக இருப்பது கண்டு வருத்தம் கொண்டார். கரடி, வேங்கை, சிங்கம் முதலிய கொடிய விலங்குகள் திரிகின்ற காட்டில் துணையாக ஒருவரும் இல்லாமல் இறைவன் தனியாக உள்ளாரே என மனம் நைந்தார்.

கையிலிருந்து வில் நழுவி விழுந்ததனையும் திண்ணனார் உணரவில்லை; ''பச்சிலையுடன் பூவும் பறித்து நீரும் வார்த்துக் குற்றம் செய்தவர் யாரோ?'' என்று வருந்தித் திண்ணனார் நாணனிடம் வினவினார்.

''முன்பு உம்முடைய தந்தையோடு வந்தபோது, குளிர்ந்த நீராட்டி இலையும் பூவும் சூட்டி மந்திரம் சொல்லிப் பார்ப்பான் ஒருவன் செய்தான்; இன்றும் அவன் செய்ததாகும்'' என்று நாணன் விளக்கினான். இச்செய்திகளைச் சேக்கிழார்,

''கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள விந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ வென்றலு மருங்கு நின்ற
வச்சிலை நாணன் றானு நானிது வழிந்தே னென்பான்''.

*(பாடல்: 108)*

''வன்றிற லுந்தை யோடு மாவேட்டை யாடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக் குளிர்ந்தநீ ரிவரை யாட்டி
யொன்றிய விலைப்பூச் சூட்டிமுன் பறைந்தோர் பார்ப்பா
னன்றிது செய்தா னின்று மவன்செய்த தாகுமென்றான்''.

*(பாடல்: 109)*

என்னும் பாடல்கள் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.

மனத்தில் காளத்தியப்பர் மீது ஆராஅன்பு, திண்ணனாருக்கு எழுந்தது. காளத்தியப்பருக்கு இனிய செயல்கள்தாம் புரிய வேண்டும் என்று விரும்பினார்; தொண்டு செய்ய விரும்பியவர் காளத்தியண்ணலைப் பிரியமாட்டாமல் நீடித்து அங்கு இருந்தார்.

''காளத்தியண்ணல் தனியராக இருக்கிறாரே! இவருக்கு அமுது செய்ய இறைச்சியும் இடுபவர்கள் இல்லையே! இவரைப் பிரியமுடியாது; யான் இவருக்கு மிகுதியாக இங்கு இறைச்சி கொண்டு வரவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டார்.

இதனைச் சேக்கிழார்,

''இவர்தமைக் கண்டேனுக்குத் தனியரா யிருந்தா
றென்னே
யிவர்தமக் கமுது செய்ய விறைச்சியு மிடுவா ரில்லை

யிவர்தமைப் பிரிய வொண்ணா தென்செய்கே
னினியான் சால
விவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும்
வேண்டுமென்று.

*(பாடல் 111)*

*என்னும் பாடலால் விளக்கியுள்ளார்.*

*அந்த இடத்தை விட்டுச்செல்ல மனமில்லாமல் தவித்த நிலையை,*

''போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலி னோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்
நாதனே யமுது செய்ய நல்லமெல் லிறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவே
னென்பார்''

*(பாடல்: 112)*

''ஆர்தம ராக நீரிங்கிருப்பதென் றகல மாட்டே
னீர்பசித் திருக்க விங்கு நிற்கவுங் கில்லே னென்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை யெடுத்துக் கொண்டு மலர்க்கையாற் றொழுது
போந்தார்.

*(பாடல்: 113)*

*என்னும் பாடல்களால் உணர்த்தியுள்ளார்.*

*சென்றவர் மீள்வதும், சென்று காளத்தியப்பரைத் தழுவிக் கொள்வதும், மீண்டும் போவதும், அன்பினால் நோக்கி நிற்பதும், கன்றை விட்டுப் பிரிய இயலாத ஈன்ற அணிமை யுடைய தாய்ப்பசுவின் நிலையில் ஏங்கிய திண்ணனாரின் பேரன்பினைக் குறிப்பதாகச் சேக்கிழார், இறைவன்பால் கொண்ட திண்ணனாரின் இறை உணர்வினைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.*

இறைவனுக்குப் பசி இருக்கும், அவரும் தம்மை போல் இறைச்சியை உண்பவர் எனக் கருதி, உணவாக நல் இறைச்சியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வருவதாகத் திண்ண னார் தெரிவித்ததாக உணர்த்திய செய்தி, இறைவனுக்குரிய சடங்காக இறையன்பர்கள் தாம் விரும்பும் உணவுகளை படைக்கும் பான்மை தோன்றிய விதத்தை அறிவிப்பதாக உள்ளது.

பிறப்பும் முதுமையும் இறப்பும் அற்ற இறைவன் பசித்திருப்பான், அவனுக்கு உணவு தேவை என்றெல்லாம் எண்ணும் நெஞ்சம் பேதமையுடையது எனினும், தூய உண்மை யான பேரன்பு கொண்ட இணையற்ற இறையுணர்வு முதிர்ந்த உள்ளம் திண்ணனாருடைய உள்ளம் என்பது தெளிவு. அவ ருடைய அன்புக்கு இணையாக வேறெவருடைய அன்பையும் காட்ட இயலாது.

நாணன் மலையிலிருந்து இறங்கினான்; காடனைக் கண்டான்; திண்ணனார் பூத்த புதுமலர் கொள்ளுதற்குப் பூங்கா விற்குச் சென்றார்.

காடனுக்கு நாணன், திண்ணனாரின் இறைவனைவிட்டு நீங்காத நிலையைத் தலைசிறந்த உவமை ஒன்றன் வாயிலாக விளக்குகிறான். மேலும், ''தேவருக்கு (காளத்தியப்பருக்கு) இறைச்சி கொண்டு செல்லவே இங்கு வந்தான்; நம் குலத் தலைமையைக் கைவிட்டான்; தேவருக்கு நன்மை செய்பவ னானான்'' என்று, திண்ணனார் இனிமேல் வேட்டுவத் தலைவர் அல்லர் என்றும் இறையன்பராகவே இருந்து தொண்டாற்றுவார் என்றும், இறைவருக்குரிய தொண்டில் தலைப்படுபவர்கள் தொடர்ந்து இடைவிடாமல் அதில் ஈடுபடுவர் என்னும் உண்மையை உணர்த்தும் பான்மையில் கூறுகிறான். இச்செய்தி களைச் சேக்கிழார்,

''அங்கிவன் மலையிற் றேவர் தம்மைக்கண் டணைத்துக்
கொண்டு
வங்கினைப் பற்றிப் போகா வல்லுடும் பென்ன நீங்கா

னிங்குமத் தேவர் தின்ன விறைச்சிகொண் டேகப் போந்தா
ணங்குலத் தலைமை விட்டா னலப்பட்டான் றேவர்க்
கென்றான்''.

(பாடல் 116)

என்னும் பாடலில் தெரிவித்துள்ளார்.

திண்ணனார் காளத்தியப்பரைக் கண்டு பேரன்பு கொண்டு, அவ்வண்ணலை விட்டு நீங்காத நிலை, பற்றிக் கொண்டால் விடாத வலிய உடும்பின் நிலையாகும். இந்த நிலை இறையுணர்வினர்க்கு இயல்பாக அமைவதாகும். திண்ணனார் வாழ்க்கை ஆன்மீக உணர்வினர்க்கு எடுத்துக்காட்டாக இன்றும் விளங்கித் தெளிவுபடுத்துகிறது.

''என்ன செய்தாய் திண்ணா? நீதான் என்ன மயக்கம் கொண்டனை? எங்கள் தலைவன் அல்லையோ?'' என்று கேட்ட நாணன் முகத்தையும் பார்க்காமல், காளத்தியப்பருக்கு இறைச்சியுணவைப் பதம் செய்வதில் ஈடுபட்டார் திண்ணனார்.

வலிமையான பெரிய பன்றியைத் தீயினில் வதக்கி மிகவும் இனிய தசைகளை வெவ்வேறாக அம்பினால் பிளந்து, கோலில் கோத்துக் காய்ச்சிக் கொழுமையான தசை, பதத்தில் வெந்த பிறகு, தூய சுவையை அறிய வாயில் அதுக்கிப் பார்த்து, மிகவும் இனியன எல்லாவற்றையும் சருகு இலைகளில் இணைத்த கல்லையில் (தொன்னையில்) இட்டு எடுத்துக் கொண்டார்.

பக்கத்தில் நின்ற காடனும் நாணனும் திண்ணன் மிகவும் முதிர்ச்சியடைந்தான் என்றும் பெரும் பசியுடையவனாயினும் பேச்சிலன் என்றும் கூறி வியந்தனர்.

குடுமித் தேவராகிய காளத்தியப்பர் மீது மயக்கம் கொண்டான்; இதனைத் தீர்க்க ஒன்றும் அறியமாட்டோம்; தேவராட்டியை நாகனோடு அழைத்து வந்து மயக்கத்தைத் தீர்க்க வேண்டும் என்று கூறிக் கொண்டனர். அவர்கள் போனதையும்

திண்ணனார் அறியவில்லை. கல்லையில் ஊன் அமுதை அமைத்துக்கொண்டு, இறைவருக்கு மஞ்சனநீர் (அபிடேகம்) ஆட்ட எண்ணிப் பொன்முகலியாற்றின் நல்ல நீரைத் தம் தூய வாயினில் கொண்டு, கொய்த தூய நறுமணம் பொருந்திய பள்ளித்தாமத்தைத் (மலர் மாலையை) தம் தலைமுடியில் சொருகிக் கொண்டார்.

வில்லை ஒரு கையில் கொடிய அம்புகளுடன் தாங்கிக் கல்லைப் புனித மெல் இறைச்சி - நல்ல போனகம் ஒரு கையில் ஏந்தி, ''இனிய எம்பிரானார் மிகவும் பசிப்பர் என்று இரங்கி, ஏங்கி, மிக விரைந்து, இறைவர் - காளத்தியப்பர் மலையை நெருங்கினார்.

''காளத்தியப்பர் இளைத்தார்'' என்று நெருங்கிச் சென்று அடைந்து, மலையில் முளைத்துத் தோன்றிய முதலை - காளத்தி யப்பரைக் கண்டு, முடிமேல் இருந்த மலரைத் தம் வளைந்த கால் செருப்பைக் கொண்டு மாற்றினார்; வாயில் இருந்த மஞ்சன நீரை, விளைந்த அன்பை உமிழ்வார்போல் காளத்தியப்பர் முடிமேல் விட்டார் (உமிழ்ந்தார்).

தலையில் சுமந்துவந்த பள்ளித்தாமத்தைக் காளத்தி யப்பர் முடியின்மீது வணங்கிச் சாத்தினார்; வில்லில் தன் கையில் சேர்த்த கல்லையிலையில் படைத்த ஊனாகிய திரு வமுதை எதிரே வைத்தார்.

''கொழுத்த தசைகளையெல்லாம் கோலினில் தேர்ந் தெடுத்துக் கோத்துத் தீயிலிட்டுப் பதம் அடையக் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி, நாவில் பழகிய இனிமை பார்த்துப் (சுவைத்துப் பார்த்து) ''படைத்த இவ்விறைச்சி மிகவும் அழகியது;''

நாயன்நீரே அமுதுசெய்து அருளும்!'' என்று கூறி வேண்டினார் திண்ணனார். மேற்குறிப்பிட்ட காளத்தியப்பர் மீது கொண்ட பேரன்பினால் விளைந்த செயல்கள் சேக்கிழார் பாடல்கள் மூலம் இனிய நெஞ்சம் நெகிழத்தக்க செய்திகளாக அறியலாகின்றன.

*திண்ணனார் தம் தலைமுடியில் சொருகி வைத்திருந்த மலர்களைத் தம் செருப்புக் காலால் மாற்றியதையும், மஞ்சன நீரை வாயில் வைத்திருந்து காளத்தியப்பர் முடிமீது உமிழ்ந் ததனையும் இழிசெயல்களாக எண்ணிப் பார்க்கவில்லை. உண்மையான தூய பேரன்புக்குரிய பக்திமடத்தை ஆன்மீக உணர்வினர் வியந்து போற்றுகின்றனர்.*

*இத்தகைய செயல்களைப் பகலவனாகிய சூரியன் கண்டு, பல நீண்ட கரங்களைக் (ஒளிக்கதிர்களை) குவித்து வணங்கி மேற்கு மலையில் மறைந்ததாகச் சேக்கிழார் உயரிய தன்மையில் திண்ணனாரின் இறையன்பைப் போற்றுவதாக,*

''அன்னவிம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்த வேடர்
மன்னனார் திருக்காளத்தி மலைய்யினார்க் கினிய நல்லூ
னின்னமும் வேண்டுமென்னு மெழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையிற்
றாழ்ந்தான்''.

*(பாடல்: 126)*

*என்னும் ஒப்பற்ற பாடல் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.*

*அந்திமாலை நெருங்கியதும் இரவு சேர்ந்தது; கொடிய விலங்குகள் உள்ளன என்று அஞ்சி, மெய்மையற்ற மற்ற வற்றைக் கொள்ளாத செம்மையான அன்பைத் தாங்கித் திருக் கையில் வில்லையும் தாங்கிக் கரிய மலைபோன்றவர் என்று சொல்லுமாறு, ஐயர் - தலைவராகிய திருக்காளத்தியப்பர் பக்கத்தில் அகலாமல் நின்றார் திண்ணனார்.*

*கடவுளையும் விலங்கு தாக்கும் எனத் திண்ணனார் அஞ்சினார்; அறியாமையாயினும் அளவற்ற இறையன்பின் முதிர்ச்சி எனலாம். அந்த இறையன்பு, ''மெய்மையின் வேறு கொள்ளாச் செவ்விய அன்பு'' (பாடல் 127) என்பது மெய் யுணர்வு; 'மெய்' பற்றிய உணர்வு; 'மெய்' என்பது பொய்க்காமல் நிலைத்திருப்பது; அதுதான் இறைமை.*

கரியமலை அசையாமல் நிற்பது; கரிய நிறத்துத் திண்ண னார் அசையாமல் நின்றிருந்ததனால் ''மைவரையென்ன'' என்று அவர் நின்ற நிலையை நம் மனக் கண்ணில் காணச் செய்கிறார் சேக்கிழார்.

செய்வதற்கரிய தவங்கள் செய்து முனிவர்களும் தேவர் களும் கரியமலைக்கண், காட்டில் சேர்ந்தும் காணுதற்கரியா ராகிய திருக்காளத்தியப்பரை, முற்பட்டு ஆர்வம் பெருக ஆராத அன்பினால் கண்டு கொண்டு இறைவரையே நேராக நோக்கி நின்றாராம் திண்ணனார்.

இறைவனை நேரில் கண்களால் காணமுடியாதவர் களாகத் தேவர்களும் முனிவர்களும் திருக்காளத்தி மலைக்கு வந்தனர்; திண்ணனாரோ எனின் அன்பினால், இறைவரைக் கற்சிலை எனக் கருதாமல், தம்மால் விலங்குகளிடமிருந்து பாதுகாவல் பெறும் ஒப்பற்ற தலைவராக நேரில் நோக்குபவர் ஆனார்.

''சார்வருந் தவங்கள் செய்து முனிவரு மமரர் தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற்கரியார் தம்மை
யார்வமுன் பெருக வாரா வன்பினிற்கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார்''.

(பாடல்: 128)

என்னும் பாடல் இறைவனை அன்பால் உணர முடியும் என்னும் உண்மையை வெளியிடுகிறது.

இந்த நிலையில் சிவகோசரியார் என்னும் வேதியர், காலைப்போதில், ஆகமத்தில் சொல்லப்பெற்ற நெறிப்படி கொய்த மலரையும் புனலையும் கொண்டு பூசனை செய்யத் திருக்காளத்தியப்பரை அணுகினார்.

திருக்காளத்தியப்பர் திருமுன்பு வெந்த இறைச்சியையும் எலும்பையும் கண்டு அகலக் கால்வைத்து மிதித்து ஓடி, 'இந்த உசிதமற்ற செயலை யார் செய்தார்? கெட்டேன்!'' என்று மனம்

வருந்திக் கூறினார். ''வேட்டுவர்களே இதனைச் செய்திருப்பர்'' எனப் பதறி அழுது விழுந்து வருந்தினார், சிவகோசரியார்.

இறைச்சியையும் எலும்பையும் நாய் நடந்த பாதச் சுவட்டையும் திண்ணனாரின் செருப்படியையும் திருவலகு கொண்டு மாற்றினார். திருமுகலிப்புனலில் மூழ்கி விரைந்து வந்து சேர்ந்தார்.

பழுது புகுந்தது நீங்கப் பவித்திரமான செயல்புரிந்து, தொழுது பெறுவனவற்றைக் கொண்டு தூய்மையான பூசனை தொடங்கி, குற்றமற்ற திருமஞ்சனம் முதலான பூசனைகளை முழுதும் முறையாகச் செய்து முடித்து, முதல்வனாராகிய திருக் காளத்தியப்பருடைய திருவடிகளைப் பணிந்தார் சிவகோசரியார்.

இறைவனைப் பணிந்து எழுந்து, ''தனிமுதலாம் பரன்'' என்று பலமுறைகளால், துணிந்த மறைமொழியால், துதித்து, சுடருடைய நிலவு அணிந்த சடைமுடிக்கற்றையுடைய அழகிய முக்கண் உடையவரை விடைகொண்டு சிவகோசரியார் தபோவனம் சென்றடைந்தார்.

இச்செய்திகளால், திண்ணனார் வழிபாட்டு முறை களை அறியாமல், தூய்மையற்ற முறையில் இறைச்சியை யும் படைத்து வழிபட்டார். ஆகம முறைப்படி பூசனை நடத்த வில்லை. ஆயின், சிவகோசரியார் மறைகளை ஓதியவர்; ஆகம முறைகளை அறிந்தவர். முறைப்படி தூய முறையில் காளத்தி யப்பரை வழிபட்டார். திண்ணனார் கல்லாதவர்; சாதியால் தாழ்ந்தவர்; வேட்டுவர். சிவகோசரியார் வேதாகமங்களைக் கற்ற றிந்தவர்; சாதியால் உயர்ந்தவர்; பார்ப்பனர். உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும் அவ்விருவரும் திருக்காளத்தியப்பர்பால் பக்தியுடையவர்கள். எனினும், ''காளத்தியப்பரை விலங்குகள் துன்புறுத்தும், இறைவர் பசித்திருப்பார், தனித்திருப்பார்'' என்னும் வருந்தும் மனம் சிவகோசரியாருக்கு இருந்ததில்லை. ஆயின், வேட்டுவராகிய திண்ணனார் கல்லாமையுடையவ ராயினும் அளவற்ற அன்புடன் இறைவருக்குப் பசியுண்டு என எண்ணி ஊன் உணவு கொண்டுவந்து படைத்து வழிபட்டார்.

காளத்தியப்பரை இரவு முழுதும் கண் விழித்துக் காவ நின்றார். இந்த அன்புக்கு ஈடில்லை எனலாம்.

சிவகோசரியார் தபோவனத்திற்குச் சென் திண்ணனார் வழக்கம்போல் விலங்குகளை வேட்ன சென்றார். வேட்டையாடிச் சேகரித்த ஊனைத் தீயி காய்ச்சிப் பதம் செய்தார். பதம் செய்த ஊன் உணவை வைத்துச் சுவைபார்த்துத் தெரிந் தெடுத்த செயல், எ கடவுளர்க்கு இடும் உணவு கொண்டு ஊட்டுகின்ற எரிவாயிடத்தில் (யாகத்தீயில்) வைத்தது என்னும்படி தாகச் சேக்கிழார், திண்ணனாரின் அச் செயலை யாக அவிப்பொருள்களைச் சொரியும் முனிவர் களின் செய ஒப்பிட்டு உயர்த்திப் பேசுகிறார்:

''எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டூட்டு
வண்ணவெரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
யண்ணலார்க் காம்பரிசு தாஞ்சோதித் தமைப்பார்பே
றிண்ணனார் திருவாயி லமைத்தாருன் றிருவமுது'

(பாட

என்னும் பாடல், திண்ணனாரைத் தவமுனிவர் செய ஒப்பிடும் பாடலாகும்.

இறைச்சியைக் கல்லையில் வைத்துத் தேன் ட கலந்தார்; திருப்பள்ளித்தாமமும் தூய மஞ்சனநீரும் முன்பு விரைந்து உடன் கொண்டுவந்து சேர்ந்தார்.

வந்து திருக்காளத்தி மலைமீது ஏறி வனசரர்க வேட்டுவர் தலைவர் - திண்ணனார், இமையோர் (தேவ தலைவனாரை - திருக்காளத்தியப்பரை அடைந்து, சிவ யார் செய்த பூசைக்குரிய மலர் முதலியவற்றை முன்பு அகற்றினார்; பிறகு, முன்பு செய்த தம்முடைய முறை பூசனையின் செயல்களை முடித்தார்.

திருக்காளத்தியப்பர் கேட்டு ஊனமுதை விரும்புவா எண்ணிய திண்ணனார், தாய் ஒருத்தி தன் குழந்தை

சொல்வதுபோல், ஊனமுதைக்கல்லையுடன் வைத்துவிட்டு, ''இது முன்பு வைத்ததைவிட நல்லது; ஏனமொடு, கலைமான் கண், மரை, கடமை இவற்றிலான உறுப்புகளின் இறைச்சி யமுது; அடியேனும் சுவைகண்டேன்; இது தேனும் உடன் கலந்தது; தித்திக்கும்!'' என்று அன்புடன் இறைவனாரிடம் முறையிட்டார்:

''ஊனமுது கல்லையுடன் வைத்திதுமுன் னையினன்றா
லேனமொடு மான்கலைகண் மரைகடமை யிவையிற்றி
லானவுறுப் பிறைச்சியமு தடியேனுஞ் சுவைகண்டேன்
றேனுமுடன் கலந்ததிது தித்திக்குமென மொழிந்தார்''.

(பாடல்: 150)

என்று இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார் பாடல் மூலம் எளிய நடையில் உணர்த்தியுள்ளார். இறைச்சியுணவைத் 'திருவமுது' எனவும், திண்ணனார் செய்த பூசையை 'ஒப்பரிய பூசனை' எனவும் சேக்கிழார், அவர் படைத்த ஊன் உணவையும் புரிந்த பூசனை யையும் புகழ்ந்து உயர்த்திப் பேசுகிறார்.

திண்ணனார் இரவு முழுதும் உறங்காமல் காளத்தியப்பர் எதிரே நின்று காவல் புரிந்தார்; பகல்பொழுதுகளில் வேட்டை யாடினார்; திருக்காளத்தியப்பரை அணுகிய நாளிலிருந்து திண்ண னார் ஊன்உணவைச் சுவைத்துத் தெரிந்தெடுத்து இறைவனுக்குப் படைத்தாரேயன்றித் தாம் உண்டதாகத் தெரியவில்லை.

சிவகோசரியார், நாள்தோறும் பூசனை செய்ய வந்தபோது ஊன் முதலியவற்றைக் கண்டு அவற்றைத் தீமையானவை எனக் கருதி நீக்கினார்; ஆகம முறையில் அருச்சனை செய்து அந்நெறி யில் ஒழுகிவந்தார்.

நாணனும் காடனும் சென்று நாகனிடம் கூறினர்; நாகனும் சென்று திண்ணனார் மாற்றமடைந்திருத்தலைக் கண்டு, தங்கள் குறிக்கோளுக்கு உடன்பட்டு வராதது அறிந்து, கைவிட்டுச் சென்றான்.

திண்ணனார், திருக்காளத்தியப்பருடைய அருள் நோ னால், வேறுபடுத்தும் ஆற்றலால், இரும்பு பொன்னா போல் யாக்கையின் தன்மையும், வினைகள் இரண்டும், சா மலங்கள் மூன்றும் அறுபடவே அன்புப் பிழம்பாய்த் திரிவ என்னும் பொருளில்,

''முன்புதிருக் காளத்தி முதல்வனா ரருணோக்கி
னின்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கை
தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற
வன்புபிழம் பாய்த்திரிவா ரவர்கருத்தி னளவினரோ''.

(பாடல். 

என்னும் பாடல் அமைத்துத் திண்ணனாரின் எளிய மானி தன்மையிலிருந்து உயர்பேரருளாளராக அவர் மாறிய ம றத்தை, இரும்பு பொன்னாக மாறிய மாற்றத்துக்கு ஒப்பிட் அவர் அன்புப் பிழம்பாகவே மாறிவிட்டதாகவும் உணர் குறிப்பிட்டுள்ளார். ஆழ்ந்த இறையுணர்வு மலரும்போது ம அருள்தன்மையினால் மாறி இறையை அடைய முயலுகிற இந்த நிலையைத் திண்ணனார் வாழ்வில் காண்கிறோம்.

திண்ணனார் தாம் இறைச்சியைப் படைத்துப் பூச செய்துவந்தார் என்பதனைக் கண்டறியாத சிவகோசரியார், '' னுடைய நாயகனே! இது செய்தார் தமைக்காணேன்; னுடைய திருவருளால் (இத்தீமையை) ஒழித்தருள வேண்டு எனக் காளத்தியப்பரிடம் வேண்டிக் கொண்டார்.

அன்றிரவு, சிவகோசரியாரின் கனவில் திருக்காள யப்பர், முனிவர் வடிவத்தில், மின் திகழும் சடைமவுலி வே ராகத் தோன்றினார்; ''வன்திறல் வேடுவன் என்று அவ நினையாதே! நல்ல அவன் செயல்களை நாம் உரைப்பக் கே என்று கூறத் தொடங்கினார். காளத்தியப்பர், ''அவனுை வடிவமெல்லாம் நம்மிடம் அன்பு'' என்றும், ''அவனுை அறிவெல்லாம் நம்மையறியும் அறிவு'' என்றும், ''அவனுை செயல்கள் அனைத்தும் நமக்கினியவை'' என்றும் ''அவனுை நிலை இவ்வாறு; அறி நீ!'' என்றும் அருளினார்.

இறைவனை நாடுவோர் அன்பு செலுத்த வேண்டும் என்பதும், இறைவனை அறிவதற்குரிய மெய்யறிவு வேண்டும் என்பதும், இறைவனுக்கு இனிய செயல்களையே செய்ய வேண்டும் என்பதும் அறியத்தகும் இறையுணர்வினர்க்குரிய செய்திகளாக இங்குச் சேக்கிழாரால் திண்ணனார் வாயிலாகச் சொல்லப்பட்டுள்ளன.

சிவகோசரியாரின் கனவில் தோன்றிய காளத்தியப்பர், திண்ணனாரின் செயல்கள் அனைத்தையும் தமக்கு ஏற்புடைய செயல்களாகக் கூறுகிறார்:

''பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புறுமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்''.

(பாடல். 158)

என்னும் பாடலால், திண்ணனாரின் பூசனைக்கு முன்னதாக இறைவர்மேல் அருச்சிக்கப்பெறும் மலர்களைத் திண்ணனார் நீக்கியதால் விளைந்த ஆதரவால், விருப்பம் கொள்ளும் அன்பு என்னும் வெள்ளக்கால் பெருகிற்று என்றும் இறைவர்மேல் பட்ட திண்ணனாரின் செருப்படியானது குழந்தைப் பருவமுடைய சேயின் அடியினைவிடச் சிறப்புடையது என்றும், திண்ணனாரின் அன்புமிகுந்து அறியாமையால் செய்த செயல்களைப் போற்றிக் கூறுகிறார் காளத்தியப்பர்.

''உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலா
லொருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்''.

(பாடல்: 159)

''இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மன்புமேல் விரிந்தனபோல் விழுதலாற்
செம்மலர்மே லயனொடுமான் முதற்றேவர் வந்துபுனை
யெம்மலரு மவன்றலையா லிடுமலர்போ
லெனக்கொவ்வா''.

(பாடல்: 160)

''வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பா
னையுமனத் தினிமையினி னையமிக மென்றிடலாற்
செய்யுமறை வேள்வியார் முன்புதருந் திருந்தவியி
லெய்யும்வரிச் சிலையவன்றா னிட்டவூ னெனக்கினிய''.

(பாடல்: 161)

''மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினு
முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
வன்பினினைந் தெனையல்லாலறிவுறா மொழிநல்ல''.

(பாடல்: 162)

''உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ யொளித்திருந்தா
லெனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங்
காண்கின்றாய்
மனக்கவலை யொழிகென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார்''.

(பாடல்: 163)

மேற்கண்ட பாடல்களில் திண்ணனாரையும் அவர் செயல்களையும் தாம் விரும்பி ஏற்கும் விருப்பத்தையும் திருக்காளத்தியப்பர் சிவகோசரியாரின் கனவின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

''உருகும் அன்பு அவன் உருவம் என்னும் பெரிய கொள்கலமாகிய முகத்தில் விளங்கி ஒழுகுதலால், முனிவன் ஒருவனுடைய செவியிலிருந்து உமிழப்பெறும் உயரிய கங்கை என்னும் முதன்மையான புண்ணிய தீர்த்தத்தை விட அவன் (திண்ணை) வாயினின்றும் உமிழும் புனல் புனிதமானது'' எனவும்,

''இம்மலைக்கு வந்து என்னையடைந்த வேட்டுவனது இயல்பால் உடலில் மலரும் அன்பு மலர்கள் மேல் விரிந்தன போல், விழுதலால், செந்தாமரை மலர்மேல், பிரமனோடு திருமால் ஆகிய முதன்மையான தேவர்கள் வந்து அணியும் எந்த மலரும் அவன் தலையால் இடுகின்ற மலர்போல் எனக்கு ஒவ்வாது'' எனவும்,

''வெம்மையான தீயினால் பதம் கொள்ளும்படி (இறைச்சி) வெந்துளதோ என்னும் அன்பால் வருந்தும் மனத்தின் இனிமையை நினைத்து (அந்த இறைச்சியை) மென்றிடலால், மறையோர் முன்பு செய்யும் வேள்வியில் இடும் திருந்திய அவிப்பொருள்களைவிட, வில்லையுடைய திண்ணன் இட்ட ஊன் வகைகள் எனக்கு இனிப்பன'' எனவும்,

''நிலைபெற்ற பெருமைக்குரிய மறைமொழிகள், மாமுனிவர்கள் மகிழ்ந்து சொல்லும் இன்பமொழித் தோத்தி ரங்கள், மந்திரங்கள் யாவற்றையும்விட எனக்கு முன்னால் இருந்து அவன்தன் முகம் மலர அகம் நெகிழும்படி அன்புடன் நினைந்து, என்னையல்லாமல் வேறொன்றையும் அறிய முடியாத அவன் மொழிகள் நல்லன'' எனவும்,

''உனக்கு அவனுடைய செயலைக் காட்ட நாளைக்கு நீ ஒளிந்திருந்தால், என்மேல் அவனுக்குள்ள அன்பின் தன்மை களை எல்லாம் காண்பாய்! மனக்கவலை ஒழிக!'' எனவும் மறைமுனிவராகிய சிவகோசரியாருக்கு அறிவித்துச் சிவபெரு மான் கனவில் எழுந்தருளி மறைந்தார்.

இறைவனுடைய உரைகள் வாயிலாக அவன் விரும்பு வன அடியார்களின் உண்மையான அன்புதான் என்பதனை அறியலாம். தங்கள் செயல்கள் எத்தகையன என்பதனையும் உணராத அறிவற்றவராயினும் அவர் உவப்புடன் இடுகின்ற ஊன் உணவும் இறைவனுக்கு உகந்ததே எனவும் அறிகிறோம். இடுபவருடைய அன்பின் காரணமாக இழிந்த உணவும் உயர்ந்த அவியுணவாகிறது.

இறைவனைத் துதித்து மொழிவதற்குரிய மறைமொழி களைக் கற்காவிடினும், உள்ளன்புடன் இறைவனிடம் முறை யிடும் அன்பரின் சொற்கள், உயர்ந்த இறைவன் விரும்பி ஏற்கும் உரைகளாகிவிடுகின்றன.

திருக்காளத்தியப்பர் கனவில் உரைத்தபடி, சிவகோசரி யார் மறுநாள் திருமுகலியாற்றில் மூழ்கி நீராடிய பிறகு திருக் காளத்தி மலையேறி, முன்புபோல் இறைவனைப் பூசித்துப் பின்பக்கம் ஒளித்திருந்தார்.

சிவகோசரியார் வருவதற்கு முன்னர் வழக்கம் போல், ஆறாம் நாளன்றும் உறங்காமல் காளத்தியப்பரைக் கண்விழித்துக் காவல் காத்த பிறகு காலையில் ஒப்பற்ற வேட்டையாடச் சென்றார்.

ஊனமுது, மஞ்சன நீர், புதுமலர்கள் வெவ்வேறு தன்மை களில் அமைத்துக் கொண்டு வழக்கம்போல் தீய சகுனங்களால், காளத்தியப்பருக்கு என்ன நேர்ந்ததோ என அஞ்சியவாறு காளத்தி யப்பரைக் காண விரைந்து வந்தார்.

அண்ணலார் திருக்காளத்தியப்பர், அடிகளாராகிய சிவகோசரி முனிவருக்குத் திண்ணனாரின் அன்பைக் காட்ட வேண்டித் தம் திருக்கண்களில் ஒன்று திடீரெனக் குருதிபாய இருந்தார்; தொலைவில் திண்ணனார் கண்டு மிக விரைந்து ஓடிவந்தார்.

திண்ணனார் குருதியைக் கண்டார்; மயங்கினார்; வாயி லிருந்த நல்லநீர் சிந்திடக் கையில் இருந்த ஊன்அமுதம் வில் லுடன் சிதறி வீழ்ந்தது; கொத்தாக மலர்ந்திருந்த பள்ளித்தாமம் தலைமுடியிலிருந்து அலைந்து சொரிந்தது; திண்ணனார் பதைப் புற்று நிலத்தில் வீழ்ந்தார். இக்காட்சியினைச் சேக்கிழார் இயல் பாக உணர்ச்சிமிக அழகாகக் கீழ்வரும் பாடலால் விளக்கி யுள்ளமை நம்மையெல்லாம் திண்ணனாரின் பேரன்பையும் அவரடைந்த பேரதிர்ச்சியினையும் உணர வைக்கிறது:

''வந்தவர் குருதி கண்டார் மயங்கினார் வாயினன்னீர்
சிந்திடக் கையிலூனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை யலங்கன் மார்பர் நிலத்திடைப் பதைத்து
வீழ்ந்தார்''.

(பாடல்: 170)

இறைவன் உலகத்து உயிர்களின் துன்பங்களைத் துடைப் பவன்; அவருக்கே கண்ணொன்றில் குருதி சொரிகின்ற துன்பம் நேர்ந்ததனைக் கண்ட திண்ணனார் மனம் தாளாமல், குருதி சொரிவதனைத் தடுக்க விரைந்து சென்று துடைத்தார்; குருதி சொரிந்து வீழ்வது நிற்கக் காணோம். என்ன செய்வது என்பது அவருக்குத் தெரியவில்லை; பெருமூச் செறிந்து மீண்டும் மனம் அழிந்து வீழ்ந்தார்; தேறி, ''யார் இது செய்தார்?'' என்று சினத் துடன் கேட்டவாறு எழுந்தார்; திசைகள் எங்கும் பார்த்தார்; எடுத்தார் வில்லை; அம்பையும் தெரிந்தெடுத்துக் கொண்டு, ''இம்மலையிடை எனக்கு மாறாகக் கொடிய மறவர் இச் செயலைச் செய்தார் யாரோ? விலங்கினங்களாகிய சிங்கம் முதலியன விளைத்தனவோ? அறியேன்'' என்று தமக்குத்தாமே கூறிக்கொண்டு மலைச்சாரலில் நீண்ட தொலைவு தேடிச் சென்றார். வேட்டுவர் எவரையும் காணவில்லை; பக்கத்தில் எந்த இடத்தில் ஆராய்ந்தும் விலங்குகளைக் காணமுடிய வில்லை; மீண்டும் காளத்தியப்பரை வந்தடைந்தார்; நீண்ட சோகத்தோடு மலர்கள் நிறைந்த பாதங்களைப் பற்றியவாறு, பக்கத்தில் கட்டிக்கொண்டு கண்ணீர் சொரியக் கதறியழுதார்.

''பாவியாகிய யான் கண்டவண்ணம் ப
நேர்ந்தது என்னவோ? ஆவியைவிட இனிய செ
னார்க்கு (கொடிய போர்க்களங்களாகிய திரிபுரங்க
என்னவோ? இவரை யடைந்தவர்கள் பிரியமாட்ட
மற்றவருக்கு நேர்ந்தது என்னவோ? ஆவது ஒன்
முடியவில்லை; யான் என் செய்வேன்?'' என்று
அழுதார்.

''குருதி சொரிதல் எதனால் நிகழ்ந்தது? தி
வென்றவர் தமக்குத் தீங்கில்லாமல் பார்த்துக் செ
யாமல் போனது ஏன்? ஆவியைவிட இனியவருக்
துன்பம் செய்வார்களா? இறையவரிடம் வந்தவ
விட்டுப்பிரிய மாட்டார்களே! காளத்தியப்பர் குற்
விமலனார்! குற்றம் செய்தவர்க்கன்றோ துன்பம்
என்றெல்லாம் எண்ணிய எண்ணங்களின் வெளிப்பா

''பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்
தெ
வாவியி லினிய வெங்க ளத்தனார்க் கடுத்த தெ
மேவினார் பிரிய மாட்டார் விமலனார்க் கடுத்
வாவதொன் றறிகி லேன்யா னென்செய்கே செ
பின்

(ப

என்னும் பாடல் தெளிவுற வெளிப்படுத்துகிறது.

திண்ணனார் திருக்காளத்தியப்பரின் கண் பழு
என்ன செய்தால் சரியாகும் என்று எண்ணிப் பார்த்தா
அம்பினால் ஏற்படும் புண்ணைத் தீர்க்கும் மருந்தினை
கொண்டு வருதற்கு மலையடிவாரத்திற்குச் சென்றார்.

வெவ்வேறு வகைப்பட்ட வனங்களில் மரு
மூலிகைகளைத் தேடினார்; மருந்துகளைப் புனத்தில்
கொண்டு, பூதநாயகராகிய காளத்தியப்பரிடம் வந்த
களைப் பிழிந்து கண்ணுக்கு வார்த்தார். கண்ணிலிருந்த

சொரிதல் குறையவில்லை. என்ன செய்வது என்று எண்ணிப் பார்த்து, ''ஊனுக்கு ஊன்'' எனக்கருதித் தம்மிடமிருந்த அம்பி னால், தம் கண் ஒன்றினைத் தோண்டி எடுத்து இறையவரின் பழுபட்ட கண்ணிடத்தில் அப்பினால், புண்ணின் குருதி நீர் நிற்கும் என்று மதர்த்தெழுந்த உள்ளத்தோடு மகிழ்ந்து, அம்பி னால் தோண்டிப் பெயர்த்தெடுத்து, முதல்வராகிய இறைவர் கண்ணில் அப்பினார். நின்ற செங்குருதி கண்டார்; நிலத்திலிருந்து குதித்துப் பாய்ந்தார்; தம் மலை போன்ற தோள்களைக் கொட்டி னார்; கூத்தாடினார்; ''நான் செய்தற்கு இந்த அறிவு நன்று!'' என்று தம் அறிவைப் பாராட்டியவாறு நகைப்பும் தோன்ற, களிப்பும் சேர, உன்மத்தர் போல் ஆனார்.

தம் கண்ணையே கொடையாக அப்பிய திண்ணனாரின் நிறைந்த அறச்செயலைப் (நலத்தினை) பின்னும் காட்ட, இறை வர் மற்றைக் கண்ணிலும் அளவில்லாத செங்குருதி பாயும்படிச் செய்தார்; அதனைத் திண்ணனார் கண்டார்.

சேக்கிழார், ''கண்டனர்'' என்று மட்டும் குறிப்பிடாமல், ''கண்டனர் உலகில் வேடர் குலப் பெரும் தவத்தால் வந்து கொள்கையின் உம்பர் மேலார்'' என்று திண்ணனாரை உயர்த்திப் பேசுகிறார். வேடராக வந்து கொள்கையினால் தேவர்களையும் விட மேலானவர் என்று பாராட்டுகிறார். இங்கே, தம் கண்ணை அப்பினால்' காளத்தியப்பருடைய பழுதுபட்ட கண் சரியாகும் என எண்ணிக் கண்ணைக் கொடையாக அளிக்கும் உயரிய அறச்செயலைத் திண்ணனார் மேற்கொண்டமையை அறியலாம். தம் மற்றொரு கண்ணையும் பெயர்த்து அப்பத் துணிவார் என்னும் கருத்தினாலும், திண்ணனாரின் பேரன்பைச் சிவகோசரி யாருக்கு மட்டுமல்லாமல் உலகுக்கும் வெளிப்படுத்த வேண்டி யும், இடக்கண்ணிலும் குருதி சொரியும்படிச் செய்தார் என்று கொள்ள வேண்டும்.

அத்தகைய காட்சியைக் கண்டதும், ''கெட்டேன்! எங்கள் காளத்தியார் கண் ஒன்று புண்தரு குருதி நிற்க, மற்றைக்கண் குருதிபொங்கி மண்டும்! இதனுக்கு அஞ்சேன்; மருந்து கை கண்டேன்; இன்னும் உண்டு ஒரு கண்! இக்கண்ணை இடந்து

அப்பி ஒழிப்பேன்!'' என்று மருந்துகண்ட நம்பிக்கையில், இருக்கும் ஒரு கண்ணையும் இழக்கத் துணிகிறார் திண்ணனார்.

மற்றொரு கண்ணையும் இடந்தால், சிவபெருமானின் இடக்கண் - குருதி சொரியும் கண் இருக்கும் இடம் அடையாளம் தெரியாமல் இடர்ப்பட நேரும் எனக் கருதி, அதில் தம் இடக் காலை ஊன்றி உள்ளத்தில் நிறைவான விருப்பத்தோடு, ஒப் பற்ற ஓர் அம்பினைக் கொண்டு தம் கண்ணில் ஊன்றினார்; தேவதேவராகிய சிவபெருமான் அதனைச் சகித்துக் கொள்ள வில்லை. அதனைத் தடுத்தற்பொருட்டு ''கண்ணப்ப நிற்க!'' என்று கூறியபடி திருக்காளத்தியற்புதராகிய சிவபெருமான், திண்ணனார்தம் கண்ணைப் பெயர்க்க முற்படுமுன்னர், அவரது கையைப் பிடிக்கும்போது சிவகோசரியார் கண்டார்; நான்முகன் முதலிய தேவர்கள் பூமாரி பொழிந்தனர்; மறைகள் ஆரவாரம் செய்தன.

''இதனைக் காட்டிலும் பெரும்பேறு உண்டோ?'' என்று சேக்கிழார் பெருமானார் கண்ணப்பரின் பேரன்பு சார்ந்த தியா கத்தைப் பாராட்டுகிறார். சிவபிரான் கண்ணில் வந்த ஊறு கண்டு அஞ்சித் தம் கண் இடந்து அப்ப உதவும் கையை, விடைமீது அமர்ந்து உயர்ந்தவர் தம்கையால் பிடித்துக் கொண்டு என் வலப்பக்கம் மாறுதல் இல்லாதவனே! நிற்க!'' என்று கூறியவாறு நிலைபெற்ற பேரன்பு புரிந்தார்.

இந்த உயரிய நிலையினைச் சேக்கிழார்,

''பேறினி யிதன்மே லுண்டோ பிரான்றிருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவுங் கையை
ஏறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக் கொண்டென்
வலத்தின்
மாறிலாய் நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார்.

(பாடல். 185)

என்னும் பாடலால் விளக்கியுள்ளார்.

''பேறுஇனி இதன்மேல் உண்டோ'' என்னும் தொடர் சிந்தித்தற்குரிய சிறப்பான தொடர். 'பேறு' என்பது கண்ணப்ப நாயனார் அடைந்த பேறு; அது எது? எத்தகையது? அதற்கு

ஈடுஉண்டா? என்றெல்லாம் சிந்தித்தால் விடையை உய்த் துணரலாம். திண்ணனார் கண்ணப்பியதால் அடைந்த 'கண் ணப்பர்' என்னும் பெயர் மாறிய பேறுமட்டுமன்று அப்பேறு; சிவபெருமான் என்றாலே அவன் ஆணுமல்லாதவன்; பெண்ணு மல்லாதவன்; சிவன் என்றால் அவனிடம் சக்திக்கும் இடம் உண்டு; வலப்பகுதி சிவன்; அவனது இடப்பகுதி சக்திக் குரியது. வலக்கண்ணில் குருதி சொரிந்த காரணத்தால், திண்ண னார் தம் வலக்கண்ணை இடந்து எடுத்துக் காளத்தியப்பராகிய சிவபிரானுடைய வலக்கண்ணில் அப்பினார். சிவபெருமா னுடைய இடப்பகுதியில் உள்ள இடக்கண் உமாதேவிக்குரியது. சிவபிரானார் திண்ணனாருக்கும் முன்னால் தம் வலக்கண்ணுக்கு ஊறு விளைவித்துக் கொண்டு, திண்ணனின் பெருமையை உலகுக்கு உணர்த்த வேண்டி அரிய தியாகம் செய்தவர்; ஊறு அடைந்த வலக்கண்ணில் தம் வலக்கண் அப்பப் பெற்றதனால் அத்தகைய தியாகம் செய்து பேரன்புடையராகிப் பேறு பெற்றவர் திண்ணனராக இருந்த கண்ணப்ப நாயனார்; **''வலத்தின் மாறு இலாய் நிற்க!''** என்று சிவபிரான் கண்ணப்ப நாயனாரிடம் உணர்த்தியதனால், ''வலப்புறம் நின் கண் எனக்குக் கண்ணாக - மாறுகண்ணாக மாறிவிட்டதனால், நீ வலக்கண் இல்லாதவன் - (இலாய்). என் வலக்கண்ணாக நிலைத்து என்றென்றும் நிற்பா யாக!'' என்றும் பொருள்கொண்டு, ''அத்தகைய பேறு இதனை விட உண்டோ?'' என்று உயரிய பெருமைக்கும் எடுத்துக் காட்டாக எதனையும் சொல்ல முடியாத பேரன்புக்குரிய மறச் செயலாகவும் கண்ணப்பரின் ஆன்மீக அருஞ்செயல் என்றென் றும் நினைந்து பெருமிதம் கொள்ளுதற்குரியதாக அமைகிறது.

''மங்குல்வாழ் திருக்காளத்தி மன்னனார் கண்ணிற் புண்ணீர்
தங்கணான் மாற்றப் பெற்ற தலைவர்தா டலைமேற்
கொண்டே''

(பாடல். 186)

என்று சேக்கிழார் பெருமான், கண்ணப்பனாரைத் 'தலைவர்' என்றதும் அவருடைய திருத்தாளினை, ''தலைமேல் கொண்டே'' என்று பெருமித உணர்ச்சியுடன் குறிப்பிட்டதும் இறையடியார் மீது கொண்ட பேரன்பினைக் காட்டுகின்றன.

★ ★

# 12. மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் ஆன்மீகக் கோட்பாடுகள்

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் நாட்டுப்பற்றும் தமிழ்ப்பற்றும் கொண்டு வாழ்ந்த சில ஆண்டுகளில் உலகம் போற்றத்தக்க உணர்ச்சியும் பயனும் மிக்க தீஞ்சுவைக் கவிதை களைப் படைத்த பீடுடையவர்.

பாரதியார் ஆன்மீக நெறியில் ஆழ்ந்த உணர்வுமிக்கவ ராக விளங்கினார். விநாயகர், ஸரஸ்வதிதேவி, லக்ஷ்மிதேவி, முருகன், கண்ணன், ஞாயிறு, வெண்ணிலா, காளி, முத்துமாரி, மஹாசக்தி முதலிய கடவுளர்களைப் பற்றிய இறையுணர்வு பொங்கும் விழுமிய பாடல்களை இயற்றினார். அவை ஆன்மீக நெறியாளர்களுக்கு மன அமைதியும் ஆறுதலும் அளிப்பதுடன் சமுதாய நன்மையை வேண்டியும் பரந்த மனப்பான்மையுடன் பாரதியாரால் பாடப்பெற்றவை என்னும் உண்மையையும் அறிய முடிகிறது.

## 1. விநாயகர் நான்மணி மாலை:

'விநாயகர் நான்மணிமாலை' என்னும் தலைப்பில் அமைந்த பாடல்களுள் விநாயகக் கடவுளை முழுமுதற் கடவுளுக்குரிய தகுதியுடையவராகப் பாரதியார் போற்றுகிறார்:

''வையந் தனையும் வெளியினையும்
வானத்தையுமுன் படைத்தவனே!'' (பாடல்: 3)

என்று பாரதியார் விளிக்கிறார். உலகத்தையும் வெளியினையும் வானத்தையும் முன்னதாகப் படைத்தவன் விநாயகன் என்பத னால், அனைத்தும் உருவாவதற்கு அவன் அடிப்படை அமைத்த கடவுள் ஆகிறார். ''படைப்புக்கு இறைவன்'' என்றும் குறிப் பிடப் பெறுகிறார் விநாயகர்.

கணபதியின் திருத்தாள்களை உள்ளத்தில் வைத்தால், விளையும் நன்மைகளையும் சொல்கிறார் பாரதியார். அவை:

''உட்செவி திறக்கும்; அகக்கண் ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை வலியுறும்;
திக்கெலாம் வென்று ஜயக்கொடி நாட்டலாம்;
கட்செவி தன்னைக் கையிலே எடுக்கலாம்;
விடத்தையும் நோவையும் வெம்பகை யதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலாதிங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற் றோங்கலாம்;
அச்சந் தீரும்; அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி யோங்கும்;
அமரத் தன்மையு மெய்தவும்
இங்குநாம் பெறலாம்; இஃதுணர் வீரே''.

(பாடல்: 4)

விநாயகரிடம் வரங்கள் அளிக்குமாறு வேண்டுகிறார்; பாரதியாரின் விழைவு உலக நன்மையைக் கருதியதாக அமைந்துள்ளது. இத்தகைய இறையுணர்வு பிறர்நலம் கருதும் பொது நோக்கமாகிறது; தான்மட்டும் வர்ழ வரம் வேண்டாமல் உலகம் வாழ வரம் வேண்டுதல் என்பது பாரதியாருடைய பரந்த உள்ளத்தைக் காட்டுகிறது.

''எனக்கு வேண்டும் வரங்களை
யிசைப்பேன் கேளாய் கணபதி
மனத்திற் சலன மில்லாமல்,
மதியி லிருளே தோன்றாமல்,
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந்திடநீ செயல்வேண்டும்
கனக்குஞ் செல்வம் நூறுவய
திவையுந் தரநீ கடவாயே''

என்று மனம் சலனமின்றி அமைதியாகவும் மவுனநிலை அடையவும் நூறுவயதுவரை வாழவும் கனத்த செல்வம் அருளவும்

விரும்பி வரம் வேண்டுகிறார். இந்த விழைவுகள் பிறர் நலனுக்கு உதவுவதற்காக அமைவன.

நான்கு கடமைகளைக் குறிப்பிடுகிறார்; அவை:

''பிறர்துயர் தீர்த்தல், பிறர்நலம் வேண்டுதல்,
விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்,
நாரா யணனாய், நதிச்சடை முடியனாய்,
பிறநாட் டிருப்போர் பெயர்பல கூறி,
அல்லா! யெஹோவா! எனத்தொழு தன்புறும்
தேவருந் தானாய், திருமகள், பாரதி,
உமையெனுந் தேவிய ருகந்தவான் பொருளாய்
உலகெலாங் காக்கு மொருவனைப் போற்றுதல்,
இந்நான் கேயிப் பூமியி லெவர்க்கும்
கடமை யெனப்படும்'' (பாடல் 8

என்னும் பாடல் பகுதியில், 1. பிறர்துயர் தீர்த்தல், 2. பிறர்நல வேண்டுதல், 3. விநாயக தேவனாகவும் முருகனாகவும் நாராயண னாகவும் சிவபெருமானாகவும், பிறநாட்டார் 'அல்லா' எனவு 'யெஹோவா' எனவும் வணங்கும் தேவனாகவும், 4. திருமக யும் கலைமகளையும் உமையையும் உகந்த உயர்ந்த பொ ளாக உலகம் அனைத்தையும் காக்கும் ஒருவனைப் போற்றுத ஆகிய இவை நான்கே பூமியில் எவர்க்கும் கடமை என் பாரதியார் விளக்கியுள்ளார்.

இதன்மூலம் உலக மக்கள் இறைவனைப் பல பெய களாலும் பல வடிவங்களாலும் தொழுதலும், அவன் ஒருவே என்னும் உண்மையைக் கூறி உலக மக்களிடையே வேற்றுமை இல்லை என்பதனை ஆன்மீக அடிப்படையில் விளக்கியுள்ளா

துறந்தார் திறமை பெரிது என்று கருதும் பாரதியா ''இங்குக் குறைந்தாரைக் காத்து எளியார்க்கு உணவு ஈந்து கு மகளும் அறந்தாங்கும் மக்களும் நீடுழி வாழ்க என அண் மெலாம் சிறந்தாளும் நாதனைப் போற்றிடும் தொண்டர் செயு

தவமே'' என்று, செல்வத்திலும் சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளாரையும் (குறைந்தாரை) காப்பாற்றி ஏழைகளுக்கு (எளியர்) உணவு அளித்துக் குலமகளும் அறந்தாங்கும் மக்களும் நீடூழி வாழ்க! என்று இறைவனைப் போற்றும் தொண்டர் செய்யும் தவமே பெரிது என்கிறார்.

இறைவனை வேண்டுவதும் உலக நன்மைக்காகவே என்பது பாரதியார் கருதிய இறைவழிபாட்டு நெறியாகும்.

மேலும் பாரதியார் விநாயகரை,

''அஞ்சேல் என்று சொல்லுதியே!'' என்றும்,

''ஓமெனும் பொருளை யுளத்திலே நிறுத்தி,
சக்தியைக் காக்குந் தந்திரம் பயின்று,
யார்க்கும் எளியனவாய், யார்க்கும் வலியனாய்,
யார்க்கும் அன்பனாய், யார்க்கு மினியனாய்
வாழ்ந்திட விரும்பினேன்; மனமே! நீயிதை
ஆழ்ந்து கருதியாய்ந்தாய்ந்து, பலமுறை
சூழ்ந்து, தெளிந்து, பின் சூழ்ந்தார்க் கெல்லாம்
கூறிக் கூறிக் குறைவறத் தேர்ந்து,
தேறித் தேறிநான் சித்திபெற்றிடவே
நின்னா லியன்ற துணைபுரி வாயேல்,
பொன்னா லுனக்கொரு கோயில் புனைவேன்''.

(பாடல்: 12)

என்று வேண்டுகிறார்.

கவலை, வஞ்சனை, இரவு, புலைமை விருப்பம், ஐயம் ஆகியவற்றை வரத்தால் நீங்கப்பெற்ற பிறகு தமக்குத் தேவர்களும் நிகரல்லர் எனப் பாரதியார் கருதுகிறார். தேவர் நிலைக்கு உயர்த்துதற்குத் தீய எண்ணங்களை நீக்க வரம் வேண்டியே,

''வரமே நமக்கிது கண்டீர் கவலையும் வஞ்சனையும்
கரவும் புலைமை விருப்பமு மையமுங் காய்ந்தெறிந்து
சிரமீ தெங்கள் கணபதி தாண்மலர் சேர்த்தெமக்குத்
தரமேகொல் வானவர் என்றுளத் தேகளி சார்ந்ததுவே''

(பாடல். 14)

என்று பாரதியார் பாடுகிறார்.

இயற்கைப் பொருள்களாலும் துன்பம் உண்டு; அத்துன்பத்தை விநாயகர் நீக்குவார் என்னும் நம்பிக்கையில்,

''நிழலினும் வெயிலினும் நேர்ந்த நற்றுணையாய்த்
தழலினும் புனலிலு மபாயந் தவிர்த்து
மண்ணினுங் காற்றினும் வானினு மெனக்குப்
பகைமையொன் றின்றிப் பயந்தவிர்த் தாள்வான்''.

*(பாடல் 16)*

என்கிறார்.

தீப்பற்றி வீடுகள் எரிதல், வெள்ளத்தில் ஏற்படும் அழிவுகள், மண்ணினால் அடையும் பகைமையாகிய பூகம்பம், எரிமலைக் கனல் பிழம்புகள், புயல்காற்று, வானில் கோள்களினால் ஏற்படும் துன்பங்கள் ஆகியவற்றை எண்ணி, விநாயகர் அத்தகைய துன்பங்களை இல்லாமல் செய்து, அச்சத்தைப் போக்க வேண்டும் என வேண்டும் பாரதியார் நெஞ்சம், உலகத்துக்கு இறைவன், துன்பம் வராமல் - இயற்கையினால் நேரும் பகைமைகளைப் போக்க வேண்டும் என்னும் எல்லா உயிர்களுக்கும் நலம் வேண்டும் அருள் நெஞ்சம் என்பதனை உணர முடிகிறது. இத்தகைய உயர்ந்த உள்ளத்தை இறைஉணர்வு உருவாக்குகிறது.

விநாயகப் பெருமான் அனைத்துக் கடவுளரின் ஒட்டுமொத்த வடிவம் என்பதனை விளக்கும் வரிகள் வருமாறு:

''இறைவி இறைவ னிரண்டு மொன்றாகித்
தாயாய்த் தந்தையாய்ச் சக்தியும் சிவனுமாய்

உள்ளொளி யாகி யுலகெலாந் திகழும்
பரம்பொரு ளேயோ! பரம்பொரு ளேயோ!
ஆதி மூலமே! அனைத்தையுங் காக்கும்
தேவ தேவா! சிவனே! கண்ணா!
வேலா! சாத்தா! விநாயகா! மாடா!
இருளா! சூரியா! இந்துவே! சக்தியே!
வாணீ! காளீ! மாமக ளேயோ!
ஆணாய்ப் பெண்ணாய் அலியாய் உள்ள
தியாதுமாய் விளங்கு மியற்கைத் தெய்வமே!
வேதச் சுடரே! மெய்யாங் கடவுளே!'' (பாடல்: 20)

*இத்தகைய விநாயகக் கடவுளிடம்,*

''நோவு வேண்டேன்; நூறாண்டு வேண்டினேன்;
வேண்டா தனைத்தையு நீக்கி
வேண்டிய தனைத்தும் அருள்வதுன் கடனே''

(பாடல்: 20)

*என வேண்டிக்கொள்கிறார்.*

*கணபதியை 'ஆன்மா' எனவும் அவன் அருளால் அச்ச மில்லை எனவும் உணர்த்துகிறார்:*

''ஆன்மா வான கணபதியின்
அருளுண் டச்ச மில்லையே'' (பாடல் வரிகள்: 23)

*''உமாதேவிக்கு இனிய மகனாகிய கணபதி நம்முடைய குடியை வாழ்விப்பான்'' என்னும் நம்பிக்கையுடன், கவிதை இயற்றுதல், நாட்டிற்குத் தொண்டு புரிதல், இமைக்கும் நேரமும் சோர்வின்றி இருத்தல் ஆகிய இம்மூன்று செயல்களையும் செய்யுமாறு தம் மனத்திற்குக் கட்டளையிடும் பான்மையில்,*

''நமக்குத் தொழில் கவிதை நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதுஞ் சோராதிருத்தல்; - உமைக்கினிய

மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான்;
சிந்தையே! யிம்மூன்றுஞ் செய்''. (பாடல்: 25

*என்று நம்பிக்கையுடன் பாடுகின்றார் பாரதியார்.*

''பக்தி யுடையார் காரியத்திற்
பதறார்! மிகுந்த பொறுமையுடன்
வித்து முளைக்குந் தன்மைபோல்
மெல்லச் செய்து பயனடைவார்''.

*(பாடல்: 2*

*என்று பக்தியினால் ஏற்படும் நற்பயன்களைக் குறிப்பிடுகிறார்.*

*நாட்டில் உருவாகும் துயரங்களுக்கெல்லாம் அடிப்பை ஒவ்வொரு மனிதரின் மனத்தில் உள்ள மாசுகளேயாகும். உ ளத்தில் மாசாகிய பிழையின்றி, நல்ல மனத்துடன் அனைவரு விளங்கினால், உலகில் துயரங்கள் உருவாக மாட்டா. இத்தகை பிழை நீங்குதற்குத் தூய அறிவாகிய மதி வேண்டும், இத்தகை உணர்வுடன் பாரதியார்,*

''நாட்டினைத் துயரின்றி நன்கமைத் திடுவதும்
**உளமெனு நாட்டை யொருபிழை யின்றி**
ஆள்வதும், பேரொளி ஞாயிறே யனைய
**சுடர்தரு மதியொடு** துயரின்றி வாழ்தலும்
நோக்கமாக் கொண்டு நின்பதம் நோக்கினேன்''

*.(பாடல்: 2*

*என்று விநாயகரை வேண்டுகிறார்.*

*நாட்டைத் துன்பம் இல்லாமல் ஆக்குதல் புறத்தே காணப்பெறும் வளங்களாலும் அமைதியாலும் கண்கூடாக காணலாம். ஆயின், 'உள்ளம்' என்னும் நாடு பிழைஇல்லாம கட்டுப்படுத்தி ஆளப்பெற்றாலே தனிமனிதர் துயரின்றி வா முடியும். நாடுவதனால் - ஆராயும் தன்மையுடைமையா உள்ளம் 'நாடு' என்பதற்குரிய தகுதியைப் பெறுகிறது. நல்லது கெட்டதும் ஆராயப்பெறும் இடம் மனமே என்பதனா*

புறநாட்டினும் அகநாடு பிழையின்றித் தூயதாக எந்நேரமும் இடைவிடாது அமைய வேண்டும். ஞாயிறு - சூரியன் புறத்தே உலகங்கட்கு ஒளிசெய்வது; 'சுடர்மதி' அகத்தே - மன இருளை விலக்குவது; எனவே மன இருளை நீக்கும் சுடர்மதி - மெய்யறிவு மனத்துயரைப் போக்கி நாட்டுக்கும் நல்லது செய்ய ஒளிகாட்டும் தகைமையது. ''இவற்றைக் கருதி நின்திருவடிகளைக் கருதி னேன்'' என்னும் பொருளில் ''நோக்கமாகக் கொண்டு நின்பதம் நோக்கினேன்'' என்கிறார் பாரதியார்.

''பேசாப் பொருளைப் பேசநான் துணிந்தேன்;
கேட்கா வரத்தைக் கேட்கநான் துணிந்தேன்;
மண்மீ துள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு, மரங்கள் -
யாவுமென் வினையா லிடும்பை தீர்ந்தே
இன்பமுற் றன்புட னிணங்கிவாழ்ந் திடவே
செய்தல் வேண்டும், தேவ தேவா!
ஞானா காசத்து நடுவே நின்றுநான்
'பூமண் டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக, துன்பமு மிடிமையு நோவுஞ்
சாவுநீங்கிச் சார்ந்துபல் லுயிரெலாம்
இன்புற்று வாழ்க!' என்பேன்; இதனைநீ
திருச்செவிக் கொண்டு திருவுள மிரங்கி,
'அங்ஙனே யாகுக' என்பாய், ஐயனே!
இந்நாள், இப்பொழு தெனக்கிவ் வரத்தினை
அருள்வாய்; ஆதிமூலமே! அநந்த
சக்தி குமாரனே! சந்திர மவுலீ!
நித்தியப் பொருளே! சரணம்!
சரணம் சரணம் சரணமிங் குனக்கே'' (பாடல்: 32)

என்னும் தம் பாடல் வாயிலாகப் பாரதியாரின் இறையறிவும் பரந்துபட்ட தெய்வ உள்ளமும் வெளிப்படுகின்றன. கடவுளை வழிபடுகின்றவர்கள் பெரும்பாலோர் தங்கள் துன்பநீக்கத்திற் காகவும், மன அமைதிக்காகவும், செல்வ வளனைப் பெறுவதற் காகவும், வீடுபேறு கிடைக்க வேண்டும் என்பதற்காகவும்

மட்டுமே வேண்டி வழிபட்ட பல பாடல்களைப் படித்து
ளோம். ''இறைவனை வணங்குதல் இறைவனுக்காகவே'
என்னும் கோட்பாட்டுடன் ''வீடும் வேண்டா விறலின் விள
கினார்' என்று கூறி ஆன்மீகத்தில் பற்றற்று வாழ்ந்த வீரத்தன்மை
மிக்க அடியார்களும் வாழ்ந்துள்ளனர். ஆயின், பாரதியார் தமக்கு
வீடுபேறு கிடைக்க வேண்டும் என்பதற்காக இறைவனைக்
குறித்துப் பாடவில்லை; வேண்டவில்லை. மண் மீதுள்ள
மக்களேயல்லாமல், பறவைகள், விலங்குகள், பூச்சிகள், பு
பூண்டு, மரங்கள் அனைத்தும் தன் செயலால் துன்பம் நீங்கி
இன்பம் அடைந்து அன்புடன் இணங்கி வாழுமாறு செய்ய
வேண்டும் என்று அனைத்து உயிரினங்களின் நலத்துக்காகவு
வேண்டுகிறான். ''காக்கை குருவி எங்கள் சாதி'' என்று பறவை
யினத்தைத் தன் சாதியாக உறவு கொண்டாடிய பாரதி அனைத்து
இறைவனுடைய படைப்புகள் என்பதாலும், அனைத்து
இறைமைத் தன்மையுடையனவே என்னும் உண்மை
உணர்ந்ததாலும், எல்லா உயிரினங்களின் நலனையும் வேண்
விநாயகரிடம் கோரிக்கை வைக்கிறான். அன்பும் பொறுமையு
விளங்க வேண்டும் என்கிறான். துன்பமும் மிடிமையும் நோவு
சாவும் நீங்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான். தன் விரு
பங்களுக்கு இசைவுதரும் பாங்கில், விநாயகர், ''அங்ஙே
ஆகுக!'' என வரம் அளிக்க வேண்டும் என்றும் கோருகிறான்.

''நமக்கேன் பொறுப்பு? 'நான் என்றோர் தனிப்பொருள்
இல்லை; நானெனும் எண்ணமே வெறும்பொய்'
என்றான் புத்தன்; இறைஞ்சுவோ மவன்பதம்
இனியெப் பொழுது முரைத்திடேன், இதை நீ
மறவா திருப்பாய், மடமை நெஞ்சே!
கவலைப் படுதலே கருநர கம்மா!
கவலையற் றிருத்தலே முக்தி;
சிவனொரு மகனிதை நினக்கருள் செய்கவே''.

(பாடல்: 3

என்று ஆழ்ந்த ஆன்மீக உண்மைகளையும் உணர்த்துகிற
பாரதியார்.

பாரதியார் அன்பைச் சிறந்த தவமாகக் கொள்கிறார்.

''அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்
இன்புற்று வாழ்த லியல்பு'' (பாடல்: 37)

என்று அன்பினால் கிட்டும் இன்ப வாழ்க்கையைப் பற்றிக் கூறுகிறார்.

## தோத்திரப் பாடல்கள்:

'ஆறுதுணை' என்னும் தலைப்பில், கணபதி, பராசக்தி, முருகன், கலைமகள், கண்ணன், திருமகள் ஆகிய ஆறு தெய்வங்களை வணங்குவதனால் முறையே, 1. குணம் உயர்ந்திடுதல், 2. வல்லமை பெறுதல், 3. பகை நீங்குதல், 4. புண்ணியம் எய்தல், 5. இசையின்பம், 6. செல்வம் ஆகியன பெறலாம் என்னும் நன்மைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் பாரதியார்.

பக்தியினால் விளையும் நன்மைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் பாரதியார். **(தலைப்பு 2 பக்தி)**

**அவை:**

''சித்தந் தெளியும், - இங்குச்
செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்
வித்தைகள் சேரும், - நல்ல
வீரருறவு கிடைக்கும், மனத்திடைத்
தத்துவ முண்டாம், - நெஞ்சிற்
சஞ்சல நீங்கி உறுதி விளங்கிடும்.'' (பாடல் எண்: 1)

காமம் வீழ்த்தப்பெறும்; தமாஸப்பேய் மடியும்; தேம்பல் பிசாசு நீங்கும்.

ஆசை நீங்கும்; பாசம் அறும்; இன்பமும் புகழும் சேரும்.

சோர்வுகள் நீங்கும்; பொய்மை நீங்கிச் சுகம்பெறலாம்;

நல்ல பார்வைகள் தோன்றும்; மிடிமை நீங்கி நல்லவை சேரும்; செல்வங்கள் வரும்; பிணிதீரும். கல்வி வளரும்; காரியங்கள் கைகூடும்; வீரியம் ஓங்கும்; அல்லல் ஒழியும்; ஆண்மை உண்டாகும்; அறிவு தெளிவடையும்; பயன் நிறைந்த சொற்கள் விளையும்; உடல்வலிமை தோன்றும்; தெய்வ வாழ்க்கையடையலாம்.

சோம்பல் அழியும்; வீம்புகள் நீங்கும்; மேன்மையுண்டாகும்; பொய் நீங்கும்; நல்ல நெறிகள் உண்டாகும்.

சந்ததி வாழும்; வலிமைகள் சேரும். மேற்குறிப்பிட்ட நன்மைகளைப் பக்தியினால் அடையலாம் என்பது பாரதியாரின் நம்பிக்கையாகும்.

'சரஸ்வதி தேவியின் புகழ்' என்னும் தலைப்பில் அமைந்த பாடல்களின் வாயிலாகக் கலைமகளின் சிறப்புகளை உணர்த்தியுள்ளார் பாரதியார்.

கலைமகள் இருக்கும் இடங்களாக, வெள்ளைத் தாமரைப் பூ, வீணை ஒலி, பாவலர் உள்ளம், வேதம், முனிவர்களின் கருணை வாசகத்துட்பொருள் ஆகியன சொல்லப் பெற்றுள்ளன. *(பாடல்: 1)*

மற்றும், மாதர் பாடல், மழலைச் சொல், குயில் குரல், கிளியின் நாக்கு, சித்திரம், கோபுரம், கோயில் இவற்றின் எழில்கள் ஆகியவற்றிலும் கலைமகள் இருப்பாள் என்கிறார் பாரதியார்.

பொதுவாகக் கலைகளும் கலைநுட்பங்களும் அழகும் உள்ள எப்பொருளிலும் எவ்வுயிரிலும் கலைமகள் குடியிருப்பாள் என உணர வைக்கிறார்.

கலையுணர்வு வடிவமாகக் கலைமகளைக் காண்கிறார் பாரதியார் என்பது தெளிவாகிறது.

கலைமகள் யார் யாருக்குத் தெய்வமாகிறாள் என்பதனையும் பாரதியார்,

''வஞ்ச மற்ற தொழில்புரிந் துண்டு
வாழு மாந்தர் குலதெய்வ மாவாள்;
வெஞ்ச மர்க்குயிராகிய கொல்லர்
வித்தை யோர்ந்திடு சிற்பியர், தச்சர்,
மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்,
வீர மன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்ச மென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம்'' (பாடல்: 3)

*என்று பட்டியலிட்டுள்ளார்.*

*திருமகளை வேண்டும் போதும் உலகப் பொது நலனையே பாரதியாரின் மனம் நாடுகிறது. உலகில் இல்லை என்னும் கொடுமையை இல்லாமல் செய்ய வேண்டும் என்பது பாரதியின் பேராவலாக இருந்துள்ளது என்பதனை,*

''செல்வமெட்டு மெய்தி - நின்னாற்
செம்மையேறி வாழ்வேன்;
இல்லை என்ற கொடுமை - உலகில்
இல்லையாக வைப்பேன்;
முல்லை போன்ற முறுவல் - காட்டி,
மோகவதை நீக்கி,
எல்லை யற்ற சுவையே! - எனைநீ
என்றும் வாழ வைப்பாய்'' (பாடல்: 5)

*என்னும் அவரது பாடல் தெரிவிக்கிறது.*

*'நவராத்திரிப் பாட்டு' என்னும் தலைப்பில் சக்தியைப் பற்றிப் பாடும்போது,*

''சத்ய யுகத்தை அகத்தி லிருத்தித்
திறத்தை நமக்கருளிச் செய்யும் உத்தமி''

*என்று பாரதியார் போற்றுகிறார். சத்தியத்தால் அகம் தூய்மை*

யடைந்து திறம் உருவாகும் என்பது பாரதியார் உணர்த்தும் உண்மையாகிறது.

இராமபிரானிடம் வேண்டுவதாகப் பாடும் பாரதியார்,

**பல்லவி**

''சாகா வரமருள்வாய், ராமா!
சதுர்மறை நாதா! சரோஜபாதா!

**சரணங்கள்**

ஆகாசந் தீகால் நீர்மண்
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்
ஏகா மிர்த மாகிய நின்தாள்
இணைசர ணென்றால் இதுமுடி யாதா?'' (பாடல். 1)

என்று சாகாவரம் வேண்டுகிறார். இராமன் திருமால் அவதாரம் என்பதனால் முழுமுதற் கடவுளாகக் கொண்டு, ஆகாசம், தீ, காற்று, நீர், மண் ஆகிய ஐம்பூதங்கள் ஒட்டுமொத்தமாக நிறைந்தவன் என்று ஐம்பூதங்களின் வடிவமாக இறைவன் விளங்கும் கண்கண்ட தெய்வத்தன்மையைக் குறிப்பிடுகிறார்.

'கோவிந்தன் பாட்டு' என்னும் தலைப்பில் பாரதியார் பாடும்போது, ''காற்றிலும் பறவையிலும், மரத்திலும், மேகத்திலும், எல்லையற்ற வானவெளியில், கடலில், மண்ணில், வீதியில், வீட்டில் என எல்லாவற்றிலும், உன்னைக் கண்டு உன்னுடன் கலப்பது என்றோ?'' என்று ஏங்கும்போக்கு, எல்லாவற்றிலும் இறைவன் நீக்கமற நிறைந்திருக்கும் தன்மையைக் காட்டுகிறது.

''எளியனேன் யானெனலை எப்போது
போக்கிடுவாய், இறைவ னேயிவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே, வரம்பில் வான

வெளியிலே, கடலிடையே, மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா! நினைக் கண்டு
நின்னொடு நான் கலப்ப தென்றோ!'' (பாடல்: 2)

என்று அவனுடன் கலக்கும் நாள் எந்நாளோ என எண்ணி ஏங்கு கிறார் பாரதியார்.

''எத்தனை கோடி யின்பம் வைத்தாய்'' என்னும் பாடலில், இறைவனுடைய செயலை எண்ணி வியப்படைகிறார்.

சித்துடன் அசித்தை இணைத்தமை, அங்கு ஐம்பூதங்கள் சேரும் அகன்ற உலகம் அமைத்தமை, எல்லா உலகங்களும் வண்ணக் களஞ்சியங்களாகப் பற்பல அழகுகள் அமைத்தமை, வீடு பேற்று நிலையமைத்தமை, முழுதும் உணரும் உணர்வு அமைத்தமை, பக்திநிலை வகுத்தமை ஆகிய செயல்களை எண்ணி, ''பரமா! பரமா! பரமா!'' என்று களிநடம் புரிகிறார்.

''காளி ஸ்தோத்திரம்' என்னும் தலைப்பில் அமைந்த பாடல்களில், காளி எல்லாமாக இருப்பவள் என்னும் உண்மையை நிலைநாட்டுகிறார்.

''யாது மாகி நின்றாய் - காளீ!
எங்கும் நீ நிறைந்தாய்
தீது நன்மையெல்லாம் - நின்றன்
செயல்க ளன்றி யில்லை''

என்பதே பாரதியின் முடிவு.

''உள்ளமாகிய வெளியில், ஞானமாகிய சூரியன் ஏற வேண்டும்; மலைபோன்ற தோள்களும் மேருமலை போன்ற அழகிய வடிவமும், நல்லதை நாடும் மனமும் எந்த நாளும் அளித்தல் வேண்டும்; எதிலும் படிந்து வருந்தாத நெஞ்சம் வேண்டும்'' என்றும் காளியை வேண்டுகிறார்:

''என்ற னுள்ள வெளியில் - ஞானத்
திரவி யேற வேண்டும்;
குன்ற மொத்த தோளும் - மேருக்
கோல மொத்த வடிவும்,
நன்றை நாடு மனமும் - நீயெந்
நாளு மீதல் வேண்டும்;
ஒன்றை விட்டு மற்றோர் - துயரில்
உழலும் நெஞ்சம் வேண்டா''. (பாடல்: 4)

என்கிறார்.

காளியிடமிருந்து உலகுக்குப் பல நன்மைகள் புரிவதற்குரிய ஆற்றல்களைப் பெறமுடியும் என்றும் அவற்றைக் காளி தருவாள் என்றும் பாரதியார் நம்புகிறார். மனிதன் காளியின் அருளால் தெய்வ ஆற்றல்களைப் பெறமுடியும் என்பதனை உணர்த்தும் தன்மையில்,

''தானம் வேள்வி தவங் கல்வி யாவும்
தரணி மீது நிலைபெறச் செய்வேன்;
வானம் மூன்று மழைதரச் செய்வேன்
மாறிலாத வளங்கள் கொடுப்பேன்;
மானம் வீரிய மாண்மை நன்னேர்மை
வண்மை யாவும் வழங்குறச் செய்வேன்;
ஞான மோங்கி வளர்ந்திடச் செய்வேன்;
நான் விரும்பிய காளி தருவாள்''

என்று பாடுகிறார்.

பாரதியார் பராசக்தியை எல்லாம் வல்ல இறை வடிவமாகக் கருதியவர்; காளி, திருமகள், கலைமகள் அனைத்துமே பராசக்தியின் வெவ்வேறு கூறுகள்.

'மகாகாளியின் புகழ்' என்னும் தலைப்பில் அமைந்த பாடலில்,

''மேலுமாகிக் கீழுமாகி வேறுள திசையுமாகி
விண்ணு மண்ணு மானசக்தி வெள்ளம் - இந்த
விந்தையெல்லா மாங்கதுசெய் கள்ளம் - பழ
வேதமா யதன்முனுள்ள நாதமாய் விளங்குமிந்த
வீரசக்தி வெள்ளம்விழும் பள்ளம் - ஆக
வேண்டுநித்த மென்றனேழை யுள்ளம்''

மேல், கீழ், மற்றுமுள்ள திசைகள், விண், மண், ஆகிய அனைத்துமாக உள்ளது வீரசக்தியாகிய வெள்ளம். அற்புதங்கள் செய்வதாகவும், வேதமாகவும் அதன் நாதமாகவும் அது விளங்குகிறது. இத்தகைய வீரசக்தியாகிய வெள்ளம் விழும் பள்ளமாகத் தன் உள்ளம் இருக்க வேண்டும் எனப் பாரதியார் வேண்டுகிறார்.

''ஆதியாகவும் அநாதியாகவும் அகண்ட அறிவாகவும்'' உள்ளவள் மகாகாளி எனவும் ''நம் அறிவெல்லாம் அவள் மேனியில் ஒரு சைகை'' எனவும் பாரதியார், பராசக்தியின்றி எவ்வுயிரும் இல்லை எனவும் அனைத்துயிர்களும் அவளுள் அடக்கம் என்றும் நம்மை உணரவைக்கிறார்.

இன்பமும் துன்பமும் பராசக்தி புரியும் மாயை; அவள் மெய்ப்பொருளின் சாயை;

''ஆதியாஞ் சிவனுமவன் சோதியான சத்தியுந்தான்
அங்குமிங்கு மெங்குமுள வாகும் - ஒன்றே
யாகினா லுலகனைத்தும் சாகும் - அவை
யன்றியோர் பொருளுமில்லை, அன்றியொன்று மில்லையிதை
ஆய்ந்திடில் துயரமெல்லாம் போகும் - இந்த
அறிவுதான் பரமஞான மாகும்''

என்று சிவனும் சக்தியும், ஆணும் பெண்ணுமாக - அம்மையும் அப்பனுமாக விளங்கி உயிர்களின் தோற்றத்திற்கும் வாழ்வுக்கும் தொடர்ச்சிக்கும் அடிப்படைக் காரணமாகின்றனர். 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் திருவள்ளுவர் கருத்தும் பாரதி

யாருடைய இக்கருத்தும் ஒருமித்த கருத்துகளாகின்றன. இறைமை, படைப்புக்காக ஆணும் பெண்ணுமாக ஒருங்கே அமைந்துள்ள உண்மையைப் 'பராசக்தி' என்னும் பரம்பொருளை விளக்கு வதன் மூலம் நமக்கு எளிய முறையில் பாரதியார் விளக்கி யுள்ளார். பரமனும் சக்தியும் இரண்டறக் கலந்த பரம்பொருளின் வடிவமே பராசக்தி என உய்த்துணரலாம்.

இந்த அறிவு மேலான மெய்யுணர்வு என்பதனை, ''இந்த அறிவுதான் பரமஞான மாகும்'' என்கிறார் பாரதியார்.

கல்வியில் சிறந்த 'சூதகன்' என்னும் சிவனுக்கு நிகரான முனிவர் ஒருவர் சொல்வதாக ஒரு நிகழ்ச்சியை அரியதொரு நாடகக் காட்சியைப் போல் குறிப்பிடுகிறார் பாரதியார். இந் நிகழ்ச்சிக்குரிய பாக்களில் இறைவனது தன்மைகள் சிறப்பாகப் பேசப் பெறுகின்றன.

சூதகன் முனிவர்களைப் பார்த்துக் கூறுவதுதான் அந்தக் காட்சி! 'கோமதி மஹிமை' என்னும் தலைப்பில் வரும் பாரதியார் கவிதைப் பகுதியில் இடம்பெறுவது. சூதகன் உரை பாரதியாரின் கவிதைகள் வடிவில் கீழ்வருமாறு:

''வாழிய, முனிவர்களே! - புகழ்
வளர்ந்திடுஞ் சங்கரன் கோயிலிலே
ஊழியைச் சமைத்தபிரான், - இந்த
உலக மெலாமுருக் கொண்டபிரான்,
ஏழிரு புவனத்திலும் - என்றும்
இயல்பெறும் உயிர்களுக் குயிராவான்,
ஆழுநல் லறிவாவான், - ஒளி
யறிவினைக் கடந்தமெய்ப் பொருளாவான்.

(பாடல்: 2)

தேவர்க் கெலாந்தேவன், - உயர்
சிவபெரு மான்பண்டோர் காலத்திலே
காவலி னுலகளிக்கும் - அந்தக்
கண்ணனுந் தானுமிங் கோருருவாய்

ஆவலொ டருந்தவங்கள் - பல
ஆற்றிய நாகர்க ளிருவர்முன்னே
மேவிநின் றருள்புரிந்தான், - அந்த
வியப்புறு சரிதையை விளம்புகின்றேன். (பாடல்: 3)

கேளீர் முனிவர்களே! - இந்தக்
கீர்த்திகொள் சரிதையைக் கேட்டவர்க்கே,
வேள்விகள் கோடிசெய்தால் - சதுர்
வேதங்க ளாயிர முறைபடித்தால்,
மூளுநற் புண்ணியந்தான் - வந்து
மொய்த்திடும்; சிவனியல் விளங்கிநிற்கும்;
நாளுநற் செல்வங்கள் - பல
நணுகிடும்; சரதமெய் வாழ்வுண்டாம். (பாடல்: 4)

இக்கதை யுரைத்திடுவேன், - உளம்
இன்புறக் கேட்பீர், முனிவர்களே!
நக்கபி ரானருளால் - இங்கு
நடைபெறு முலகங்கள் கணக்கிலவாம்!
தொக்கன அண்டங்கள் - வளர்
தொகைபல் கோடிபல் கோடிகளாம்!
இக்கணக் கெவரறிவார்? புவி
எத்தனை யுளதென்ப தியாரறிவார்? (பாடல்: 5)

நக்கபி ரானறிவான்; - மற்று
நானறியேன், பிறரறியார்;
தொக்க பேரண்டங்கள் - கொண்ட
தொகைக்கெல்லை யில்லையென்று சொல்லுகின்ற
தக்கபல் சாத்திரங்கள்; ஒளி
தருகின்ற வானமொர் கடல்போலாம்;
அக்கட லதனுக்கே - எங்கும்
அக்கரை யிக்கரை யொன்றில்லையாம். (பாடல்: 6)

இக்கட லதனகத்தே - அங்கங்
கிடையிடைத் தோன்றும்புன் குமிழிகள்போல்
தொக்கன உலகங்கள் - திசைத்
தூவெளி யதனிடை விரைந்தோடும்;
மிக்கதொர் வியப்புடைத்தாம் - இந்த
வியன்பெரு வையத்தின் காட்சி கண்டீர்;
மெய்க்கலை முனிவர்களே! - இதன்
மெய்ப்பொருள் பரமசிவன் சக்தி, - கண்டீர். (பாடல்: 7)

எல்லையுண்டோ இலையோ! - இங்
கியாவர் கண்டார்திசை வெளியினுக்கே?
சொல்லுமொர் வரம்பிட்டால் - அதை
........................................... (பாடல்: 8)

*(இது முற்றுப்பெறவில்லை)*

சூதகன் என்னும் முனிவர் வாயிலாகச் சங்கரன் கோயில் என்னும் ஊரில் ஊழியைப் படைத்தான் இறைவன் என்பதும், இறைவன் உலகம் எல்லாவற்றையும் உருவமாகக் கொண்டவன் என்பதும் உயிர்களுக்கெல்லாம் உயிராக (பேரான்மாவாக) விளங்குபவன் என்பதும், அறிவு ஆவான் என்பதும், ஒளியறிவினைக் கடந்த மெய்ப்பொருள் என்பதும், உலகை அளித்தவன் என்பதும் சொல்லப்பெறுகின்றன.

கண்ணனாகிய திருமாலும் சங்கரனாகிய சிவனும் ஓருருவங்கொண்டு, பல தவங்கள் செய்த நாகர்கள் இருவருக்கு முன்பு, தோன்றி அருள் செய்தனர்.

''சூதகன், முனிவர்களைப் பார்த்து, இறைவனால் பல உலகங்கள் - கணக்கற்றவை இயங்குகின்றன; தொகைகளாக வளர்ந்த அண்டங்கள் பல கோடிகளாம்; எத்தனை என்பதனை எவரும் அறியார்'' எனவும்

''ஒளிதரும் வானம் ஒரு கடல் போன்றது; அக்கடலுக்குக் கரை ஒன்றும் இல்லை; தொகுதியான உலகங்கள் தூய வெளியாகிய திசையில் விரைவாக ஓடுகின்றன; இந்த அகன்ற பெரிய உலகத்தின் காட்சி வியப்பானது! இதன் மெய்ப்பொருள் பரம சிவன் சக்தி என்று அறிவீர்!'' எனவும், (பரந்திருக்கின்ற) வெளிக்குத் திசையை யார் கண்டார்கள்? எனவும் உலகங்களின் தோற்றத்தையும் அண்டங்களின் தோற்றத்தையும் பற்றிய வரலாற்றைப் பாரதியார் வியப்புறும் வண்ணம் உணர்த்தியுள்ளார். இவ்வாறு அண்டங்கள், உலகங்கள் பற்றியும், தோற்றுவித்த கடவுள் பற்றியும் ஆய்ந்தறியும் அறிவு ஆன்மீக உணர்வாகிறது. இம்மெய்ப்பொருளை நுணுகி ஆய்ந்த பாரதியாரின் மெய்யறிவு வியக்கத்தக்க முறையில் சிறந்ததாக அமைந்துள்ளது.

பாரதியார் ஆண்டவன் படைத்த அண்டங்களின் எல்லையைப் பற்றிப் பாட எண்ணியவர், அப்பாடலை முடிக்கவில்லை; அண்டங்கள் இருக்கும் வெளியினுக்குத் திசைகள் கூறி எல்லை அமைத்தால் இறைவனை முழுமையாக அறிய முடியுமோ? என்னவோ? மெய்ப்பொருளாகிய இறைவன் இயல்பை முழுமையாக யாராலும் கண்டு அறிவிக்க முடியாது என்னும் எண்ணத்தில்,

''யாவர் கண்டார் திசை வெளியினுக்கே?
சொல்லுமோர் வரம்பிட்டால் - அதை
..............................................''

என்று முடிக்காமல் கவிதையை நிறுத்திவிட்டார் என்றே எண்ணத் தோன்றுகிறது. உலகில் சூழ்ந்துள்ள கடலுக்கு எல்லையுண்டு; திசையும் உண்டு; ஆயின் உலகங்களின் தொகுதிகளையும் அண்டங்களின் தொகுதிகளையும் அளவிடமுடியாதபடி கொண்டிருக்கும் வான வெட்டவெளிக்குத் திசையில்லை; எல்லையும் இல்லை; இத்தகைய இயல்பு இறைவனுக்குரிய இயல்பாகும்.

இவ்வாறு மேலும், இறையுணர்வு பற்றிய ஆன்மீகக் கோட்பாடுகளைத் தம் பாடல்கள் வாயிலாகப் பாரதியார் வெளியிட்டுள்ளார். அவருடைய ஆன்மீக நெறி மனிதநேயத்துக்கு மட்டுமேயல்லாமல் அனைத்துயிர்களின் மீதும் அன்பு கொள்ளத் தூண்டுகிறது; எங்கெங்கும் இறைமை உள்ள உண்மையை உணர்த்துகிறது. வேற்றுமைகளை மறந்து உலகத்துயிர்களைப் பாசமுடன் நோக்கி இன்புறும் பேரன்பு நிலைக்குப் பாரதியாரின் இறையுணர்வுக் கோட்பாடு நம்மை இட்டுச்செல்கிறது.

★ ★

## 13. ஆன்மீக அலைகள்

மெய்யுணர்வாகிய ஆன்மீகம் பேரான்மாவை - இறைவனை உணர ஆயும் பேரறிவாகும். 'மெய்யறிவு' எனவும், 'நிலையான அறிவு' எனவும், 'ஆன்ம உணர்வு' எனவும் 'ஆன்மீகம்' என்பதற்குப் பொருள் கொள்ளலாம். 'ஆன்மா' நிலையானது; அதனைப் பற்றிய தேடல்கள் அல்லது அறிய முயலும் முயற்சிகள் தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றன; 'அலைகள்' ஆடாமல் அசையாமல் நகராமல் இருப்பதில்லை. நமக்கும் மேற்பட்ட பேராற்றல் உள்ளது எனவும் அதனையே இறை, இறைவன், சிவன், திருமால், ஆதிபகவன், அருகன், அல்லா முதலிய பெயர்கள் சூட்டி அழைத்து வருகிறோம். நேரில் கண்டறியவும், உணரவும் முயன்றுவரும் ஆன்மீக உணர்வாளர்கள் அன்று தொட்டு இன்றுவரை தொடர்ந்து தோன்றிய வண்ணம் உள்ளனர். இறைவனை நம்பி அவன் அருளையும் பாதுகாப்பையும் பெறவிரும்பி வணங்குபவர்கள் 'அடியார்கள்' எனவும் 'பக்தர்கள்' எனவும் 'இறையன்பர்கள்' எனவும் குறிக்கப்பெறுவர். இத்தகைய ஆன்மநேயர்கள் இறைவனை உணர முயலும் முயற்சிக்கு என்றும் இடைவெளி இருந்ததில்லை; கடல் அலைகளைப்போல் உலகின் பல பகுதிகளில், நாடு, மொழி, இனம், சமயம் கடந்த நிலையில் ஆன்மீக உணர்வு அனைத்து மக்களுக்கும் தொடர்ந்து நிலவிவருகிறது. எனவே, ஆன்மாவை உணரும் முயற்சிகளை 'ஆன்மீக அலைகள்' என்று குறிப்பிடலாம்.

பேரான்மாவாகிய இறைவன் கடலைப் போன்றவன்; அவனிடமிருந்து தோன்றும் ஆன்மாக்கள் அலைகளைப் போன்றவை. அலைகளுக்குத் தனி இடம் இல்லை; உலகம் முழுதும் சூழ்ந்துள்ள கடலின் கூறுகளாகவே அலைகள் உள்ளன.

கடலிலிருந்து நீர் ஆவியாகி, மேகமாகி மழையாகப் பொழிகிறது. அம்மழை நீர் வெள்ளமாகி, உயரிய மலைகளில் அருவியுமாகி வீழ்ந்து, ஆறாகிச் சமவெளிகளில் நிலத்தில் ஓடி

இறுதியில் கடலில் கலக்கிறது; கலக்கும்போது, தான் வேறு, கடல்வேறு என்னும் வேறுபாடு இல்லை. ஆறு என்னும் பெயர் மறைந்து கடல்நீராகவே கலந்து விடுகிறது. உலகத்து உயிர்களும் ஆறுகளைப் போன்றவை; ஆற்றுநீர் முதலில் கடல்நீரிலிருந்தே அடிப்படைத் தோற்றமும் பல மாற்றங்களும் பெறுகிறது. உயிர்களும், தாவரங்கள், பறவைகள், விலங்குகள், மக்கள், புழுவினம் முதலிய பெயர்களைப் பெற்றுப் பல வடிவங்களில் தோற்றம் பெறுகின்றன. மூப்படைந்து உயிர் பிரிந்தபிறகு, உயிராகிய ஆன்மா மீண்டும் பேரான்மாவாகிய இறைவனை அடைகின்றன என்பது ஆன்மீகக் கோட்பாடு.

வினைகளுக்கு ஏற்ப மறுபிறவிகளும் ஆன்மாக்கள் - உயிர்கள் அடைகின்றன என்றும் கூறப்பெறுகிறது. சிலப்பதி காரம், திருக்குறள் முதலிய நூல்கள் வாயிலாக மறுபிறப்பு உண்மையை அறிய முடிகிறது. கடலிலிருந்து பிரிந்து, பின்னர் மழையாகி ஆறாகிப் பல இடங்களில் நிலைகொள்ளும்போது அருவி, ஏரி, குளம், சுனை, குட்டை, நீரூற்று முதலிய அமைப்பு களையும் வடிவங்களையும் அடைதல்போல், உயிரும் பல பிறவிகள் எடுத்து, ஊர்வன, பறப்பன முதலிய இனங்களில் பல பெயர்களையும் வடிவங்களையும் அடைந்து பொருந்து கின்றது.

உயிரோடு, அது எடுக்கும் பிறவியையொட்டிச் செய்யப் பெறும் வினைகள் பொருந்தி, அடுத்துவரும் பிறவிகளில் உரிய விளைவுகள் அடைகின்றன எனவும் இலக்கியங்கள், புராணங் கள், காப்பியங்கள், அறநூல்கள் முதலியவற்றில் சொல்லப் பெற்றுள்ளது.

'ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
**எழுமையும்** ஏமாப்பு உடைத்து' (குறள். 398)

என்னும் குறள் இந்த உண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகிறது. 'எழுமை', 'ஏழு பிறவிகள்' என்னும் பொருள் கொண்டது.

''உறங்குவது போன்றது சாக்காடு; உறங்கி
விழிப்பதைப் போன்றது பிறப்பு'' என்னும் கருத்தில்

''உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு'' (குறள். 339)

என்னும் குறள் அமைந்துள்ளது. இதனை எண்ணுமிடத்துச் சாவினால் உயிர் உடலைவிட்டு நீங்கும் என்பதும், பிறப்பின்போது உயிர்தோன்றும் என்பதும் கருத்தாக இருப்பினும், தாய்க் கருப்பையில் உடல் உருவாகும் தொடக்கத்திலேயே உயிர்பொருந்தி, உடலின் இயக்கமும் தொடங்கி விடுகிறது என உணரலாம்.

உடலை விட்டு உயிர் பிரிதல் என்பது குடம்பை தனித்து ஒழியப் பறவை அதனை விட்டுப் பறந்து செல்வதனைப் போன்றது என, ஆன்மா உடலை விட்டு நீங்கும் செயலைத் திருவள்ளுவர் உவமை நயத்துடன் விளக்கியுள்ளார்.

முற்பிறவியுணர்வுடன் சிலர் பிறந்து, முற்பிறவியில் தம் பெயர் என்ன என்பதனையும் எங்கு வாழ்ந்தோம் என்பதனையும் எதனால் சாவு நேர்ந்தது என்பதனையும் முற்பிறவியில் தம் பெற்றோர் யாவர் முதலிய உண்மைகளையும் சொல்லும் அற்புதங்களும் நடக்கின்றன.

ஒருவர் மற்றொருவர் வருகையை, அதாவது தன் நண்பரோ, பெற்றோரோ தன்னிடம் வருவார் என்பதனை மனத்தால் உணரக்கூடிய ஆற்றலும் ஆன்மாக்களுக்கிடையே இருப்பதாகச் சிலர் கூறுகின்றனர்.

ஓரிடத்தில் நடந்த நிகழ்ச்சியை மற்றோரிடத்தில் இருக்கும் ஒருவர், எந்தக் கருவியின் துணையும் இல்லாமல் உள்உணர்வினால் - மனத்தால் அறியக்கூடிய ஆற்றலும் ஆன்மாவுக்கு உண்டு எனச் சொல்லப்பெறுகிறது.

பிற்காலத்தில் நடக்கக் கூடியவற்றை முன்கூட்டியே

கனவுகளின் வாயிலாகவும் அறியக்கூடிய அற்புத ஆற்றல் சிலருக்கு உள்ளது.

ஆந்திராவில் சித்தூர் மாவட்டத்தைச் சார்ந்த நாராயண வனத்தில் பல ஆண்டுகள் வாழ்ந்த சுரைக்காய்ச்சித்தர் என்னும் மகான், வேலூரில் வாழ்ந்த தோபா சாமியார் இறந்தபோது, அவ பெயரைக் கூறி அவர் இறந்துபட்டதாக அழுதுகொண்டே கூறியதாக, அவரிடம் இருந்த அவருடைய வேலூரைச் சார்ந் சீடர் ஒருவர் கூறியுள்ளார். பிறகு, அந்நிகழ்ச்சி சுரைக்காய்ச்சித்த கூறிய அதேநேரத்தில் நடந்தது உண்மை எனவும் அறிவி துள்ளனர்.

நாராயணவனத்தில் ஒரு வீட்டில் வயிற்றுவலியா துடித்துக் கொண்டிருந்த எருது ஒன்றின் துன்பத்தை வேறோ இடத்தில் இருந்த சுரைக்காய்ச்சித்தர் உணர்ந்து, எருதை நாடிச்சென்று தம் சுரைக்குடுவையிலிருந்து உணவை எடுத் ஊட்டி அதன் வலியைப் போக்கினார் என்பதும் வியக்கத்தக் சுரைக்காய்ச்சித்தரின் அற்புதமான ஆன்ம உணர்வேயாகும்.

அமெரிக்காவில் பல்கலைக்கழகம் ஒன்றில் மறுபிற பற்றிய ஆய்வு நடைபெறுவதாகவும் கூறப்பெறுகிறது.

தற்கொலை, விபத்து முதலியவற்றால் இடையில் உயி துறப்பவர்களின் ஆன்மாக்கள் ஆவிகளாகத் திரிவதாகவு சொல்லப்பெறுகிறது. தமிழ்ப் பேரறிஞர் மறைந்த மறைமலை யடிகளார் ஆவிகளுடன் பேசமுடியும் என்பதனை நம்பியவ அதற்குரிய நூல் ஒன்றனையும் அவர் இயற்றியுள்ளார்.

எண்ணும் எண்ணங்கள், செய்யும் கற்பனைகள், இன் துன்பங்கள், கனவு நிலைகள் முதலிய உணர்வுகள் ஆன்ப வினால் விளையும் உணர்வுகளே என உய்த்துணர வேண் யுள்ளது. இடம், காலம், முதலிய சூழல்களால் அவற்றிற்கேற் எண்ணங்கள் நமக்குத் தோன்றுகின்றன. எனினும், அவ்வெ ணங்கள் அல்லது கற்பனைகள் எவ்வாறு தோன்றுகின்றன? இ உண்மையை அறிய முடியவில்லை; உயிரற்ற வெற்றுடம்பா

எதனையும் உணரஇயலாது என்னும் உண்மையைக் கொண்டு, உயிராலேயே உடல் இயக்கமும் எண்ணங்களும் உருவாகின்றன என உய்த்துணர முடிகிறது.

இத்தகைய தன்மைகளையும் ஆற்றல்களையும் கொண்டுள்ள ஆன்மா தூய்மையாக விளங்கும்போது கடவுள் தன்மையை - உயரிய நிலையை அடைகிறது. ஆன்மத்தூய்மை அல்லது உணர்வுத் தூய்மையாலேயே நல்லறச் செயல்கள் நடைபெறுகின்றன. எனவே, ஆன்மா அறச்செயலுக்குரியதாகவே இயங்கும்போது கடவுள் தன்மையை அடைகிறது; நல்ல எண்ணத்தால் வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வநிலையையடையலாம் என்னும் உண்மையைத்தான்,

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்''. (குறள் எண்: 50)

என்று வள்ளுவரும் குறிப்பிட்டுள்ளார்.

இறைவனை - பேரான்மாவாகிய கடவுளை வள்ளுவர், 'அற ஆழி' எனக் குறிப்பிட்டதும் ஆன்மீகத் தன்மையை நன்கு உணர்ந்ததனால்தான் எனலாம். 'அறக்கடல்' என்னும் பொருளிலேயே 'அறஆழி' என்னும் தொடர் அமைந்துள்ளது. அலைகள் கடலிலிருந்து எழுவதாயினும் அவை கடல்நீரின் தொடர்பைக் கொண்டுள்ளன; ஒட்டுமொத்தமான பெரும் பரப்பைக் கொண்ட நீருக்குக் 'கடல்' என்று பெயர் அமைய, அதன் நீராலேயே அமையும் அலை நீருக்கு மட்டும் 'அலைகள்' என்று பெயர் மாறுபடுகிறது. கடலின் தன்மை, ஆழ்ந்து அகன்ற அமைதியான தன்மை; ஆனால், அதிலிருந்து எழும் அலையின் தன்மை மேலோட்டமானது; ஆரவாரமானது; அதனைக் காற்று முதலிய புறப்பொருள்கள் ஆட்டிப்படைத்து ஆரவாரமுடையதாக மாற்றுகின்றன. இவ்வாறே இறைவன் பற்றற்றவனாக எங்கும் பரவி விளங்க, ஆன்மாக்கள் பல பிறவிகளும் வடிவங்களும் எடுத்து அமைதியின்றி அல்லல் அடைகின்றன. கடல் அலைகள் ஓய்வதில்லை; ஆன்மாக்களுக்கும் ஓய்வில்லை. அலைகள் முன்பும் பின்புமாக அலைந்து உருண்டுகொண்டே

இருப்பதனைப்போல், ஆன்மாக்களும் பிறவிக்குப் பின் பிற
கள் எடுத்து, முற்பிறவியிலும் அடுத்த பிற்பிறவிகளிலும் அ
கின்றன.

கடலுக்குள்ளும் பல உயிரினங்கள் வாழ்கின்றன; புற
திலும் (நிலத்திலும்) பல உயிரினங்கள் வாழ்கின்றன; கட
தனித்து இல்லை; நிலத்தில் ஊடுருவிப் படர்ந்து உள்ளது; உலக
வெளியில் - விண்ணில் சுழல்வதனால் கடலும் விண்ணில்தா
உலகத்தோடு பொருந்தி உள்ளது. இறைவன் தனித்து ஒ
இடத்தில் மட்டும் இல்லை; அவன் எங்கும் எல்லா உயிர்களி
உயிராக உள்ளான். கடலால் உயிரினங்கள் வாழ்கின்றன; கட
ளால் உயிர்கள் வாழ்கின்றன. பஞ்சபூதங்களில் ஒன்று நீ
அந்நீரின் பெரும்பரப்பே கடல்; பஞ்சபூதங்களின் ஒட்
மொத்தமாக இறைவன் திகழ்கிறான். எனவே, கடல் மட்டுமே
நீர் மட்டுமே பல உயிர்களுக்கு வாழ்வளிப்பது உண்மை; ''நீரின்
அமையாது உலகு'' என வள்ளுவர் உணர்த்திய உண்மை, ''உ
குக்கு-உலகத்து உயிர்களுக்கு நீர் இன்றியமையாதது'' என்னு
உண்மை, நீரும் ஆக இருக்கும் கடவுள் உயிர்களுக்கு இன்
யமையாதவன் என்னும் உண்மைக்குப் பொருந்துவதே. ஆன்மா
களுக்கு இன்றியமையாதவன்; அவன் ஆன்மாக்களுக்கெல்லா
மேலான ஆன்மாவாக - பேரான்மாவாக நிலைத்துள்ளான்.

அலைகள் கடலின் உண்மையை உணர்த்துதல்போல்
ஆன்மாக்கள் கடவுளின் - மெய்ப்பொருளின் உண்மையை நிலை
நாட்டிப் பல் உயிர்களாக வடிவெடுத்து உலகில் நிலவுகின்றன.

மெய்யுணர்வாளர்களாகிய திருவள்ளுவர், இளங்கே
வடிகள், திருமூலர், சேக்கிழார், கம்பர், தாயுமானவர், பட்டினத்
அடிகளார் பாரதியார் முதலிய சான்றோர்கள் இறைமையி
உண்மையை உணர்த்திய ஆன்மீகச் செல்வர்கள் ஆவர்; அவர்க
உணர்த்திய இறையுணர்வு விதைக்கும் ஆன்மீகச் செய்திக
**ஆன்மீக அலைகளாக** என்றென்றும் உலகில் வீசிக்கொண்டே
இருப்பனவாம்.

**(முற்றிற்று)**